கவிதா வெளி

# காஞ்சிமாநகர்



வித்துவான்

நாராயணவேலுப்பிள்ளை

# காஞ்சி மாநகர்


**வித்துவான் M. நாராயண வேலுப்பிள்ளை**

**ஓய்வு பெற்ற தமிழாசிரியர்**





**கவிதா பப்ளிகேஷன்**

தபால் பெட்டி எண்.: 6123

8, முத்துகிருஷ்ணன் தெரு, பாண்டிபஜார்

தி. நகர், சென்னை-600 017.

# முன்னுரை

காஞ்சி மாநகர் சரித்திர காலத்திற்கு முன்பே தோன்றி இன்றுவரை சீரும் சிறப்புமாய் விளங்கி வருகிறது. புராண இதிகாசங்களிலும் சைவ, வைணவ, பௌத்த, சமண காவியங்களிலும் இந்நகர் சிறப்பிக்கப்பட்டுள்ளது.

'நகரேஷு காஞ்சி' என்று காளிதாசர் புகழ்ந்துள்ளார். சிவநேசச் செல்வர்கள், 'கல்வியில் கரையிலாக் காஞ்சி' என்று பாராட்டுகிறார்கள். கோயில்களுள் 'பெருமாள் கோயில்' என ஆசாரியர்களால் பரம சீலத்துடன் அழைக்கப்படுகிறது.

பல்லவர்களுக்கும் சோழர்களுக்கும் இது தலைநகராக விளங்கியது. பின்னர் விஜய நகர மன்னர்கள் இதைக் கைப்பற்றி உயர்ந்த கோபுரங்களையும், மண்டபங்களையும் அழகுற அமைத்தனர். இந்நகர் ஸ்ரீ பீடமான காமகோடி பீடம் விளங்கும் பெருமை பெற்றது. காமாட்சி அம்மன் அருள் ஆட்சி செய்வதும் இந்நகரிலேதான்.

இந்நூல் ஏழு அத்தியாயங்களாகப் பிரிக்கப்பட்டு இந்நகரின் சிறப்பு விவரிக்கப்படுகிறது. அப்பிரிவுகளாவன: அறிமுகம், காஞ்சி மாநகர், இலக்கியங்கள், திருக்கோயில்கள், சங்கர மடம், சமயத் தத்துவங்கள், தெய்வீகச்சபைகளும் சேவை நிலையங்களும் என்பனவாம்.

திருமலை திருப்பதி தேவஸ்தானத்தாரின் பொருளுதவி பெற்று இந்நூல் பதிப்பிக்கப்பட்டது. பலரும் படித்துப் பயன்பெறுவார்களாக.

காஞ்சிபுரம்
12-10-90

**M நாராயண வேலுப்பிள்ளை**
ஓய்வு பெற்ற தமிழாசிரியர்

# பொருளடக்கம்

# அறிமுகம்

## தோற்றுவாய்

நம் நாட்டில் காவியங்கண்ட நகரங்களுள் காஞ்சி மாநகர் ஒன்று. சரித்திர காலத்திற்கு முன்பே தோன்றி, இன்று வரை சீரும் சிறப்புமாய் விளங்கி வருவதும் இந்நகரமே. புராண இதிகாசங்களிலும், சைவ, வைணவ, பௌத்த, சமண காவியங்களிலும் இந்நகர் சிறப்பிக்கப் பட்டுள்ளது. பாரதத்தின் திலகமாகத் திகழும் காஞ்சி மாநகர் வரலாற்றுச் சிறப்புடனும் ஆன்மீக ஞானத்தின் பொக்கிஷமாகவும் இன்றும் நின்று நிலவுகிறது. 'நகரேஷு காஞ்சி' என்று காளிதாசர் புகழ்ந்துள்ளார். சிவநேசச் செல்வர்கள், 'கல்வியில் கரையிலாக் காஞ்சி' என்று பாராட்டுகிறார்கள். கோயில்களுள் பெருமாள் கோயில் என ஆசாரியர்களால் பரம சீலத்துடன் அழைக்கப்படுவதும் இக் காஞ்சி மாநகரமேயாகும். திருமழிசைப் பிரான் பின்னே, பரமன் தன் பைந்நாகப் பாயைச் சுற்றிக் கொண்டு, செந்தமிழ்க் கவியில் இன்புற்றுப் பின் சென்றதும் இந்நகரே.

பல்லவர்களுக்கும் சோழர்களுக்கும் இது தலைநகர மாக விளங்கியது. பின்னர் விஜயநகர மன்னர்கள் இதைக் கைப்பற்றி, உயர்ந்த கோபுரங்களையும், மண்டபங்களை யும் அழகுற அமைத்தனர். இந்நகரம் ஸ்ரீ. பீடமான

காமகோடி பீடம் விளங்கும் பெருமை பெற்றது. காமாட்சியம்மன் அருள் ஆட்சி செய்வதும் இந்நகரிலே தான்.

## முத்தி தரும் தலங்கள் ஏழு

அவை யாவன : அயோத்தி, மதுரை, மாயா, காசி, காஞ்சி, அவந்தி, துவாரகை என்பன. 'முத்தி தரும் நகரேழில் முக்கியமாம் கச்சி' எனப் போற்றப்படுவதும் இக் காஞ்சி மாநகரமே. பஞ்சபூதத் தலங்கள் என்று போற்றப்படுபவை : காஞ்சிபுரம் பிருதுவித்தலம் (மண்); திருவானைக்கா அப்புத்தலம் (நீர்); திருவண்ணாமலை தேயுத்தலம் (நெருப்பு); திருக்காளத்தி வாயுத்தலம் (காற்று); சிதம்பரம் ஆகாயத்தலம் (ஆகாயம்). ஏகாம்பர நாதர் கோயில் கொண்டிருக்கும் பெரிய காஞ்சிபுரம்தான் அந்தப் பிருதுவித்தலம்.

கோயில்கள் நிறைந்தது இந்நகர். இங்கு நூற்றெட்டுச் சிவாலயங்களும், பதினெட்டு வைணவ ஆலயங்களும் நிறைந்து தெய்வ மணம் வீசி வருகின்றது. ஆண்டு முழுவதும் விழாக் கோலம் கொண்டு விளங்குவதும் இந்நகரமே. யாத்திரிகர்கள் நாட்டின் பல பாகங்களிலிருந்தும் நாடோறும் வந்த வண்ணமாக உள்ளனர்.

## காவியங்கள்

சங்க காலந் தொடங்கி இன்று வரை பெரும்பாலும் எல்லாக் காவியங்களிலும் காஞ்சி மாநகர் இடம் பெற்றுள்ளது. அவைகளுள் சிறப்பித்துக் கூறியவை.

1. பெரும்பாணாற்றுப்படை
2. கந்த புராணம்
3. கம்ப ராமாயணம்

4. வில்லி பாரதம்
5. காஞ்சிப் புராணம்
6. பெரிய புராணம்
7. கலிங்கத்துப் பரணி
8. மணிமேகலை
9. திருவேகம்ப மாலை
10. நாலாயிர திவ்வியப் பிரபந்தம்

## நகர அமைப்பு

காஞ்சி மாநகரம் வில் வளைவாக அமைந்து மூன்று பெரும் பிரிவுகளையுடையது. ஏகாம்பரநாதர் கோயில் கொண்டிருக்கும் பகுதி பெரிய காஞ்சிபுரம். வரதராஜப் பெருமாள் எழுந்தருளியுள்ள பகுதி சின்ன காஞ்சிபுரம். இவை இரண்டிற்கும் இடையிலுள்ள பகுதி ஆடிசன் பேட்டை என வழங்கப் பெறும் கடைவீதி, 'ஆட்ஜசன் (Hodjason) என்னும் ஆங்கிலேயரின் பெயர் இவ்வாறு மருவி வழங்கப்படுகிறது. இந்த பகுதியில் பட்டுச் சேலை களைப் பெரு எண்ணிக்கையில் விற்பனை செய்யும் பட்டு கூட்டுறவு சங்கங்களும், தனியார் ஸ்தாபனங்களும் பாங்குகளும் உள்ளன. இவ்வூர் பட்டுச சேலையை விரும்பி வாங்கி அணிவோர் பலர் நாள்தோறும் வந்த வண்ணம் இருக்கின்றனர். இவ்வூர் பட்டு நெசவுக்கும், பருத்திநூல் நெசவுக்கும் பெயர் பெற்றது. இக்கலை வளர்வதற்காக நெசவாளர்களுக்குத் தம்மாலான உதவியை அரசாங்கம் செய்து வருகிறது.

இது செங்கை அண்ணா மாவட்டத்தின் தலைநகர். இங்கு மாவட்ட ஆட்சித் தலைவரின் அலுவலகமும் மாவட்டம் சம்பந்தப்பட்ட எல்லா அரசாங்க அலுவலகங் களும் இங்கு உள்ளன.

தென் புகைவண்டி மண்டலத்தின் (Southern Railway) அரக்கோணம், செங்கற்பட்டு சந்திப்புக்களுக்கு இடையில் இத்தலம் அமைந்துள்ளது. இங்கு நடுத்தர புகைவண்டி நிலையம் உள்ளது. பாலாற்றின் வடகரையில் அமைந்துள்ள இத்தலத்தையொட்டி இடையில் வேகவதி ஆறு ஓடுகிறது. சென்னைக்குத் தென்மேற்கில் 75 கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது.

அர்த்த சாஸ்திரத்தை இயற்றிய சாணக்கியர், திருக்குறளுக்குத் தலைசிறந்த உரையெழுதிய பரிமேலழகர், கந்தபுராணக் காவியத்தை உலகிற்கு உதவியருளிய கச்சியப்ப சிவாசாரியார், வைணவச் சித்தாந்தத்தில் வல்லவராக விளங்கிய வேதாந்த தேசிகர், ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகள், வைணவப் புரவலர் மகாமகோபாத்தியாய பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியார், இசைக் கலையில் சிறந்து விளங்கிய சியாமா சாஸ்திரி, தென் மொழிக் கடலையும், வடநூற் கலையையும் நிலைகண்டுணர்ந்தவராகிய மாதவச் சிவஞான சுவாமிகள் ஆகிய நற்பெரு மக்கள் அனைவரும் இத்தலத்தைச் சேர்ந்தவர்களேயாவர்.

இவ்விருபதாம் நூற்றாண்டில் தம் நாவன்மையால், நல்லறிவுக் கருத்துக்களால், நற்றமிழ் நடையால் தமிழ் மக்கள் அனைவரின் உள்ளங்களையும் தன்பாற் கவர்ந்து, தன்னிகரற்ற தமிழ் குடிமகனாகத் திகழ்ந்து, தமிழ் நாட்டு அரசியலால் தனக்கெனத் தனித்ததோர் இடம் பெற்றுத் தமிழுக்குத் தரணியில் ஏற்றம் தந்து முதல் அமைச்சராய்த் தொண்டாற்றி, அமரராகிய பேரறிஞர் டாக்டர் திரு சி. என். அண்ணாதுரை அவர்கள் இத்தலத்தைச் சேர்ந்தவரே என்பது தனிச் சிறப்பாகும். தவிர இந்நூற்றாண்டில் இசையுலகில் ஜாம்பவனாக விளங்கிய இசை மேதை நயினாப்பிள்ளை அவர்களும் இத்தலத்தினரே.

காஞ்சிப் புராணமும், பெரிய புராணமும் இத்தலத்தின் சிறப்புக்களைப் பெருமளவில் எடுத்துக் கூறுகின்றன.

## சமயங்கள் : சைவம்

ஏகாம்பரநாதர் கோயில் எப்போது தோன்றியது என்று அளவிட்டுக் கூற இயலாது. சரித்திர காலத்திற்கு முற்பட்டது. அரசர்களால் அவ்வப்போது புதுப்பிக்கப் பட்டு, அக்கோயில் காலத்தை வென்றது என்றுதான் கூற வேண்டும். நாற்புறமும் உயர்ந்த மதில்களையும் வானளாவிய கோபுரங்களையும் உடையது. தென்புற கோபுரம் 192 அடி உயரமுடையது. 9 நிலைகளையுடையது. இது 1509-ஆம் ஆண்டில் கிருஷ்ண தேவராயரால் கட்டப் பட்டதாகும். பங்குனி மாதம் பிரம்மோத்சவமும் மற்ற மாதங்களில் சாதாரண விழாக்களும் நடைபெறும். வெள்ளித்தேர், வெள்ளி ரிஷபம், இந்திர விமானம் இராவண வாகனம் முதலியவை சித்திர வேலைப்பாடுகள் உடையவை. பெருமதிப்புடையவை.

சைவ சமய ஆச்சாரியர்களாகிய அப்பர், சுந்தரா, சம்பந்தர், மாணிக்கவாசகர் ஆகிய நால்வரும் இததலத்திற்கு வந்து, தரிசித்துப் பதிகங்கள் பாடியுள்ளனர். சுந்தரர் திருவொற்றியூர் சென்றிருந்த போது முன்வினைப் பயனாலும் இறைவன் திருவருளினாலும் சங்கிலி நாச்சியார் என்பவரை இரண்டாம் மனைவியாராக மகிழ மரத்தடியில் திருமணம் செய்து கொண்டார். 'இறைவன் மீது ஆணையாக உன்னைப் பிரியேன்' என்று சங்கிலி நாச்சியாருக்கு வாக்களித்துத் திருமணம் செய்து கொண்டார். சின்னாள் அவருடன் இருந்து இல்லறம் இனிது நடத்தினார்.

திருவாரூர் தியாகராஜ பெருமான் நினைவு வந்தது. முதல் மனைவியாராகிய பரவை நாச்சியாரும் திருவாரூரில் தான் இருந்தார். இறைவன் பக்தியும்,

மனைவியின் அன்பும் அவரைப் பற்றி ஈர்த்தன. ஒருநாள் இரவு அவர், துணைவியாருக்குத் தெரியாமல் திருவொற்றியூரை விட்டு, தெற்கு நோக்கி நடந்தார். இறைவன் ஆணையை மீறியதனால் இரண்டு கண்களும் பார்வையை இழந்தன. வருந்தினார்; புலம்பினார். இறைவனைத் துதித்தார். நிந்தித்தார். "இறைவா என்னை இப்படிச் சோதிக்கலாமா? எல்லோரும் என்னைக் குருடன் என்று கேலி செய்கிறார்களே! கண் பார்வையைத் தந்தருள்வீராக. தோழரே! நான் பட்டது போதும். இனியாவது என்னை மன்னித்து அருள் செய்வீராக" என்று வழியிலிருந்த தலங்கள் தோறும் வேண்டி நின்றார்.

ஏகாம்பரநாதர் சன்னதிக்கு வந்தார். வழிபட்டார்; நீள நினைந்து பாடினார். இறையருளால் இடக்கண் பார்வை மட்டும் கிடைத்தது. நன்றியுணர்வோடு பல தலங்களையும் தரிசித்துக் கொண்டு திருவாரூரை யடைந்தார். மற்றொரு கண் பார்வையையும் பெற்றார். ஆகவே சுந்தரருக்குக் கண்கண்ட தெய்வமாக விளங்கியவர் ஏகாம்பரநாதர்.

தேவாரப் பாடல்களில் காஞ்சியின் இயற்கை வருணனை அழகுறப் பாடப்பட்டுள்ளது. பக்திச் சுவை நனி சொட்டச் சொட்ட பாடிய கவி வலவனாகிய சேக்கிழார் சுவாமிகள் பெரிய புராணத்தில் சந்தர்ப்பம் நேரும் இடங்களிலெல்லாம் காஞ்சி மாநகரை மனங்குளிரப் பாடியுள்ளார். திருக்குறிப்பு நாயனார் புராணத்தில் முற்பகுதி காஞ்சி நகர வருணனையேயாகும். இங்கு திருவேகம்பம், திருமேற்றளி, ஓணகாந்தன்தளி, திரு அநேகதங்காவதம், திருநெறிக் காரைக்காடு ஆகிய ஐந்தும் பாடல் பெற்ற தலங்களாகும். பெரிய காஞ்சிபுரத்தில் ஏகாம்பரநாதர் கோயில், காமாட்சியம்மன் கோவில், குமரகோட்டம் ஆகிய மூன்றும் முக்கிய கோவில்களாகும்.

## வைணவம்

பன்னிரு ஆழ்வார்களுள் பொய்கை யாழ்வார் அவதரித்த தலம் இதுவே. ஒரு சிலர் தவிர அநேகமாய் எல்லா ஆழ்வார்களும் இங்கு எழுந்தருளி மங்களா சாசனம் செய்துள்ளனர். திருமழிசை பிரானும், திருமங்கையாழ்வாரும் இத்தலத்தோடு அதிக தொடர் புள்ளவர்கள். வைணவ ஆச்சாரியாராகிய இராமானுஜர் ஸ்ரீ பெரும்புதூரில் அவதரித்தாரேனும் வரதராஜப் பெருமாளிடம் அதிக பக்தி பூண்டவர். இப்பகுதியில் அதிக நாள் வாழ்ந்தவர். இங்கு 18 வைணவத் தலங்கள் உள்ளன. அவற்றுள் முதல் 14-ம் ஆழ்வார்களால் மங்களா சாசனம் செய்யப்பட்டவை. எஞ்சிய நான்கும் புராண வரலாறு பெற்றவை.

## மங்களா சாசனம் பெற்ற தலங்கள்

1. திருக்கச்சி (வரதராஜப் பெருமாள் அத்திகிரி)
2. திரு அஷ்டபுஜம்
3. திருத்தண்கா
4. திருவேளுக்கை
5. திருப்பாடகம்
6. திருநீரகம்
7. திருநிலாத் துண்டம்
8. திருவூரகம்
9. திருவெஃகா
10. திருக்காரகம்
11. திருக்கள்வனம்
12. திருக்கள்வனூர்

13. திருப்பவளவண்ணம்

14. பரமேஸ்வரவிண்ணகரம்

## புராண வரலாறு பெற்றவை

15. முகுந்த பெருமாள்

16. நரசிங்க பெருமாள்

17. உள்ளுவார் உள்ளத்தான்

18. பச்சை வண்ணர்

சின்ன காஞ்சிபுரத்தில் உள்ள வரதராஜப் பெருமாள் கோயிலில் வைகாசி மாதம் பிரம்மோத்சவம் நடைபெறும். மற்ற மாதங்களில் சாதாரண விழாக்கள் நடைபெறும். அருளாளன், பேரருளாளன், வரதன், வரதராஜன், தேவராசன், பெருந்தேவி மணவாளன் என்று இவருக்கு வேறு திருநாமங்கள் உண்டு. உயர்ந்த மதில்களும் இரண்டு பெரிய கோபுரங்களும் கொண்டது இக்கோயில். மேற்கு கோபுரத்திற்கு 1978-இல் கும்பாபிஷேகம் நடைபெற்றது. ரதமும் செப்பனிடப்பட்டு ரதோஉற்சவமும் நடைபெற்று வருகிறது.

## பௌத்தம்

அக்காலத்தில் காஞ்சி எல்லாச் சமயங்களுக்கும் உறைவிடமாய்த் திகழ்ந்தது. புத்த சமணத் துறவிகளும் இங்கு வாழ்ந்தனர் என்று இலக்கியங்களும் கல்வெட்டுக்களும் கூறுகின்றன. காஞ்சியில் புத்தமதம் தழைத்தோங்கி இருந்தமைக்கு சங்க இலக்கியங்களும் யுவான் சுவாங் என்ற சீன யாத்திரிகரின் குறிப்புக்களும் சான்று பகர்கின்றன. புத்த ஸ்தூபிகளோ, விகாரங்களோ தற்போது இங்கு இல்லாவிடினும் புத்தரின் சிலைகள் சில இடங்களில் காணப்படுகின்றன. மாதவியும் மணிமேகலையும் புத்த

மதத்தில் சேர்ந்து துறவறத்தை மேற்கொண்டனர். புகார் நகரில் இருந்த பௌத்தப் பள்ளியில் சேர்ந்து, அறவண அடிகளிடம் உபதேசம் பெற்றனர். புகார் நகரைக் கடல் கொண்டது. அறவண அடிகளும் மாதவியும் காஞ்சி வந்தடைந்தனர். பின்னர் மணிமேகலை வஞ்சி நகரிலிருந்து காஞ்சி வந்து இங்கேயே தனது இறுதிக் காலத்தைக் கழித்தனள். அறப்பெருஞ் செல்வித் தெரு என்று ஒரு தெருவும் இங்குள்ளது. பௌத்தப் பெரியார்களும் இங்கு இருந்து அறம் வளர்த்தனர். பௌத்தர்களும் சமணர்களும் பிற உயிர்களைக் கொல்லா நோன்பினர். சீவகாருண்ய சீலர்கள்.

## சமணம்

வேகவதி ஆற்றின் தென் கரையில் திருப்பருத்திக் குன்றத்தில் சமண மத ஆலயம் உள்ளது. காஞ்சியைச் சுற்றி சுமார் 40, 50 மைல் சுற்றளவில் உள்ள கிராமங்களில் பெரு எண்ணிக்கையில் சமண சமயத்தினர் வாழ்கின்றனர். அவ்வூர்களில் சமண ஆலயங்கள் உள்ளன. செய்யாறு, வந்தவாசி, ஆரணி, போளூர் முதலிய தாலுக்காக்களில் பெருவாரியாய் சமண மதத்தினர் செல்வாக்கோடு வாழ்கின்றனர். அவர்களின் மதத் தலைவர்கள் காஞ்சியில்தான் வாழ்ந்திருக்க வேண்டும். சமண சமயத்தில் திகம்பரி, சுவேதாம்பரி என இரணடு பிரிவுகள் உண்டு. தமிழ் நாட்டவர் திகம்பர பிரிவினர். வடநாட்டிலிருந்து இங்கு வந்து வியாபாரம் செய்யும் குஜராத்திகள், மார்வாரிகள் சுவேதாம்பரி பிரிவைச் சேர்ந்தவர்கள். அவர்கள் இங்கு தொழுவதற்கென்று ஆலயங்களைக் கட்டியுள்ளனர். சமணர்கள் சைவ உணவை உண்பவர்கள். இரவில் உணவு அருந்த மாட்டார்கள்.

## பிற சமயங்கள்

தற்போது மகமதியர்கள், மற்றும் கிறித்தவர்கள் சகோதர பாவனையோடு நம்மவரோடு வாழ்ந்து வருகின்றனர். அவர்கள் தங்களுக்கென்று, மசூதிகளையும், மாதா கோவில்களையும் கட்டிக்கொண்டு வந்தனை வழிபாடுகளை நடத்திக் கொள்கின்றனர்.

தற்போது காஞ்சிபுரம் செங்கை அண்ணா மாவட்டத்தின் தலைநகரமாக விளங்குகின்றது. சைதாப்பேட்டையிலிருந்த மாவட்டத் தலைமை நிலையங்கள் இங்கு மாற்றப்பட்டுள்ளன. புதிய கட்டிடங்கள் பல எழுப்பப் பெற்று காஞ்சி மாநகரம் பல்லாற்றானும் சிறப்புற்று விளங்குகிறது.

## வரலாற்றுச் செய்திகள்

தொண்டை நாட்டுத் தலங்களுள் காஞ்சிபுரம் முதன்மை வாய்ந்தது. திருக்குறிப்புத் தொண்டர், சாக்கியர், ஐயடிகள் காடவர் கோன் என்னும் நாயன்மார்கள் தோன்றி, வாழ்ந்து, வழிபட்டு அருள்பெற்ற சிறப்புடையது. இது உலகிலேயே மிகப் பழமை வாய்ந்த நகரங்களுள் ஒன்றாக மதிக்கத் தக்க மாட்சிமையுடையது. கி. பி. 640-இல் இயூன் சங் என்ற சீன யாத்திரிகன் இங்கு வந்து இதன் சிறப்புக்களைக் கண்டு வியந்து பாராட்டிச் சென்றிருக்கிறான். நகர அமைப்பு (town planning) முறையில் காஞ்சிபுரம் உலகிலேயே மிகவும் சிறப்பிடம் பெற்று விளங்குகின்றது என்று பேராசிரியர் கெட்டிஸ் துரைமகனார் (Professor Geddes) இதனைப் புகழ்ந்து போற்றுகின்றார்.

சந்திரகுப்த மௌரியனின் அமைச்சராக விளங்கி அர்த்த சாஸ்திரம் என்னும் அரிய பெரிய நூலை எழுதிய சாணக்கியர் காஞ்சிபுரத்தில் பிறந்தவர். சங்கரர்,

இராமானுஜர், பரிமேலழகர் போன்ற பெருமக்கள் காஞ்சியில் வாழ்ந்தவர்கள். பௌத்த சமய நூலாசிரியர்களாகிய திக்கநாகர், தருமபாலர், தருமகீர்த்தி முதலிய பெருமக்கள் காஞ்சிபுரத்தைச் சேர்ந்தவர்கள்.

கயிலாசநாதர் கோயில், வைகுந்தப் பெருமாள் கோயில் முதலியவற்றின் அழகிய அரிய சிற்பங்கள் உலகப் புகழ் பெற்றனவாகும்.

வில்லிபாரதம் அருச்சுனன் தீர்த்த யாத்திரைச் சருக்கத்திலுள்ள 13, 14-ஆவது பாடல்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. அருச்சுனன் தென்னாட்டில் திருப்பதி மலையைத் தரிசித்து விட்டு, ஏகாம்பர நாதரையும் காமாட்சியம்மனையும் தரிசித்த வரலாறு 13-ஆம் பாடலில் காணலாம். 14-ஆம் பாடலில் சின்ன காஞ்சிபுரம் வரதராஜ பெருமாள் அஷ்டபுஜம் ஆகிய மூர்த்தங்களைத் தரிசித்து விட்டு ஏழு நதிகளிலும் தீர்த்தங்களிலும் நீராடினான் என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

**13 இச்சைப்படி தன் பேரறம்**
**எண்ணான்கும் வளர்க்கும்**
**பச்சைக்கொடி விடையோனொரு**
**பாகந்திறை கொண்டான்**
**செச்சைத்தொடை இளையோனுகர்**
**தீம்பால்மண நாறும்**
**கச்சைப்பொரு முலையாளுறை**
**கச்சிப்பதி கண்டான்.**

தன் இச்சைப்படி சிறந்த அறங்கள் முப்பத்திரண்டினையும் வளர்க்கும் பச்சைக்கொடி போன்றவளும், விடையோனின் வாம பாகத்தைத் திறைகொண்டவளும் (தங்குமிடமாகக் கொண்டவளும்), வெட்சிப் பூமாலையை உடைய இளைய புத்திரனான முருகன் அமுது செய்த

தீம்பாலின் மணம்வீசும் கச்சினை மோதும் பருத்த தனங்களையுடையவளுமான காமாட்சி அம்மை எழுந்தருளியிருக்கும் காஞ்சிபுரியைப் பார்த்தன் அடைந்தான்.

**14 அயனார்புரி மகசாலை**
**மணிஅத்தி கிரிக்கே**
**மயனார்செய் திருக்கோயிலும்**
**மாநீழலின் வைகெண்**
**புயனாருறை மெய்க்கோலமும்**
**உள்ளன்பொடு போற்றிப்**
**பயனார்புனல் நதியேழும்**
**அந்நகருடு படிந்தான்.**

அருச்சுனன் சின்ன காஞ்சிபுரத்திலுள்ள வரதராஜப் பெருமாளையும் அஷ்ட புஜப் பெருமாளையும் வணங்கினான். அந்நகரினிடத்தேயுள்ள நற்பயன் மிக்க புண்ணிய நதிகளிலும் நீராடினான்.

தனக்குக் கிட்டாத மனத் தூய்மையைப் பெறும் பொருட்டுப் பிரம்மதேவன் அத்திகிரியில் யாகசாலை அமைத்து அஸ்வமேத யாகம் செய்து திருமாலை ஆராதித்தார் என்றும், அப்போது யாகாக்கினியிலிருந்து எழுந்த புண்ணிய கோடி விமானத்தில் தேவராசனான திருமால் தோன்றினாரென்றும், அங்கே மயன் ஒரு கோயிலை நிர்மாணித்தான் என்றும் கூறுவர். தேவலோக யானையான ஐராவதம் மலைவடிவம் கொண்டு தேவராசனைத் தாங்குதலால் அம்மலைக்கு அத்திகிரி என்ற பெயராயிற்று.

இச் செய்யுள் குறிக்கும் திருமால் பெயர் வரதராஜர், தாயார் பெயர் பெருந்தேவி. கம்பை, பம்பை, மஞ்சனி; பிச்சி, கலிச்சி, மண்ணி, வெஃகா என்பவை சப்த நதிகள்.

தவிர தண்டியலங்காரம் மேற்கோள் செய்யுள் ஒன்றில் காஞ்சி மாநகரம் மயிலைப் போல் உள்ளதென்று குறிக்கப்பட்டுள்ளது. மற்றொரு செய்யுளில் எம் பெருமான் நின்ற திருக்கோலம், இருந்த திருக்கோலம், கிடந்த திருக்கோலம் இவைகளுக்கு மூன்று தலங்களை எதிர் நிரல் நிறையாகக் காட்டப்பட்டுள்ளது.

கலிங்கத்துப் பரணியில் முதற் குலோத்துங்கன் கட்டளைப்படி கருணாகரத் தொண்டமான் ஒரு பெருஞ் சேனையுடன் காஞ்சிபுரத்திலிருந்து புறப்பட்டுச் சென்று கலிங்க நாட்டை வென்றான் என்று கூறப்பட்டுள்ளது.

இதுகாறும் கூறியவற்றால் காஞ்சி மாநகரம் காவியங் களாலும் கல்வெட்டுக்களாலும் பாராட்டப்பட்டுள்ளது என்பதை அறிந்தோம். இப்போது கலைக் கல்லூரிகள், கைத்தொழில் பள்ளிகள், கலையரங்குகள், திரைப்பட அரங்குகள் போன்ற நவீன வசதிகளோடு சிறப்புற்று விளங்குகிறது.

இனிவரும் அத்தியாயங்களில் இவைகளின் விரிவைக் காணலாம்.

# காஞ்சி மாநகர்

இரா. பச்சையப்பன் எம். ஏ.
(அஞ்சல் துறை ஆய்வாளன் —காஞ்சி வட்டம்)

## தொண்டை நாடு

பண்டைக் காலத்தில் நம் தமிழ் நாட்டின்கண் சிறப்பாக ஐந்து மண்டலங்கள் இருந்தன. அவற்றுள் ஒன்று தொண்டை மண்டலம். இத்தொண்டை மண்டலம் வட வேங்கடத்தையும் தன்பாற்கொண்டிருந்தது. ''சோழநாடு சோறுடைத்து, தொண்டை நாடு சான்றோருடைத்து'' என்னும் முதுமொழியால் தொண்டை நாட்டில் சான்றோர் பலர் மலிந்திருந்தமை தெரிய வருகின்றது.

''வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான்புகழ் கொண்ட தமிழ்நாடு'' என்று பாரதியார் பாராட்டியுள்ளதை அனைவரும் அறிவோம். தமிழ்நாட்டுக்கு அத்தகு பெருமையைத் தேடித் தந்த பகுதி வள்ளுவர் பிறந்த மண்டலமாகிய தொண்டை மண்டலமாகும். திருவள்ளுவர் மட்டுமின்றி உலகப் பொது மறையாகிய திருக்குறளுக்கு உரையெழுதிய பரிமேலழகரும் தொண்டை நாட்டவர்தான்.

அர்த்த சாஸ்திரம் எழுதிய அரசியல் மேதையாகிய சாணக்கியரும் தொண்டை நாட்டவர்தான். பெரிய புராணம் பாடிய சேக்கிழார் பெருமானும் இந்நாட்டைச் சார்ந்த குன்றத்தூரில் பிறந்தவர்தான். நளவெண்பா பாடிய புகழேந்தியும் பொன் விளைந்த களத்தூரில் பிறந்தவர்தான். பொய்கை யாழ்வார், பூதத்தாழ்வார்,

பேயாழ்வார், போன்றவர்களும் தொண்டை நாட்டோடு தொடர்பு கொண்டவர்களே. இத்தகு சான்றோர்களைப் பெற தொண்டை நாடு மாதவம் செய்திருக்க வேண்டும்.

> "வையகம் எல்லாம் கழனியா வையகத்துச்
> செய்யகமே நால்திசையில் தேயங்கள்— வையகத்து
> வான்கரும்பே தொண்டை வளநாடு"

என்னும் பாவால் மக்களுக்கும் புலவர்க்கும் தொண்டை நாடு கரும்பாக இனித்தமை புலனாகிறது. இனிக்கும் இடம் தேடி யாவரும் செல்வது இயல்பாக அமைகின்றது. புத்துப்பாட்டுள் ஒன்றாகிய பெரும்பாணாற்றுப் படையில் அதனது ஆசிரியர் உருத்திரங் கண்ணனார் தொண்டை நாட்டில் வாழும் மக்களைப் பற்றியும் அவர்கள் விருந்தோம்பும் பண்பைப் பற்றியும் பாடியிருப்பதைப் படிக்கும் போதெல்லாம் நாவில் நீர் ஊறுகின்றது. தொண்டை நாட்டு மக்களே விருந்தோம்பும் பண்பினர் என்று கூறும்போது அந்நாட்டு மன்னனாக விளங்கிய தொண்டைமான் இளந்திரையனைப் பற்றிக் கூறவும் வேண்டுமோ?

அவன் மூவேந்தரினும் சிறந்தவன்; வறியவரை வரவேற்று உபசரிக்கும் வள்ளல்; புலவர்களைப் போற்றிய புரவலன்; காடுகளை அழித்து நாடாக்கிய காவலன்; வேளாண்மையை வளர்த்த வேந்தன் ஆவன். காஞ்சிக்குப் பதிமூன்று கல் தொலைவிலுள்ள தென்னேரி என்னும் ஏரியைக் கட்டியவன் அவனே. திரையன் ஏரிதான் மாறி இன்று தென்னேரியென வழங்கி வருகின்றது.

ஔவையாரும் தொண்டை நாட்டிற்கு அரசியல் தூதுவராக வந்துள்ளார். அவர் தொண்டை நாட்டு மக்களின் வள்ளண்மைக்காகப் போற்றி வரம் தந்து சென்றதாக ஒரு செய்தி உலவி வருகின்றது. காஞ்சிக்குச் சற்று வடக்கேயுள்ள சிறுவளூர் வழியாக ஔவையார்

பள்ளூர் என்னும் ஊரைச் சேர்ந்த போது அவ்வூர் மக்கள் அவரைப் போற்றியமைக்காக அம்மக்களது அன்புப் பெருக்கு போன்று நீர்வளமும் பெருக வேண்டுமென்று வாழ்த்திச் சென்றாரென்றும் அது முதற்கொண்டு இந்நாள் வரையிலும் அவ்வூர்ப் பகுதி நீர்வள மிக்கு இருக்கிறதென்றும் அப்பகுதி மக்கள் கூறிக் கொள் கின்றனர்.

ஔவையார் அன்பிற்காக வாழ்த்தியது போல், தொண்டை நாட்டின் தலைநகராகிய காஞ்சியின் முதற் பெருமாளாகிய சொன்ன வண்ணம் செய்த பெருமாள், பக்தன் வெளியேற்றப்பட்டான் என்பதற்காக ஓரிரவு காஞ்சிக்குச் சற்றுத் தெற்கேயுள்ள ஓர் ஊரில் அப் பக்தனோடும் போய் விட்டார் என்றும், அரசன் மறுநாள் காஞ்சி மாநகர் பொலிவிழந்து நிற்பதைக் கண்டு காரண மறிந்து, பெருமாளையும் பக்தனையும் கண்டு வரவேற்க மீண்டும் காஞ்சி வந்து பொலிவு தந்தார் என்றும் கூறப் படுகிறது. அவர் அன்றிரவு தங்கிய "ஓர் இரவு இருக்கை" என்னும் ஊர் மருவி இன்று ஓரிக்கை என வழங்கப் படுகிறது.

## தலைநகர்

கரும்பன்ன தொண்டை நாட்டிற்குக் காஞ்சி மாநகரம் தலைநகராய் விளங்கிற்று. இந்நகரம் கச்சி எனவும், கச்சிப்பேடு, காஞ்சி, கஞ்சி எனவும் வழங்கி வந்துள்ளதை வரலாற்று நூலாசிரியர்கள் எடுத்துக் காட்டுகின்றனர். காஞ்சி நகரைப் பொன்னகரமாக மணிமேகலை போற்றுகின்றது.

"வெயினுழை பறியாக் குயினுழை பொதும்பர்க்
குறுங்காற் காஞ்சி"

என்று பத்துப்பாட்டுள் காஞ்சியைச் சுற்றிலும் காஞ்சி மரக் காடுகள் இருந்தமையைக் கூறுவதால், அதனைக்

கொண்டு காஞ்சி என்று இதற்குப் பெயர் வந்தது எனலாம். மேலும் கா என்றால் பிரமன்; அஞ்சித்தல் என்றால் பூசித்தல்; புரம் என்றால் நகரம். பிரமன் சிவனைப் பூசித்த நகரமாதலின் காஞ்சிபுரம் எனப் பெயர் பெற்றதென்றும் கூறப்படுகிறது.

## கோயில்கள்

காஞ்சி மாநகரில் கோயில்கள் ஏராளம். இந் நகரின் கண் 108 சிவாலயங்களும் 18 வைணவ ஆலயங்களும் உள்ளன என்பர். இதற்குப் பூலோக கைலாசம் என்றும் பெயர். இந்நகரின் கண் உள்ள கைலாசநாதர் கோயிலும் தோன்றியது இதனால் எனலாம். இங்குள்ள கைலாச நாதர் கோயிலும், வைகுந்த பெருமாள் கோயிலும், பல்லவ அரசர்களின் சிற்பக் கலையின் நுண்மையை எடுத்து இயம்புகின்றன.

''நகரேஷு காஞ்சி'' அதாவது நகரத்தில் சிறந்தது காஞ்சிபுரம் என்று மகாகவி காளிதாசரால் போற்றப் பட்ட நகரம். முத்தி தரும் நகரேழுள் முக்கியமாம் கச்சி என்றும் வழங்கப்படுகிறது. ''காஞ்சியை நினைப்பிற் காசிக்கடி நகர் வசித்த பேறாம்'' என்று காஞ்சி புராணம் கூறுகின்றது.

**''கவிகளென் றுரைப்போர் தம்முள்**
**காஞ்சியைப் புகழார் இல்லை''**

என்ற கூற்றும், பலரும் இதனைப் போற்றுவதால் எழுந்த ஒன்றே.

'தேசமெல்லாம் புகழ்ந்தாடும் கச்சி' என்று மாணிக்க வாசகப் பெருமானும், 'கல்வியிற் கரையிலா காஞ்சி நகரம்' என்று திருநாவுக்கரசரும் இந்நகரைப் பற்றிப் பாடியுள்ளனர். காஞ்சி காமாட்சி, மதுரைமீனாட்சி, காசிவிசாலாட்சி என்ற வைப்பு முறையிலும் காமாட்சி

அம்மையின் திருக்கோயிலைக் கொண்டு இலங்கும் காஞ்சி மாநகர் முதன்மை எய்துகிறது.

திருவாரூரில் பிறந்தால் முத்தி, திருப்பதியை மிதித்தால் முத்தி, திருவண்ணாமலையை நினைத்தால் முத்தி, காஞ்சியில் வசித்தால் முத்தி, காசியில் இறந்தால் முத்தி யென்றும் சொல்லப்படுவதால் காஞ்சி மாநகரம் சிறப்புள்ள நகரங்களுள் ஒன்றாக வைத்து எண்ணப் படுகின்றது. காஞ்சியில் வந்து வசியுங்கள் என்று அனைவரையும் வரவேற்று, வசிக்கச் செய்து முத்தி தரும் நகரமானமையின் இதன் வள்ளண்மை விளங்குகின்றது.

இந்நகரின் கண் பண்டைக் காலத்தில் தொண்டைமான் இளந்திரையன் வள்ளலாக இருந்தது போலவே வாழையடி வாழையாக பல வள்ளல்கள் தோன்றி, கோயில்களும், சத்திரங்களும் அமைத்துள்ளனர். இந்நகரின்கண் தோன்றிய வள்ளல் பச்சையப்பனை அறியாதார் யார்? தமிழ் மொழிக்குத் தாய்வீடாம் பச்சையப்பன் கல்லூரியை நிறுவ பேருதவி செய்த திரு கந்தசாமி முதலியாரைப் போன்றவர்களையும் காஞ்சி உருவாக்கிய வண்ணம் இருக்கிறது.

''பலர்தொழ விழவு மேம்பட பழவிறல் மூதூர்''

என்று காஞ்சி மாநகரில் விழாவெடுத்த சிறப்பினை பத்துப் பாட்டு நுவலா நிற்கின்றது. அதுபோலவே காஞ்சி மாநகரில் இன்றும் பல விழாக்கள் நடந்தவண்ணம் இருக்கின்றன.

## சமயங்கள்

### பௌத்தம்

காஞ்சி மாநகரின்கண் பௌத்தம், சமணம், சைவம், வைணவம் போன்ற சமயங்கள் பரவியிருந்தன. பௌத்த

சமயத்தைச் சேர்ந்த அறவண அடிகள் இந்நகரில் வாழ்ந் தார். மணிமேகலை தொண்டை நாடு வற்கடம் புக்க காலை காஞ்சி போந்து அமுதசுரபி கொண்டு பசிப்பிணி போக்கினள் என்று அறிகின்றோம். அவ்வமயம் பதினெண் மொழி பேசும் மக்கள் திரள் திரளாக வந்து உணவு பெற்றுச் சென்றனர் என்றும் தெரிகின்றமையின் காஞ்சியைச் சுற்றிலும் பல மொழிகள் பேசிய மக்கள் இருந்தார்கள் என்பது தெரிகின்றது. பௌத்த சமயக் கொள்கைகளை ஏனைய சமயங்கள் தங்கள்பால் கொண்டு உள்ளமையாலும் அக்கால மன்னர்கள் அதனைப் பெரிதும் தழுவாததாலும் பௌத்த மதம் இந்தியாவில் வேரூன்றாதது போலவே இங்கும் வேர் ஊன்ற முடியாமல் போய்விட்டதென அறிகிறோம்.

கி. பி. இரண்டாம் நூற்றாண்டில் காஞ்சியில் சமஸ் கிருத பல்கலைக் கழகம் நடைபெற்றதெனத் தெரிகிறது. அப்பல்கலைக் கழகத்தில் பயில கடம்ப மன்னர் மயூர சர்மன் போன்ற வேற்று நாட்டினரும் வந்தனர் என்று தெரிகின்றது. தருமபாலர் என்பவர் காஞ்சியிலிருந்து நாலந்தா பல்கலைக் கழகத்திற்குச் சென்று பணியாற்றின ரெனின் காஞ்சியின் மாட்சியை விளம்பவும் வேண்டுமோ? அன்று மட்டுமின்றி இன்றும் காசி இந்துப் பல்கலைக் கழகத்திற்கு திரு த. ப. சித்தலிங்கையா என்பவரை உருவாக்கி காஞ்சி நகரம் அனுப்பி வைத்துள்ளது. மேலும் சென்னைப் பல்கலைக் கழக துணைவேந்தராகிய திரு நெ. து. சுந்தர வடிவேலுவையும் பல்கலைக் கழகப் பதிவாளர் திரு சையத் யாகூப் அவர்களையும் உருவாக் கியது காஞ்சி மாநகர்தான்.

## சமணம்

சமண சமயம் இன்றும் காஞ்சியிலும் அதன் அண்மை யிலுள்ள ஆற்பாக்கம்,திருப்பணமூர் போன்ற இடங்களில் வேரூன்றியிருக்கிறது. சமண சமயம் ஆற்றிய இலக்கியத்

தொண்டு சாலப் பெரிது. நல்லறம் என்னும் திங்கள் இதழை நடாத்தும் திரு ஜீவபந்து ஸ்ரீபால் அவர்களும் தொண்டை நாட்டைச் சார்ந்த சமணராவர்.

வைணவரெனினும் காய்தல் உவத்தலின்றி எச்சமயத்தையும் ஒப்ப நோக்கும் பண்பாளராகிய பெரியார் திரு மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை அவர்களைக் கொண்டு சிந்தாமணிச் சொற்பொழிவுகள் நிகழ்த்தி, அன்னார்க்குச் சிந்தாமணிச் செல்வர் என்ற பட்டமும் அளித்தது காஞ்சி நகரமாகும்.

சமணச் சமயக் கோயில்கள் திருப்பருத்திக் குன்றம் எனவழங்கும் ஜின காஞ்சியில் உள்ளன. அங்கு இருபத்து நான்காவது தீர்த்தங்கரரான வர்த்தமானர் கோயிலும், எட்டாம் தீர்த்தங்கரரான சந்திர பிரபா கோயிலும் உள்ளன. செங்கல்பட்டு மாவட்டத்திலேயே மிகப் பழங் காலக் கோயில்கள் இவையென திரு T. N. இராமச்சந்திரன் எம். ஏ. அவர்கள் கூறியுள்ளார்கள். சந்திரபிரபா கோயில் பல்லவர் காலத்ததென்றும், மகாவீரர் கோயில் முற்கால சோழர் காலத்தது என்றும் ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர்.

## சைவம்

சிவகாஞ்சியென வழங்கும் பெரிய காஞ்சிபுரம் சைவ சமயம் தழைத்து இருந்ததற்கு எடுத்துக் காட்டாக விளங்குகிறது. இங்குதான் ஏகாம்பரர் ஆலயமும் காமாட்சியம்மன் திருக்கோயிலும், குமரகோட்டமும்; கச்சபேசர் கோயிலும், கைலாச நாதர் கோயிலும் அமைந்துள்ளன. ஏகாம்பர ஈஸ்வரரின் முன் கோபுரம் 192 அடி உயரத்தைக் கொண்டது.

இங்கு காஞ்சி காமகோடி பீடமும், ஞானப்பிரகாச சுவாமிகள் மடமும் சைவ சமயத்தை வளர்த்து வருகின்றன. காஞ்சி காமகோடி சுவாமிகளை மக்கள்

பெரியவாள் என்று அன்போடு அழைத்து வருகின்றனர். இங்கு இராமகிருஷ்ண மடமும், நாராயண சேவாசிரமும் இயங்கி வருகின்றன. சிவகாஞ்சிப் பகுதியில் உளகளந்தார் வைகுண்ட பெருமாள், பாண்டவப் பெருமாள், பச்சை வண்ணர், பவளவண்ணர் போன்ற வைணவ ஆலயங்களும் உள்ளன. சைவ சமயத்தில் ஈடுபாடு உடைய திரு. க. வச்சிரவேலு முதலியார், திரு. அருணை வடிவேலு முதலியார் போன்றவர்களை உருவாக்கியதும் காஞ்சி மாநகர் எனின் மிகையாகாது.

## வைணவம்

விஷ்ணுகாஞ்சி என்னும் சின்ன காஞ்சிபுரம் இங்கு வைணவ சமயம் இருந்ததற்கும் இருப்பதற்கும் ஓர் எடுத்துக்காட்டு. சொன்ன வண்ணம் செய்தபெருமாள், வரதராஜப் பெருமாள், விளக்கொளி பெருமாள், அஷ்ட புஜம் போன்ற கோயில்கள் ஈங்குள்ளன. வரதராஜப் பெருமாள் கோயில் மிகப் பெரியதாகும். வரதராஜப் பெருமானுக்கு பேரருளாளன் என்றும் அருளாளன் என்றும் பெயருண்டு. இக்கோயிலுக்கு ஏராளமான சொத்துண்டு.

கிளைவ், முன்னாள் செங்கல்பட்டு மாவட்ட கலெக்டர் திரு. பிளேஸ் போன்ற வெளிநாட்டினரும், பலரும விலையுயர்ந்த ஆபரணங்களை அன்பளிப்பாக அளித்துள்ளார்கள். பிற சமயத்தவரையும் கவர்ந்த இப்பெருமானின் பெருமையை உரைப்பிற் பெருகும். "கஞ்சி வரதப்பா" என அப்பெருமானை எங்கிருக்கும் மக்களும் வணங்கும் வெற்றியை நினைத்தால் அவன் அருளின் பெருமையை என்னென்பது? இன்னும் வைணவ சமயத்தைப் போற்றும் பிரதிவாதி பயங்கரம் திரு. அண்ணங்கராசார்யா சுவாமிகள் விஷ்ணு காஞ்சியில் தமிழ்மொழி மூலம் வைணவ சமயத்திற்குப் பெருந்தொண்டு புரிந்து வருகிறார்கள்.

## சேவை நிலையங்கள்

இவ்விஷ்ணு காஞ்சியில் தோன்றியவர்தான் அறிஞர் அண்ணா அவர்கள். தமிழ் மொழிக்குத் தமது எழுத்தாலும், பேச்சாலும், பண்பாலும் புத்துணர்ச்சி யூட்டியவர்கள். காஞ்சியில் பிறந்து வளர்ந்து, ஏழை எளியோரிடம் பழகி பண்பட்ட உள்ளங் கொண்டு நாட்டையும், நாட்டு மக்களையும் விழித்தெழச் செய்ய கட்சியொன்றமைத்துப் பதினெட்டு ஆண்டிலேயே ஜனநாயக முறையில் தமிழரசைக் கண்டவர். குறுகிய காலத்தில் மக்களிடம் நற்பெயர் பெற்று மறைந்த நன்முதன்மந்திரி அவரேயாவர்.

விஷ்ணு காஞ்சிப் பகுதியில் இராமலிங்க மிஷன் ஒன்றும் உருவாகி வருகிறது. இது விஷ்ணு காஞ்சியில் சமரச சன்மார்க்கம் பேசுகிறது. சிவ காஞ்சியில் நாராயண சேவாசிரமம் ஒரே குலம், ஒரே சமயம், ஒரே கடவுள் என்ற கொள்கையுடன் அறியாமைப் பிணியையும் மருந்தகம் ஒன்றமைத்து பிணியையும் போக்கி வருகின்றது. இம்மருத்துவ இல்லத்தில் டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை, டாக்டர் ப. நடராஜன், டாக்டர் அழகப்பச் செட்டியார், திரு. பெரியசாமித்தூரன், அறிஞர் அண்ணா போன்றவர்களும் சிகிச்சை பெற்று அதனைப் போற்றினரெனின் அதன் சிறப்பை உரைக்கவும் போமோ?

''செய்யும் தொழிலனைத்தும் சீர்தூக்கிப்
பார்க்குங்கால்
நெய்யும் தொழிலுக்கு நிகரில்லை''

என்று சிறப்பாகக் கூறப்படும் நெய்தல் தொழிலை மிகுதியாக உடைய காஞ்சி மாநகர்க்கு நாராயண சேவாசிரமம் ஆற்றும் தொண்டு சாலவும் சிறந்தஒன்றாகும். இவ்வாசிரமம் 1917-இல் தோற்றுவிக்கப் பெற்று இதுகாறும் சீரிய தொண்டு புரிந்து வந்திருக்கிறது.

(ஆதாரம்) தவத்திரு ஆத்மானந்தர்
நினைவு மலர் 1970
ஸ்ரீ நாராயண சேவாசிரமம், காஞ்சிபுரம்-2

# இலக்கியங்கள்

## 1. பெரும்பாணாற்றுப் படை

**கி. பி. முதல் நூற்றாண்டு**

### செய்திச் சுருக்கம்

தொண்டைமான் இளந்திரையனைச் சிறப்பித்துக் கடியலூர் உருத்திரங்கண்ணனார் பாடிய இப்பாட்டு 500 அடிகளைக் கொண்டதாகும். இத்தொண்டைமான் வென்வேற் கிள்ளி என்னும் சோழனுக்கும் நாகக் கன்னிகைக்கும் பிறந்தவன் என்று மணிமேகலை கூறுகிறது.

இதில் வரும் பாணன் கையில் உள்ளது பேரியாழ் என்பதாகும். இதனாலோ, பாட்டின் அளவாலோ இப் பெயர் பெற்றது. தொண்டைமான் இளந்திரையனிடம் பரிசில் பெற்றுவரும் பாணன் ஒருவன், பரிசில் பெறக் கருதும் பாணன் ஒருவனைச் சந்தித்து, அவனைத் தொண்டைமானிடம் ஆற்றுப் படுத்துகிறான். அப்போது இளந்திரையனுடைய நாட்டுச் சிறப்பு கூறப்படுகிறது. அந்நாட்டில் ஆறலைக் கள்வர் இல்லை. இடியும் சார்ந் தாரைத் துன்புறுத்துவதில்லை. அரவம் ஆளைத் தீண்டாது. தீய விலங்குகள் இல்லை. இளந்திரையனின் ஆட்சி அப்படிப்பட்ட சிறப்பு உடையது.

**"கைப்பொருள் வௌவும் களவுஏர் வாழ்க்கைக்**
**கொடியோர் இன்றவர் கடியுடை வியன்புலம்**
**உருமும் உரறாது அரவும் தப்பா**
**காட்டுமாவும் உறுகண் செய்யா வேட்டாங்கு**
**அசைவுழி அசைஇ நசைவுழித் தங்கிச்**
**சென்மோ இரவல ! சிறக்கநின் உள்ளம்"**

*(அடிகள் 40—45)*

*பிறநாட்டு வணிகர் அந்நாட்டில் கூட்டம் கூட்டமாகச் செல்வர். காட்டிடை எயினர்கள் பரிசில் பெறச் செல்வோர்க்குப் புல்லரிசிச் சோற்றைத் தருவர்.*

*ஐந்திணைகளும் அழகுற வருணிக்கப்பட்டுள்ளன. இப்பாட்டில் கச்சியம்பதி (காஞ்சிபுரம்) கவினுற விளங்கு கின்றது. இதனைத் தலைநகராகக் கொண்டு இளந் திரையன் நூற்றுவரை வென்ற பஞ்சவரைப் போலப் பகைவரை வென்று பாணர் முதலியோரைப் புரக் கின்றான். அவனைச் சார்ந்து,*

**"மள்ளர் மள்ள மறவர் மறவ**
**செவ்வர் செவ்வ செருமேம் படுந"**

*(அடிகள் 455—456)*

*என வாழ்த்துவோர்க்கு வரையாது வழங்குவான்.*

*கடியலூர் உருத்திரங் கண்ணனார் அழகிய சிறந்த உவமைகளை ஆங்காங்குப் பொருத்தமுற அமைத் துள்ளார். பாணன் கையில் ஏந்திய யாழ் நரம்பு நெகிழ்ந்தும் இறுகியும் தோன்றும் தோற்றம் பாண னுடைய மனைவியின் கையில் நெகிழ்ந்தும் இறுகியும் உள்ள வளையலைப் போல் அமைந்துள்ளது என்கிறார்.*

*தொண்டைமானின் மறுவற்ற சிறப்பிற்கு, மாசற்ற தூய வலம் புரிச்சங்கு உவமை கூறப்பட்டுள்ளது. காஞ்சி*

புரத்தின் புகழ் மணத்திற்குப் பலாப்பழத்தின் மணம் உவமையாகத் தரப்பட்டுள்ளது. சிறந்த நூலாடையின் நுண்மைக்குப் பாலாவியின் நுண்மை உவமையாகிறது. இவ்வாறாக இப்பாடலில் சிறந்த பல உவமைகளைக் காணலாம்,

அந்தணர்கள் தங்கள் அருங்கடன் இறுக்கும் முறை, பேய்க் கூட்டங்கள் தங்களை அழுத்தும் பசிப்பிணியைக் கூறுதல், விலங்குகள் முனிவர் மொழிவழி ஏவல் கேட்டல், மகளிர் உப்பு வண்டியை ஓட்டிச் செல்லுதல், வணிகர்கள் மிளகுப் பொதியைக் கழுதை மேல் ஏற்றிச் செல்லுதல், கலங்கரை விளக்கத்தின் சிறப்பு முதலிய பல செய்திகளைப் பெரும் பாணாற்றுப் படையில் காணலாம்.

## பாட்டுடைத் தலைவன்

இந்நூலின் பாட்டுடைத் தலைவன் தொண்டைமான் இளந்திரையன். இவன் முடியுடை மன்னர் மூவரோடும் சேர்த்து எண்ணப்படும் பெருமை வாய்ந்தவனேனும் இவனைக் குறுநில மன்னனாகப் பண்டையோர் கொண்டிருந்தனர் எனத் தெரிகிறது. இவன் நல்லிசைப் புலவர் வரிசையில் சேர்ந்த பெருமை வாய்ந்தவன். இளந்திரையம் என ஒரு நூல் இவனால் செய்விக்கப் பெற்றதென்பர். இவன் பரம்பரையோடும் மிக்க பெருமையுடையவர்.

## யாழ் வருணனை

பாதிரிப் பூவின் உள்ளிடத்தைப் போன்ற நிறமூட்டலுற்ற தோல்; தோல்களின் வேறுபாடு தெரியாமல் இசைத்தலுறும் போர்வை; இருள் செறிந்த உள்நாக்கு இல்லாத வாய்; வளைந்த கடை; நெகிழவும் இறுகவும் கூடிய வார்கட்கு; நீலமணி போன்ற தண்டு, பொன் கம்பி போன்ற முறுக்கடங்கின நரம்பின் கட்டமைந்த யாழ்.

## ஆற்றுப்படுத்தல்

யாழை இடைத்தோள் பக்கத்தில் அணைத்து, பழுத்த மரத்தைத் தேடித்திரியும் பறவைகளைப் போலப் பசி மிகுதியால் அழுகின்ற சுற்றத்துடனே ஓரிடத்திராமல் பயனின்றி ஓடித்திரியும் பாண! பெரிய பஞ்சத்தில் மேகம் மழையைச் சொரிந்தாற் போல எம்முடைய பெரிய சுற்றத்தோடு, பெரிய செல்வத்தைப் பெற்று, குதிரைகளையும் யானைகளையும் வாங்கிக் கொண்டு யாம் அவன் ஊரினின்றும் வருகின்றோம்.

முரசு முழங்குகின்ற நாற்படையையும் உடைய சேர சோழ பாண்டியனென்னும் மூவரிலும் குற்றமற்ற தலைமையினையும் செங்கோலையும் உடைய சோழன் குடியிற் பிறந்தோன். கடலின் திரை கொண்டு வந்து ஏறவிட்ட மரபால் பல வேற் படையினையுடைய திரையன் என்னும் பெயரையுடையவன். நீங்களும் அவனை நினைப்பீராயின் நின் நெஞ்சு சிறப்புக்களைப் பெறுக. நினது மிடி கெடுவதாக.

## வழியின் அருமை

அவனை நினைத்துப் போகின்ற நீ அவன் தன்மையைக் கேட்பாயாக. அவனது நிலத்தில் வழிப் போவோரை வெட்டி, அவர் கையிலுள்ள பொருள்களைக் கைக்கொள்ளும் கொடுமையுடையோர் இல்லை. உருமேறும் இடியாது. பாம்புகளும் கொல்லுதலைச் செய்யா. காட்டிடத்துப் புலி முதலியனவும் வருத்தம் செய்யா. அக்காட்டின்கண் இளைத்த இடத்தே இளைப் பாறி நீ விரும்பின இடத்தே தங்கிச் செல்வாயாக!

உப்பு வணிகர் ஊர்கள் தோறும் செல்லும் நெடிய வழியையும் கடந்து செல்வீர். விழுப்புண்பட்ட வணிகர் உடைவாள், வில் இவைகளோடு செல்வர். கழுதையின்

மேல் மிளகு ஏற்றிச் செல்வோரைக் காண்பீர்கள். வழியில் எயின் குடியிற் பிறந்த மகளிர் நிலவுரலில் புல்லரிசியைச் சொரிந்து உலக்கையாற் குத்துவர். நீங்கள் பாணச் சாதியேம் என்று கூறுவீராயின் தேக்கிலையில் உணவளிப் பர். சுற்றத்தோடு உண்டு பசியாறுவீர்.

அதையடுத்து கானவர் முயல்களைக் கொள்ளை கொண்டுண்ணும் பாலை நிலம். அருஞ்சுரத்தைக் கடந்த பின்னர் எயினச் சாதியில் உள்ளாருடைய அரணில் தங்கின் நெல்லரிசிச் சோற்றை உடும்பினது பொரியலோடு மனைகள் தோறும் பெறுவீர். மறவர்கள் விடியற்காலை யில் பசுக்களைக் கவர்ந்து, அவைகளைக் கள்ளுக்கு விலை யாகப் போக்கி, உண்டு மகிழ்வர். மத்தளம் கொட்டி ஆடும் குடியிருப்புகளைக் கடந்து போவீர்.

இடையர் குடியிருப்புக்களில் இறுகத் தோய்ந்த இனிய தயிரைக் கடைவர். அதை எடுத்துக் கொண்டு குறிஞ்சி நிலத்துக்குப் போவர். ஆய்ச்சியர் மோர் விற்றுப் பெற்ற நெல் முதலியவற்றில் சுற்றத்தாரை உண்பிப்பர். நெய் விற்ற விலைக்குப் பசும்பொன்னை வாங்காமல் பால் எருமையையும் பசுவையும் வாங்குவர். இடையர் குடி யிருப்பில் தங்குவீராயின் செவ்வித் தினையரிசியால் ஆக்கின பதமான சோற்றைப் பாலுடன் பெறுவீர்கள்.

அதன் பின்னர் உழவர் குடியிருப்பு வழியே செல்லுவீர். உழவர் பயிரிடும் பாங்கைப் பார்த்துக் கொண்டே சென்று பெரிய ஊர்களில் தங்குவீர். நெற் சோற்றைக் கோழிப் பொரியலோடு பெறுவீர்கள். கருப்பஞ் சாற்றைக் குடித்துப் பின்னர் அக்கரும்பின் கட்டியைத்தின்பீராக.

கடைசியாகப் பரதவர் வாழுமிடம் போவீர்கள். அங்கு நறிய கள்ளை மீன் வறுவலோடு உண்பீர்கள். வழியில் அந்தணர் வீடுகளையும் கடந்து செல்வீர்கள். அந்தணர் வேதத்தை ஓதும் ஒலி கேட்கும். பார்ப்பினி

பதமறிந்து அட்ட பாற்சோறும், பருப்புச் சோறும் ஊறுகாயோடு அளிப்பாள் நீர் பெயற்றென்னும் ஊரின் எல்லையில் போவீர்கள். பரதவர் தெருக்களையும் பல உயர்நத மாடங்களையும் கடந்து செல்வீர். இங்கு பட்டினம் என்பது மகாபலிபுரத்தைக் குறிக்கிறது. அதுவே தொண்டை நாட்டின் துறைமுகமாக விளங்கியது.

## கலங்கரை விளக்கம்

மகாபலிபுரத்தில் மேற்கூரை இல்லாத உயர்ந்த மாடத்தில் இராக்காலத்தில் கொளுத்தின விளக்கு கடலில் ஓடுங்கலங்களை, இது நம் துறையென்று அழைக்கும் துறையைக் கடந்து செல்வீர். பூந்தோட்டங்கள், பலா, தென்னை, வாழை, பனை முதலிய மரங்கள் நிறைந்த தோப்புக்கள் வழியில் உண்டு, புது வருவாயையுடைய செல்வமிக்க பாக்கங்களைக் கடந்து செல்வீர்.

## காஞ்சி மாநகரம்

திருவெஃகா என்பது இப்போது யதோக்தகாரி சன்னதி என்று வழங்கும் பழைய கோயில், அழகிய பக்க மலையில் யானை கிடந்தாற் போலப் பாம்பணையாகிய படுக்கையில் துயில் கொண்டோனுடைய திருவெஃகா சூரிய ஒளி நுழையாத இளமரக்காவில் உள்ளது. அங்குள்ள திருமாலை வாழ்த்தி, நும்முடைய இனிய யாழைச் சிறிது வாசித்து அவ்விடத்தினின்றும் போமின். (காஞ்சிபுரத்திலுள்ள 18 திருமால் கோவில்களுள் இது காலததாற் முந்தியது எனத் தோன்றுகிறது).

ஆண்யானைகளும் பெண்யானைகளும் நெய்யை வார்த்து மிதித்த கவளங்களைத் தின்கின்றன. யானைப் பாகர் சோர்வுற்றிருந்ததை அறிந்து சூற்கொண்ட மந்தி அக்கவளத்தைக் கொண்டு போய்த் தின்னும். அத்தகைய சோலையினையும் தேர் ஓடித்தாழ்ந்த நீண்ட தெரு

வினையும் புகழ் மிக்க படையினையும், பண்டங்களை விற்றலும் கொள்ளலும் பொருந்திய கடைகளையும் உடைய மூதூர் காஞ்சிமாநகரம்.

இது பரிசிலர்க்கு அடையாத வாசலையும் காவற்காடு சூழ்ந்த பக்கத்தையும் திருமாலுடைய உந்திக் கமலக் கொட்டை போல அழகு விளங்கத் தோன்றும். இதனாற் பழமையும் சிறப்பும் தூய்மையும் கூறினார். செங்கற் களால் செய்யப்பட்டு, உயர்ந்த மதிலையும் பூவாமற் காய்க்கும் மரங்களில் விசேடித்தும் பழத்தின் இனிமையால் மேலாகச் சொல்லப்படும் பலாமரத்தை யொக்க, உலகத்து நகரங்களில் விசேடித்துச் சொல்லப் படுகிறது. பல சமயத்தாரும் தொழும்படி எடுத்த விழாக்களில் ஏனை நகர்களின் மேலான வெற்றியையுடையது.

## இளந்திரையன்

துரியோதனன் முதலிய நூற்றவரும் களத்தில் படும்படி பெரிய போரை வென்ற தருமன் முதலியோரைப்போல், நெடிய தேரையும் தொலையாத போரையும் உடைய பெருஞ்சேனையோடு கோபித்துத் தன் மேல்வந்த பகைவர் தோற்றபோது வெற்றிக் களிப்புத் தோன்ற ஆரவாரித்து, கை வளர்ப்பத்தையுடைய தலைவன் தன்பால் வந்தோர்க்குப் பாதுகாவலாகிய காஞ்சிபுரத்தே இருக் கின்றான்.

தன்னுடன் பொருதாரின் தேயத்தில் ஊர்களின் மன்றுகள் மக்கள் இல்லாமல் பாழாகும்படி அழித்தலும், தன்னை விரும்பியிருந்தோர் தேயம் திருமடந்தை பொலிவு பெற்றிருப்ப அளித்தலும், தனக்கு எளியவாய் நடக்கையி னால். அவன் தாளை விரும்பினவர்களும், வேறோர் உதவி இல்லாதவர்களுமாய் மலையினின்றும் விழுகின்ற அருவி அம்மலையிலுள்ள பண்டங்களைக் கடலுக்குக் கொண்டு சென்றாற்போலப் பலவகைப்பட்ட திறைகளுடன் சென்று

வணங்கின அரசர் யானை முதலிய செல்வங்களோடு நெருங்கி நின்று, திரண்டு, காலம் பார்த்திருக்கும் முற்றத் தினை யுடையது அவனது அரண்மனை.

கொல்லனது ஓசையை வெருவி, சேவல் இனிய துயிலை நீங்கும் நகர், இறைவன் தங்கும் நகர்; திருமகள் தங்குகின்ற அகன்ற கோயிற் கண்ணே மூன்று தொழிலை யுடைய கடலுக்கு நடுவே சூரியன் தன் கதிர்களைப் பரப்பித் தோன்றினாற்போல் நடுவு நிலையை ஆராய்ந் தறியும் மயக்கம் தீர்ந்தவன். அறிவாலே அவரவர் விரும்புவனவற்றை அருளிச் செய்து புலவர்க்குப் பேரணிகலங்களையும் கொடுத்து, வேண்டி வந்த பரிசிலர்க் கும் கொடுத்து, அமைச்சரோடும் இருந்தோனை அணுகுங்கள்.

சிங்கக் குருளை யானையின் மத்தகத்தைக் கொள்ள விரும்பினாற்போல, பகைவர் மதில்களை யழித்து வீரமுடி புனையும் வெற்றியினை விரும்புவதல்லது உலகெங்கும் பரக்கும் வாள் ஏந்திய கையினையும் பகைப் புலத்துக் கொள்கையினையும் உடைய தொண்டைக் கொடியைச் சூடினோருடைய குடியில் உள்ளவனே! மன்னர் மன்ன! மறவர் மறவ! செல்வர் செல்வ! செருமேம்படுக பெரும! என வாழ்த்துங்கள்.

கடலில் சென்று சூரனைக் கொன்ற முருகனைப் பெற்ற வயிற்றினையும், பேய்களாடும் துணங்கைக் கூத்தையும், அழகையும் உடைய இறைவிக்குப் பேய்கள் சொன்னாற்போல அமையாக் கொடையையுடைய நின் பெரிய பெயருள் சிலவற்றைச் சொல்லிப் புகழ்ந்து வந்தேன். நெடுங்காலம் வாழ்வாயாக, எனச் சொல்லி, பெரிய யாழை முறைப்படி வாசித்து, கையால் தொழுது வாழ்த்துவாயாக!

## பரிசிலரை உபசரித்தல்

*நின்னுடைய கலைகள் எல்லாம் தெரிவதற்கு முன்னே, நீ நின்ற நிலையிலே, குளிர்ந்த உலகமெல்லாம் கேடின்றாக விளங்கும்படி யாக்கை, செல்வம் முதலியவை நிலையில்லாத உலகத்திடத்து நிலைபேறுடைய புகழை நாம் பெறுதல் நன்றென்று ஆராய்ந்து, தன்னை அணுகுவதற்கு விரும்பியழைத்து, நின்னுடைய இடையிற் கட்டிய கந்தையைப் போக்கி, மெல்லிய துகில்களைச் சுற்றத்தாரோடு சேர உடுக்கச் செய்வான்.*

*பல இறைச்சியிற் கொழுவிய தசைகளும் செந்நெல் அரிசிச் சோறும், இனிய சுவைமிக்க கண்ட சருக்கரை முதலியவற்றோடு பிறவும் கூடிய உணவை, வெள்ளிக் கலங்களை நும்முடைய பிள்ளைகளின் இடையே பரப்பி முகமலர்ந்து ஆசையுடன் உண்ணச் செய்வான்.*

*மழையின் மின் ஓடினாற் போலப் பொன்னரி மாலையை விறலியர் சூடச் செய்வான். குதிரைகள் நான்கைச் சேரப் பூட்டி, பொன்னாற் செய்த தேரைத் தருவான். கொடைமேல் விருப்பம் தவிரானாய்ப் பகைவரிடமிருந்து கவர்ந்த குதிரைகளுடன் பொற் சேணங்களையும் தருவான். அவன் நீ சென்ற அன்றே இவை தவிர வேறு பரிசல்களையும் தருவான்.*

*இனிய தாளத்தில் இன்னரமென்னும் பறவைகள் பாடும் தெய்வங்களையுடைய சாரலிடத்து மயில்கள் ஆரவாரிக்கும். இளமரக் காட்டில் முசுக்கலைகள் பாய்ந்து மலர்களைச் சிந்தும். அக்காடுகளில் மந்திகள் சிதறிக் கிடக்கும் செத்தையை வாரும். மானும் புலியும் துயில் கொள்ளும் முற்றத்தில் சிவந்த தீயைக் கைவிடாமற் காத்துப் போந்த முனிவர்கள் வெள்ளிய் கொம்பையுடைய களிறு முறித்துக் கொண்டு வந்த சமிதையால் வேள்வியைச் செய்வர். இவற்றால் விளங்குகின்றது அருவியையுடைய*

மலை, இச்சிறந்த மலையை ஆளும் உரிமையுடையோன் தருவான்.

## முடிவுரை

பட்டினம் என்பதனை மகாபலிபுரம் என நினைத்தற்கு இடமுண்டு. திருவெஃகா என்பது திருமாலினுடைய நூற்றெட்டுத் திருப்பதிகளுள் ஒன்று. இது காஞ்சியம்பதியில் உள்ளது. இங்கே திருமால் சேஷசயனத் திருக்கோலங் கொண்டவராக எழுந்தருளியிருக்கின்றார்.

பிள்ளைகளுக்கு வெள்ளிக் கலங்களைப் பரப்பி உணவு அளித்தான். எனவே தலைவராயினார்க்குப் பொற்கலன் பரப்புவன் என்பது பெறப்படுகின்றது. இந்நூலின் மூலம் பழங்காலச் செய்திகள் பலவற்றை நாம் நேரில் கண்டாற் போன்று அறிகிறோம். சங்கத்தமிழ் நூல்கள் சுவை மிக்கன. வாசகர்கள் படித்து மகிழ்வார்களாக.

காஞ்சிபுரம் பழைமையான நகரங்களுள் ஒன்று. என்பதற்கு இந்நூல் சான்று பகர்கின்றது. ஐ. நா. கல்வி விஞ்ஞான மற்றும் கலாசார அமைப்பு (UNESCO) United Nations Educational, Science and Cultural Organisation சார்பில் தீவிர ஆய்வு நடத்த இந்நகர் தேர்ந்தெடுக்கப் பட்டுள்ளது.

## வெண்பா

**கங்குலும் நண்பகலும் துஞ்சா இயல்பிற்றாய்**
**மங்குல்சூழ் மாக்கடல் ஆர்ப்பதூஉம்— வெஞ்சினவேல்**
**கான்பயந்த கண்ணிக் கடுமான் திரையனை**
**யான்பயந்தேன் என்னும் செருக்கு.**

# 2. மணிமேகலை

## (கி. பி. இரண்டாம் நூற்றாண்டு)

சிலப்பதிகாரமும் மணிமேகலையும் இரட்டைக் காப்பியங்கள் எனப்படும். இரண்டும் ஒரே காலத்தில் எழுந்தன என்பது சிலப்பதிகாரம் நமக்கு உணர்த்தும் செய்தி. ஐம்பெருங் காப்பியங்களில் இவை இரண்டும் வைத்து எண்ணப்படுகின்றன. இந்நூற் கதை சிலப்பதிகாரக் கதையோடு தொடர்புடையது.

கோவலனுக்கும் மாதவிக்கும் பிறந்த பெண் மணிமேகலை. அவளே இக்கதையின் தலைவி. கண்ணகி வீரச் செல்வியாகவும், மாதவி அன்புச் செல்வியாகவும் காட்சியளிக்கும் நேரத்தில் மணிமேகலை அறச் செல்வி யாக- தவச் செல்வியாக- காட்சியளிக்கிறாள். கதைத் தலைவியின் பெயரே காவியத் தலைப்பாய் அமைந் துள்ளதை நாம் இங்குக் காண்கிறோம். மக்கட் சமுதாயத்தை அல்வழி நீக்கி, நல்வழிப்படுத்த எழுந்த ஒரு சீர்திருத்தக் காவியம் மணிமேகலை.

இந்நூலை இயற்றியவர் சாத்தனார் என்பவர். இவர் சமயம் பௌத்தம். புத்த சமயக் கருத்துக்களைப் பரப்ப வேண்டும் என்ற குறிக்கோளுடனேயே அவர் இந்நூலை இயற்றினார் என்பது தெரிகிறது. இந்நூலில் விழாவறை காதை தொடங்கி, பவத்திறம் அறுகெனப் பாவை நோற்ற காதை வரை முப்பது காதைகளையுடையது. கடைசி மூன்று காதைகளும் காஞ்சி மாநகரில் நடைபெற்ற செய்தி களைக் கூறுகின்றன. இந்நூலில் காஞ்சிபுரம் மிகச் சிறப் பாகப் புகழப்படுகிறது.

## காஞ்சி மாநகரம்

மணிமேகலை காலத்தில் தொண்டை நாட்டின் தலை நகரமாகக் காஞ்சி மாநகரம் விளங்கியது. 'தேவலோகந் தான் மண்ணுலகில் வந்து கிடந்ததோ என்று மதிக்கும்படி யாக இருந்தது காஞ்சி' என்று மணிமேகலை புகழ்கிறது. காஞ்சி என்பது பொன். காஞ்சிநகர்- பொன்னகரம்; இப்பெயர் இதன் அழகையும் வளத்தையும் காட்டும்.

காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு சோழ மன்னர்கள் ஆண்டு வந்தனர். அந்நகரத்தில் தவம் புரிவோர், சமயவாதிகள் பலர் இருந்தனர். இதனால் 'தொண்டை நாடு சான்றோர் உடைத்து' என்னும் பெருமை பெற்றது. பதினெட்டு மொழிகளைப் பேசும் பல நாட்டு மக்களும் அந்நகரத்தில் இருந்தனர். அந்நகரின் நடுவில் புத்தர் கோயில் இருந்தது. நகரின் தென் மேற்கில் ஒரு பூஞ்சோலை, குளம், சோலையில் புத்த பீடிகை இவைகள் அமையப்பட்டிருந்தன. இக்குறிப்புக்கள் மணிமேகலை நூலில் காணப்பட்டவை.

## கச்சிமாநகர் சென்றது

**காதை எண். 28.**

மணிமேகலை சமயவாதியரின் பல்வேறு கொள்கை களையும் கேட்டறிந்த பின்னர், வஞ்சி மாநகர் புறஞ்சேரியை விட்டு நகரினுள் சென்றாள். நகரின் பல சிறப்புக்களையும் கண்டு கோவலன் தந்தை மாசாத்துவானை அடைந்து தொழுது நின்றாள். தனக்கு நேர்ந்தவற்றைத் தன் பாட்டனுக்குக் கூறினாள். அவன் தன் துறவையும் தன் முன்னோர் செய்த புத்தமதத் தொண்டினையும் கூறினான். இன்னும் கேள்;

''காவிரிப் பூம் பட்டினம் கடலால் கொள்ளப்பட்டது. அறவண அடிகள், மாதவி, சுதமதி ஆகிய மூவரும் கச்சியம்

பதிக்குச் சென்றனர். மழையில்லாமல் காஞ்சி நகரத்தில் மிக்க வறுமை உண்டாயிற்று. பல உயிர்கள் இறந்தன. அந்நகரத்தில் ஐயமிடுவோர் எவரும் இலர். ஆதலால் அந்நகரமடைந்து எல்லா உயிர்களையும் பாதுகாத்தல் உனக்குக் கடனாகும்'' என்றான்.

மணிமேகலை தன் பாட்டனை வணங்கி, அமுத சுரபியைக் கையிலேந்திக் கொண்டு, வஞ்சி நகரிலிருந்து வான்வழியே சென்று, காஞ்சி நகரத்தைக் கண்டு மனம் இரங்கினாள். புத்தர் கோயிலை வணங்கி ஒரு சோலையில் தங்கியிருந்தாள். செய்தியறிந்த மன்னன் அங்கு வந்து சேர்ந்தான்.

''நல்லறம் மேற்கொண்டுள்ள நங்கையே! செங்கோல் முறை தவறியதாலோ, துறவோர் தம் தவநெறியிற் பிழைத்ததாலோ, பெண்களின் கற்பு நெறி குறைபட்டத னாலோ இந்த நல்ல நாடு வறுமையுற்றது. என்ன செய்வது என்று அறியேன்'' என்றனன்.

மேலும் கூறினான் : ''ஒரு தெய்வத்தின் ஏவற்படி கோமுகிக் குளமும், சோலையும் விளங்கும் மணிபல்லவம் இங்கு அமைக்கப்பட்டுள்ளது. காண்க'' என்றான்.

கண்டு வந்த மணிமேகலை பிறப்பு காட்டிய தரும பீடிகையும், தீவதிலகை கோயிலும், மணிமேகலா தெய்வக் கோயிலும் கூட அமைத்து, விழாச் செய்ய, சோழ வேந்தனை ஏவினாள். அமுதசுரபியைப் பாத பங்கயப் பீடிகையின் மீது வைத்து நின்று, ''எல்லா உயிரும் உணவு உண்ண வருக'' என்று அழைத்தாள் மணிமேகலை.

குருடர், செவிடர், முடம்பட்டோர், பாதுகாவல் இல்லாதவர், ஊமையர், நோய்வாய்ப்பட்டோர் முதலிய பலரும் திரண்டனர். அனைவருக்கும் உணவளித்து பசிப்பிணியைத் தீர்த்தாள்.

அப்புண்ணிய விசேஷத்தால் எங்கும் மழை பெய்தது. வளங்கள் மிகுந்தன. மாதவியையும், அறவண அடிகளை யும் மணிமேகலை வணங்கி ஆண்வேடத்தைக் களைந் தாள்.

## தருமம் கேட்டது

**காதை எண் 29.**

இப்பகுதியில் அறவண அடிகள் புகார் நகரம் கடலால் கொள்ளப்பட்ட செய்தியைக் கூறினார்; மணிமேகலை அறவண அடிகளை வணங்கி நின்றாள். அவர், ''பீலிவளை பெற்ற குழந்தையைக் கம்பளச் செட்டி கடலிற் கெடுத்தது தெரிந்த அரசன் வருத்தமுற்றான். அக்குழந்தையைத் தேடி அலைந்தான். அதனால் காவிரிப் பூம்பட்டினத்தில் இந்திர விழா செய்யப்படாமல் போயிற்று. மணிமேகலா தெய்வம் அது தெரிந்து, 'நகரைக் கடல் கொள்ளுக' என்று சபித்தது. இந்திரனும் சபித்தான். அதனால் அந்நகரம் கடலால் விழுங்கப் பட்டது. அதன் பின்னர் உன் தாயாரும் யானுமாக உன் பொருட்டு இந்நகரத்திற்கு வந்து சேர்ந்தோம்'' என்று கூறினார்.

மணிமேகலை, ''மணிபல்லவத்தில் புத்த பீடிகையைக் காத்துக் கொண்டிருக்கும் தீவ திலகை என்பவளும் இச் செய்தியைச் செப்பினாள். நான் வேற்றுருக் கொண்டு சென்று வஞ்சி நகரம் அடைந்தேன். அங்கிருந்த சமய வாதிகள் கூறிய கொள்கைகள் யாவும் மனத்திற்குப் பொருந்தவில்லை. அந்த ஆண் வடிவத்தைத் துறந்து, இந்நகரத்தை யடைந்து தங்களைச் சரணடைந்தேன். தேவரீர் அடியேனுக்கு உண்மைப் பொருளை உணர்த்தி அருள வேண்டும்'' என்று பிரார்த்தித்தாள்.

அவர் காண்டல் அளவை, கருதல் அளவை என்னும் இரண்டு அளவைகளின் இலக்கணங்களையும் அவற்றின்

போலி வகைகளையும் உண்மை அறிவு உண்டாவதற்குக் கருவியாக அவளுக்கு விளங்கக் கூறினார்.

## பாவை நோற்ற காதை

**காதை எண். 30.**

தானஞ் செய்தலை மேற்கொண்டு, சீலத்தில் முதன்மையாக நின்று, பழம்பிறப்பின் உணர்ச்சியை அடைந்த மணிமேகலை,

**புத்தம் சரணம் கச்சாமி**
**தர்மம் சரணம் கச்சாமி**
**சங்கம் சரணம் கசசாமி**

என்பனவற்றை மூன்று முறை சொல்லி, மும்மணி களையும மூன்று முறை வணங்கி, அறவண அடிகளைச் சரணாக அடைந்தாள். அறவண அடிகள் பௌத்த தருமத்தை உபதேசிக்கத் தொடங்கினார்.

''உயிர்கள் எல்லாம் அறிவில்லாமல் இருந்த காலத்தில் தேவர்கள் பிரார்த்திக்க, புத்த தேவன் துடித லோகத்தி லிருந்து இவ்வுலகிற்கு வந்து, அவதரித்து, அரசமரத்தின் அடியில் இருந்து, தத்துவத்தை ஆராய்ந்தறிந்தார். மாரனை வென்றார். முக்குற்றங்களையும் அறுத்தெறிந் தார். அவர் அருளிச் செய்த இன்ப மயமாகிய கட்டுரை யாகும் இது. பண்டைக்காலத்தில் அவதரித்த அளவற்ற புத்தர்கள் கருணை மிகுந்து திருவாய் மலர்ந்தருளியதும் இதுவே'' என்று சொன்னார்.

அதன் பின்னர் பேதமை முதலிய பன்னிரு நிதானங் களின் தோற்ற ஒடுக்கங்களையும் பிறவற்றையும் முறையே விளங்க உபதேசித்தார். ''உன் மனத்திருள் நீங்குக'' என்று கூறி ஞான தீபத்தை நன்கு காட்டினார். மணி மேகலை அவ்வுபதேச மொழிகளைக் கேட்டு ஐயம்திரிபற உணர்ந்து, 'பிறவித் துன்பம் ஒழிவதாக' என்று காஞ்சி மாநகரிலேயே நோற்றுக் கொண்டிருந்தாள்.

# 3. பெரிய புராணம்

## (கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டு)

தேவாரம் பாடிய மூவர் உள்ளிட்ட அறுபத்து மூன்று அடியார்களுடைய வரலாற்றினை இந்நூல் கூறுகிறது. இதனை இயற்றிய சேக்கிழார் பெருமான் இந்நூலுக்கு இட்ட பெயர் 'திருத்தொண்டர் புராணம்' என்பதாகும். தொண்டர் சீர் பரவுவார் என்று இவர் வழங்கப்படுகிறார். திரிசிரபுரம் மகா வித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்கள் தம் நூலில், 'பக்திச்சுவை நனி சொட்டச் சொட்டப் பாடிய கவிவலவ' என்று இவரைச் சிறப்பிக்கின்றார். இந்நூல் பன்னிரண்டாம் திருமுறையில் சேர்க்கப்பட்டிருக்கிறது.

சுந்தரர் இயற்றிய திருத்தொண்டர் தொகையையும் நம்பியாண்டார் நம்பி இயற்றிய திருத்தொண்டர் திருவந்தாதியையும் அடிப்படையாகக் கொண்டு சேக்கிழார் பெரிய புராணத்தைப் பாடியருளினார். இக்காப்பியத்தின் தலைவர் சுந்தரர், பக்தியின் பெருமை, மக்கள் வாழ்க்கை முறை, ஆட்சி முறை, தமிழ் நாட்டின் திருத்தலங்கள் ஆகிய செய்திகள் இந்நூலில் விளக்கமாகக் கூறப்பட்டு உள்ளன

சைவ சமயாச்சாரியார் நால்வருள் அப்பர், சம்பந்தர், சுந்தரர் ஆகிய மூவரைப் பற்றியும் இந்நூலில் விளக்கமாகப் பாடியுள்ளார். இம்மூவரும் காஞ்சிபுரத்திற்கு எழுந்தருளி ஏகாம்பரநாதர் மீது பதிகங்கள் பாடியுள்ளனர். அப்பாடல்கள் இந்நூலில் அனுபந்தமாகச் சேர்க்கப் பட்டுள்ளன.

சேக்கிழார் பெருமான் காஞ்சி மாநகரின் சிறப்புக் களைத் திருக்குறிப்பு நாயனார் புராணத்தில் விரிவாகப் பாடியுள்ளார்.

## 1. திருக்குறிப்புத் தொண்டர்

திருக்குறிப்புத் தொண்டர் நாயனார் புராணத்தில் 128 பாடல்கள் உள்ளன. அவற்றுள் இந்த நாயனாரைப் பற்றி ஈற்றிலுள்ள 18 பாடல்கள் (111-128) தாம் கூறு கின்றன. மற்ற 110 பாடல்களில் தொண்டை நன்னாடு, குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்ற நால்வகை நிலங்களைப் பற்றிய வருணனை, அவைகளின் திணை மயக்கம், தொண்டை நாட்டில் பாயும் பாலாற்றின் சிறப்புக்கள், இந்த நாட்டில் உள்ள திருக்காளத்தி, திருவிடைச்சுரம், திருக்கழுக்குன்றம், திருமுல்லை வாயில், திருவல்லம், திருமாற்பேறு, திருப்பாசூர், திருவொற்றியூர், திருமயிலாபுரி, திருவான்மியூர், மாமல்லை முதலிய திருத் தலங்களைப் பற்றிச் சேக்கிழார் பெருமான் விரிவாகப் பாடியுள்ளார்.

காமாட்சியம்மன் காஞ்சிபுரம் வந்து தவம் இயற்றியது, முப்பத்திரண்டு அறங்களை வளர்த்தது பற்றிக் கூறுகின்றார். அப்போது இருந்த காஞ்சி நகரக் கோட்டை, மதில்கள், தெருக்கள், நகர மக்கள், மாதர்கள் முதலியோருடைய வருணனைகள் வருகின்றன. இங்குள்ள புண்ணிய தீர்த்தங்கள், கோயில்கள், மாளிகைகள், தேரோடும் வீதிகள், அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் ஆகியோர் வாழிடங்கள், இந்நகரில் நடைபெறும் விழாக்கள் ஆகியவற்றைப் பற்றி சொற்செறிவும், பொருட்செறிவும் கூடிய பாடல்களில் சேக்கிழார் பெருமான் வருணிக்கின்றார். வாசகர்கள் படித்து மகிழ் வார்களாக.

பெருங் காவியத்தில் பொதுவாகக் கூறப்படும் வருணனைகள் யாவும் இங்குதான் கூறப்பட்டுள்ளன. காஞ்சி மாநகரின் கிழக்கு எல்லையில் வரதராஜப் பெருமாளும் மேற்கு எல்லையில் ஏகாம்பர நாதரும், நடுவே காமாட்சியம்மையும் கோயில் கொண்டிருக்கும் விதம் அம்மையின் திருமணக் கோலத்தை அகக்கண்முன் நிறுத்துவதாகும். திருவேகம்பம், குமரகோட்டம், காம கோட்டம் ஆகிய இவை அமைந்திருக்கும் பாங்கு சத்து, சித்து ஆனந்தம் என்ற முழு முதற் பொருளின் சோமாஸ் கந்தமாகிய அருள் வடிவத்தை நினைவுறுத்துவதாகும்.

## அன்னையின் தவம்

ஒரு சமயம் தேவி இறைவனின் கண்களை விளையாட் டாகத் தம் இரு கைகளால் பொத்திவிட அண்ட சராசரங் களும் ஒளியிழந்து எங்கும் இருள் சூழ்ந்தது. மறையோர் களும் தேவர்களும் தங்கள் தங்கள் கர்மாக்களைச் செய்ய முடியாமல் போய்விட்டது. தம்மால் நேர்ந்துவிட்ட இக் குற்றத்திலிருந்து விடுபட தேவி இறைவனை விட்டுப் பிரிந்து பூவுலகம் வந்து கம்பை ஆற்றின் கரையில் அவரைக் குறித்துக் கடுமையான தவம் இயற்றினாள்.

இந்தச் சம்பவத்தை இன்னொரு விதமாகவும் சொல்வர். ஒரு சமயம் தேவி கைலாயத்தில் பரமேஸ் வரனுடன் உரையாடிக் கொண்டிருக்கையில் வேதங்களில் எவ்வளவோ விவரித்திருந்தாலும் அவரை எந்த விதத்தில் வழிபட்டால் அவருக்கு மிகவும் பிரீதியாக இருக்கும் எனக் கேட்டாள். ஈசனும் தமக்கு அர்ச்சனையே பிடித்தமானது எனத் தெரிவித்தார்.

ஈசனை அர்ச்சனை செய்து வழிபட்டு அவர் மனதைக் களிப்பிக்கச் செய்ய வேண்டுமென்று தேவியின் உள்ளத்தில் ஆவல் எழுந்தது. அதை ஈஸ்வரனிடம் வெளியிட்டாள். சிவனும் மகிழ்ந்து தென்திசையில் கம்பையாற்றின் கரையி

லுள்ள காஞ்சி நகரில், தம்மைப் பூசிக்குமாறும் தாம் வந்து அவளை ஆட்கொண்டு அருளுவதாகவும் தெரிவித்தார். தேவியும் பரமனைப் பணிந்து வணங்கி விட்டுப் பூவுலகம் சென்றாள்.

காஞ்சி நகரில் கம்பையாற்றின் கரையில் மாமரம் ஒன்றின் கீழ் மண்ணால் சிவலிங்கம் அமைத்து வழிபட்டு வர ஆரம்பித்தாள் தேவி. இறைவனுக்குச் சிறிது விளையாட விருப்பம் போலும். எதிர்பாராமல் கம்பை யாற்றில் பெருவெள்ளம் வரச் செய்தார். இரு கரைகளை யும் உடைத்தவாறு பெருஞ்சுழிகளுடன் ஆற்று வெள்ளம் பெருகி வந்தது.

வெள்ளத்தைக் கண்டு தேவி அஞ்சினாள். தாம் வழிபடும் இறைவனுக்குத் தீங்கு நேரா வண்ணம் தம் இரு கைகளாலும் லிங்கத்தைக் கட்டி அணைத்துக் கொண் டாள். தேவியின் தழுவலினால் இறைவன் குழைந்து விட்டார். வெள்ளம் வடிந்தது. தமது மேனியில் தேவியின் முலைகளும் வளைகளும் அழுந்தியதால் ஏற்பட்ட தழும்பு களோடு இறைவன் காட்சி தந்தருளினார்.

குறிப்பு :—

பாலாற்றை இங்குக் கம்பையாறு என்று குறிப்பிட்டு இருப்பதாகக் கூறுவர். கோயிலின் உட்புறம் ஆயிரக்கால் மண்டபத்தின் எதிரில் கம்பை என்ற பெயரோடு ஒரு குளம் உள்ளது. அப்போது ஆறாக இருந்தது இப்போது குளத்தளவில் குறுகியிருக்கிறது என்று மற்றொரு சாரார் கூறுவர்.

## திருக்குறிப்புத் தொண்டர்

அத்தகைய சிறப்பு வாய்ந்த காஞ்சி மாநகரில் ஏகாலியர் குலத்தில் சிவபக்தர் ஒருவர் இருந்தார். அவருக்குச் சிவனடியார்களிடம் மிகுந்த பக்தி இருந்தது.

அவர்களது குறிப்பறிந்து அவர்களுக்குத் தொண்டு செய்வதையே தமது பணியாகக் கொண்டார். அடியார்களின் ஆடைகளைப் பெற்றுச் சென்று, நன்றாகத் துவைத்து, உலர்த்திக் கொண்டு போய்க் கொடுப்பார். அதனால் அவரைத் திருக்குறிப்புத் தொண்டர் என்றே எல்லோரும் அழைக்கத் தொடங்கினர்.

தொண்டர்தம் பெருமையை உலகுக்கு எடுத்துக் காட்டி அவரை ஆட்கொள்ள விரும்பினார் சிவபெருமான். குளிர்காலத்தில் ஒருநாள் வயோதிகராய் வேடந்தாங்கி அழுக்கடைந்த கந்தை ஒன்றைப் போர்த்திக் கொண்டு தொண்டரிடம் வந்தார். மிகவும் அழுக்கடைந்து போயிருக்கும் கந்தையை உடுத்தியிருக்கும் சிவனடியாரைக் கண்டு தொண்டர் வேதனையுற்றார். அருகில் சென்று பணிந்து நின்றார்.

''சுவாமி, தாங்கள் அணிந்திருக்கும் ஆடை அழுக்காய் இருக்கிறது. நான் ஓர் ஏகாலி, ஆடையைத் தாருங்கள்; அழுக்குப் போகத் துவைத்து உலர்த்தி எடுத்து வருகிறேன்'' என்றார்.

''ஆடை அழுக்காய் இருந்தால் இருக்கட்டும். என்னிடம் இருப்பதோ இது ஒன்று தான். இப்போது குளிர்காலம். மழை வரும் போல் இருக்கிறது. மழை வந்து விட்டால் குளிர் பொறுக்க முடியாது!'' என்றார் வயோதிக நிலையிலிருந்த எம்பெருமான்.

''சுவாமி, நான் இப்போதே போய் வெள்ளாவியில் வைத்து, அழுக்குப் போக வெளுத்துக் கொண்டு வருகிறேன். தயவு செய்து கொடுங்கள்!'' என்று வேண்டினார். இறைவன் தம்மீது போர்த்தியிருந்த அழுக்கடைந்த கந்தைத் துணியை அவரிடம் கொடுத்தார். ''இன்று மாலைக்குள் கொண்டு வந்து கொடுத்து விடு'' என்று சொன்னார்.

நாயனார் துணியை வாங்கிக் கொண்டு நேராகக் குளத்திற்குச் சென்றார். கந்தையை நனைத்து, ஊற வைத்து, வெள்ளாவிப் பானையில் இட்டார். உச்சி வேளையில் வானம் இருண்டது. கரு மேகங்கள் சூழ்ந்து பெருமழை பெய்ய ஆரம்பித்தது. மழை விட்டதும் துணியைத் துவைத்து உலர்த்திக் கொடுக்கலாம் என்று எண்ணி ஒரு மரத்தடியில் ஒதுங்கி நின்றார்.

நேரம் செல்லச் செல்ல மழையின் வேகம் அதிகரித்தது. கவலை மேலிட்டவராய் நாயனார் வருந்தினார். அந்தி நெருங்கி விட்டது. தொண்டரின் தவிப்பு அதிகமாகியது. சிறிது நேரத்தில் இருட்டி விட்டது. முதியவரின் பழிப்பிற்கு ஆளாக நேரிடுமே என்று பயந்தார். குளக்கரைக்கு விரைந்தார். ''அடியார்க்குத் தீங்கு செய்துவிட்டேனே! இனி உயிரோடு இருந்து என்ன பயன்?'' என்று கண்ணீர் விட்டுக் கதறினார். துணி துவைக்கும் பாறையில் தலையை மோதிக் கொண்டு உயிரைவிட முயன்றார்.

உடனே இருகரங்கள் தோன்றி, அவரது தலை பாறையில் மோதாவண்ணம் பிடித்துக் கொண்டன. நாயனார் திடுக்கிட்டு நிமிர்ந்து பார்த்தார். வானில் எம்பெருமானின் திவ்விய தரிசனத்தைக் கண்டார்.

''அன்பனே, உன் உள்ளத்தில் நிறைந்திருக்கும் பக்தியை எடுத்துக் காட்டவே யாம் இவ்வாறு வந்தோம். எமது உலகத்தையடைந்து என்றும் இன்புற்றிருப்பாய் வா!'' என்று அழைத்தார். இறைவனின் திருவருளைப் போற்றிக் கொண்டாடியபடி தொண்டர், கைலாய வாழ்வு பெற்றார்.

## முத்தீஸ்வரர் ஆலயம்

திருக்குறிப்புத் தொண்ட நாயனாரைத் தடுத்தாட்கொண்டு முக்தியை அளித்த படியினால் இத்தலத்தில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமான் முத்தீஸ்வரர் என்று

விளங்குகின்றார். காஞ்சிபுரம் ஆடிசன் பேட்டையில் (காந்தி சாலையில்) இக்கோயில் இருக்கிறது. ஏகாலிகள் தாம் இக்கோயில் தர்ம கர்த்தாக்கள். நித்திய நைமித்திக பூசைகள் நன்றாக நடக்கின்றன. இக் கோயில் கடை வீதியில் அமைந்திருப்பதால் காலை மாலைகளில் அடியார்கள் கூட்டம் அதிகமாய் இருக்கும். ஆண்டு தோறும் சித்திரை மாதம் சுவாதி நட்சத்திரத்தில் திருக் குறிப்புத் தொண்ட நாயனாரின் குரு பூசையை மிகச் சிறப் பாக நடத்துகிறார்கள். மார்கழி மாதம் திருவாதிரையின் போது பிரம்மோத்சவமும் நடக்கிறது. கோயிலும் நன்றாகப் பரிபாலிக்கப்பட்டு வருகிறது.

## சாக்கிய நாயனார்

**6. வார்கொண்ட வனமுலையாள்**
**உமைபங்கன் கழலே**
**மறவாது கல்லெறிந்த**
**சாக்கியர்க்கும் அடியேன்.**

—சுந்தரர் திருத்தொண்டத் தொகை.

தொண்டை நாட்டைச் சேர்ந்த திருச்சங்க மங்கை என்னும் ஊரில் சாக்கிய நாயனார் வேளாளர் குலத்தில் தோன்றினார். அவர் காஞ்சிபுரம் சேர்ந்து உண்மை ஞானம் அடைவதற்கு முயன்று சாக்கிய (பௌத்த) மதத்தில் சார்ந்து ஆராய்ந்தார். சிவநெறியே நன்னெறி என்பதை உணர்ந்து, சிவபெருமானை வழிபடுவதே உய்யும் நெறியெனக் கொண்டார். தன் வேடத்தை மாற்றிக் கொள்ளாமல், வழிபாடு செய்யத் தொடங் கினார்.

**6. எந்நிலையில் நின்றாலும்**
**எக்கோலம் கொண்டாலும்**
**மன்னியசீர்ச் சங்கரன்தான்**
**மறவாவை பொருளென்றே**

துன்னியவே டந்தன்னைத்
துறவாதே தூயசிவம்
தன்னைமிகும் அன்பினால்
மறவாமை தலைநிற்பார்.

—சாக்கிய நாயனர் (பெரிய புராணம்)

நாள்தோறும் சிவபெருமானை வழிபட வேண்டும் என்று எண்ணினார். சிவலிங்கப் பெருமான் மீது ஒரு கல் எடுத்து எறிந்து அதன் பின்னர் உண்ணச் செல்வார். அது சிவபெருமானுக்கு மலராயிற்று. ஒரு நாள் மறந்து உண்ணச் சென்றார். நினைவு வந்தது. பெருமானிடம் சென்று வழக்கம் போல் கல் எறிந்தார். அப்போது எம் பெருமான் உமையோடு ரிஷபாரூடராய் அடியார்க்குக் காட்சி தந்தார். இறைவன் அவருக்குப் பரம பதத்தை அருளினார். இவர் ஏன் சிவபெருமான் மீது கல் எறிந்தார் என்பதற்கு உரிய காரணங்கள் சரியாகத் தெரியவில்லை. பக்தியின் மேலீட்டால் தான் செய்வது அறியாது கல்லால் எறிந்தார் என்பர் சிலர். தான் அதுவரை வழிபட்ட பௌத்த மதத்தினருக்குத் தான் சிவபெருமானை வணங்க வில்லை; கல்லால் எறிகிறேன் என்று காட்டிக் கொண்டார் என்பர் சிலர்.

## ஐயடிகள் காடவர்கோன் நாயனார்

"ஐயடிகள் காடவர்கோன்
அடியார்க்கும் அடியேன்"

—சுந்தரர்- திருத்தொண்டத் தொகை

தொண்டை நாட்டில் காஞ்சிபுரத்தைத் தலைநகராகக் கொண்டு ஆண்டுவந்த பல்லவர் குலத்தில் தோன்றியவர் ஐயடிகள் காடவர்கோன், எல்லா மக்களும் எம்பெருமான்

சேவையில் ஈடுபட்டுப் பேரின்பப் பெருவாழ்வை அடைய வேண்டும் என்ற கொள்கை யுடையவர் அவர். ஆட்சியைத் தம் மைந்தனிடம் ஒப்படைத்துவிட்டு க்ஷேத்திராடனம் செய்யக் கிளம்பினார்.

3. மன்னவரும் பணிசெய்ய
வடநூற்றென் தமிழ்முதலாம்
பன்னுகலைப் பணிசெய்யப்
பாரளிப்பார் அரசாட்சி
இன்னல்என இகழ்ந்ததனை
எழிற்குமரன் மேலிழிச்சி
நன்மைநெறித் திருத்தொண்டு
நயந்தளிப்பார் ஆயினார்

— ஐயடிகள் காடவர்கோன் — பெரியபுராணம்

தில்லைச் சிதம்பரம் சென்று நிருத்தனார் திருக்கூத்தைக் கண்டு களித்து, செந்தமிழால் வெண்பா மாலை சூட்டி மகிழ்ந்தார். பின் அநேக சிவ தலங்களுக்குச் சென்று எம்பெருமானைத் தரிசித்து ஒவ்வொரு கோயிலுக்கும் ஒரு வெண்பா பாடினார். இவ்வாறு பல நாட்கள் திருப்பணியில் ஈடுபட்ட அடிகளார் முடிவில் இவ்வுலக வாழ்வை நீத்துப் பரமன் திருவடிகளை அடைந்தார்.

## சுந்தரமூர்த்தி சுவாமிகள்

சைவ சமய ஆசாரியருள் இவர் மூன்றாமவர். அவருக்குத் தம்பிரான் தோழர், வன்தொண்டர் என்ற பெயர்களும் உண்டு. பெரிய புராணம் தோன்றக் காரணமாக அமைந்த திருத்தொண்ட தொகையைப் பாடியவர் இவரே. இறைவன் இவரைத் தோழமை கொண்டதற்குக் காரணம் இவர்பால் அமைந்த கல்வியறிவே. அதனால் இவர் தம்பிரான் தோழர் என அழைக்கப்பட்டார்.

இவரது வாழ்க்கையில் திருவொற்றியூரில் நடந்த ஒரு நிகழ்ச்சியைக் காண்போம்.

ஒரு நாள் சுந்தரர் இறைவழிபாடு முடிந்த பின்னர் மலர் தொடுக்கும் மண்டபத்திற்குச் சென்றார். சங்கிலியாரைக் கண்ணுற்றார். காதல் கொண்டார். இவர் யாரென்று அருகில் இருந்தோரை வினவினார். செய்திகளைக் கேட்டறிந்தார். கோயிலுள் சென்று இறைவனிடம் மன்றாடினார். அன்றிரவு சுந்தரர் கனவில் தோன்றி அவருடைய விருப்பத்தைப் பூர்த்தி செய்வதாக வாக்களித்தார். அவவாறே சங்கிலியாரின் கனவில் தோன்றி 'சுந்தரரை மகிழ்ச்சியோடு ஏற்றுக் கொள்' என்று கூறி மறைந்தார்.

மறுநாள் காலை கோயிலினுள் இருக்கும் மகிழ மரத்தடியில், 'நான் என்றும் உன்னைப் பிரியேன்' என்று சங்கிலியாருக்குச் சபதம் செய்து கொடுத்தார். அதன் பின்னர் சிவனடியார்கள் முன்னின்று இவ்விருவருக்கும் சிறப்பாகத் திருமணம் செய்து வைத்தார்கள், நம்பியாரூரர் நங்கை சங்கிலியாருடன் சின்னாள் தங்கி இனிது வாழ்ந்தார்.

ஒரு நாள் திருவாரூரில் இருக்கின்ற வீத விடங்கப் பெருமானுடைய வசந்தோற்சவ காலம் சமீபித்ததை அறிந்து திருவாரூர் செல்ல ஆயத்தமானார். சங்கிலியாருக்குச் செய்து கொடுத்த சபதத்திற்கு மாறாக அவரைப் பிரிந்து சென்றார். திருவாரூர் இறைவனைக் காணும் பொருட்டுச் சென்ற ஆரூரரின் கண்கள் இரண்டும் ஒளி இழந்தன. 'திருவும் மெய்ப் பொருளும்' என்னும் பதிகங்களைப் பாடிப் போற்றினார். ''சங்கிலியின் பொருட்டு என் கண்களைக் கவர்ந்து கொண்ட பெருமானே! துயரம் களைந்தருள்வாயாக'' என்று வேண்டிக் கொண்டார்.

## ஊன்றுகோல் பெறுதல்

*கண்களை இழந்து வருத்தமுற்ற நம்பியாரூரர் திரு வெண்பாக்கக் கோயிலை அடைந்து, "அறியாமையாற் செய்யும் பிழைகளைப் பொறுத்தருள்வீர்" என்று போற்றினார். "இறைவனாகிய நீ அடியேன் செய்த குற்றத்தைப் பொறுத்தருளாமையால் நினக்கு வரும் பழியையும் எண்ணிப் பாராது என் கண்களை மறையச் செய்தாய். நீ இக்கோயிலின் உள்ளே உள்ளாயோ?" என மன வருத்தம் தோன்ற வினவினார். அப்போது தோழராகிய இறைவன், "உளோம் போகீர்" என மறுமொழி கூறி ஊன்றுகோல் ஒன்றைக் கொடுத்தருளினார்.*

## இடக்கண் பெறுதல்

*ஊன்று கோலைப் பெற்று மகிழ்ந்த சுந்தரர் காஞ்சி நகரத்தை அடைந்தார். "அடியேற்கு மறைந்த கண்களைக் காட்டி யருள்வாயாக" என்று வேண்டினார். கச்சி ஏகம்பரும் இடக்கண் பார்வையைக் கொடுத்தருளினார். இது பற்றி வரும் பெரிய புராணப்பாடல்கள் வருமாறு:*

**286.** **"விண்ணாள்வார் அமுதுண்ண**
**மிக்கபெரு விடமுண்ட**
**கண்ணாளா! கச்சிஏ**
**கம்பனே! கடையானேன்**
**எண்ணாத பிழைபொறுத்திங்**
**கியான்காண எழிற்பவள**
**வண்ணா!கண் ணளித்தருளாய்"**
**எனவீழ்ந்து வணங்கினார்.**

**287.** **பங்கயச்செங் கைத்தளிரால்**
**பனிமலர்கொண் டருச்சித்துச்**
**செங்கயற்கண் மலைவல்லி**
**பணிந்தசே வடிநினைந்து**

**பொங்கியஅன் பொடுபரவிப்**
**போற்றியஆ ரூரருக்கு**
**மங்கைதழு வக்குழைந்தார்**
**மறைந்தஇடக் கண்கொடுத்தார்**

*பெரியபுராணம்*

*(ஏயர்கோன் கலிக்காமர் புராணம்)*

## திருஓண காந்தன்தளி

*இக்கோயில் காஞ்சிபுரம் பஞ்சு பேட்டை தெருவில் உள்ள பாடல் பெற்ற சிவஸ்தலம். இதைச் சுந்தரர் தரிசித்துப் பாடிய பாடல்களுள் ஒன்று வருமாறு. ஓணன், காந்தன் என்ற இரு அசுரர்கள் பூசித்துப் பேறு பெற்ற தலமாகும் இது.*

**6. வாரிருங் குழல் வாள்நெடுங்கண்**
**மலைமகள்மது விம்முகொன்றைத்**
**தாரிருந்தட மார்புநீங்காத்**
**தையலாள்உல குய்யவைத்த**
**காரிரும்பொழிற் கச்சிமூதூர்க்**
**காமக்கோட்டம்உண் டாகநீர்போய்**
**ஊரிடும்பிச்சை கொள்வதென்னே**
**ஓணகாந்தன் தளியுளீரே.**

*— சுந்தரர் தேவாரம்*

*சுந்தரர் இப்பதிகம் பாடி, சிவபெருமான் பொன் முதலியன அருளப் பெற்றார்.*

சுந்தரர் திருவாய் மலர்ந்தருளிய தேவாரப் பாடல் களைப் பலர் தோத்திரக் கண்கொண்டு நோக்குவர். சிலர் சாத்திரக் கண்கொண்டு காண்பர். ஆயின் ஆளுடை நம்பியாராகிய அவர்களின் அருட்பாடல்களை இலக்கியக் கண்கொண்டு பார்த்தால் அவ்வருட் பாடல்களில் ஒன்பான் சுவைகளும் நிறைந்துள்ளன. அவற்றுள் மேற் கூறிய பாடல் நகைச்சுவைக்கு எடுத்துக் காட்டாகும்.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் சிவபிரானை நிந்தாஸ்துதி யாகச் சில பாடல்கள் பாடியுள்ளார். அப்பாடல்களில் நகைச்சுவை தோன்றக் காணலாம். காஞ்சிபுரம் திரு ஓணகாந்தன் தளியில் எழுந்தருளிய சிவபிரானைப் பாடிய சுந்தரர், ''பெருமானே! கச்சியம்பதியில் திருக்காமக் கோட்டத்தில் காமாட்சி அம்மையார் 32 அறங்கள் செய்து வரத் தாங்கள் ஊரார் இடும் பிச்சை கொள்வதன் காரணம் யாது?'' என்னும் கருத்தமையப் பாடியுள்ளார். இறைவி அறங்கள் செய்ய இறைவன் இரத்தல் முறை யாமோ? என்று கூறுவதில் நகைச்சுவை தோன்றுதல் காண்க.

காஞ்சிபுரத்தில் பாடல் பெற்ற சிவ ஸ்தலங்கள் ஐந்து. அவையாவன: திருக்கச்சி ஏகம்பம், திருமேற்றளி, திரு ஓணகாந்தன தளி, திருநெறிக்காரைக்காடு, திருஅநேகதங் காவதம் என்பனவாம்.

## திருஞான சம்பந்தர்

திருவோத்தூரிலிருந்து புறப்பட்ட சம்பந்தர் திருமாகரல், திருகுரங்கணில் முட்டம் முதலான தலங் களைத் தரிசித்தபடி காஞ்சி நோக்கிச் சென்றார். (காஞ்சிக்குத் தெற்கே பத்து மைலில் மாகரலும், ஆறு மைலில் குரங்கு அணில் முட்டமும் உள்ளன).

அடியார்கள் திரண்டெழுந்து அளித்த கோலாகல மான வரவேற்பை ஏற்றுக் காஞ்சியில் நுழைந்த சம்பந்தர் பெருமான் தோரணங்களால் அழகுற அலங்கரிக்கப்பட்ட வீதிகள் வழியே சென்று கச்சி ஏகம்பரைத் தரிசித்து 'மறையானை' என்று தொடங்கும் பதிகம் பாடிப் போற்றினார். எம்பெருமானுடைய திவ்விய தரிசனம் கண்டு அகம் குழைந்து அஞ்சலி செய்தார். பின் திருக் காமக் கோட்டம் சென்று தொழுதார். திருநெறிக் காரைக்காடு, அனேகதங் காவதம் முதலான சிவாலயங் களுக்கும் சென்று எம்பெருமானை வழிபட்டார்.

காஞ்சியில் சில தினங்கள் தங்கி வழிபாடு செய்து கொண்டு சம்பந்தர் திருமாற்பேறு என்னும் தலத்திற்குச் சென்றார்.

# 4. கந்த புராணம்

## கி. பி. பனிரெண்டாம் நூற்றாண்டு

காஞ்சிபுரத்தில் குமரக் கோட்டத்து அருச்சகராகிய காளத்தியப்ப சிவாசாரியாருடைய குமாரரராய்க்கச்சியப்ப சிவாசாரியார் அவதரித்தார். அவர் கல்வி அறிவு ஒழுக்கங் களில் சிறந்து விளங்கினார். சிவஞான சிவ பக்திகளிலும் சிறப்புற்றார். இவர் குமரக் கோட்டத்து முருகக் கடவுளை மெய்யன்போடு விதிமுறை வழுவாது பூசை செய்து வரும் நாட்களில் வடமொழியிலுள்ள ஸ்கந்த புராணத்தைத் தமிழ் வல்லார் அறிதற்பொருட்டுக் காஞ்சி புரத்திலுள்ள பெரியோர் இவரைத் தமிழிற் பாடச் சொன்னார்கள். அதன்படியே பன்னீராயிரஞ் செய்யுட் களால் கந்த புராணத்தைப் பாடி முடித்தார்.

அதன்பின் குமரக்கோட்டத்திலேயே அரசர்கள், பிரபுக்கள், தென்மொழி, வடமொழிப் புலவர்கள், சைவ சமய நெறிவல்லார் ஆகியோர் முன்னிலையில் நாள் தோறும் புராணத்தைப் படித்துப் பொருள் சொல்லி, அவரவர் கேட்கும் கேள்விகட்கெல்லாம் தக்க விடை களைத் தவறாமல் அளித்து, இங்ஙனம் பலருங் கேட்டுப் பெருவியப்பு அடையுமாறு ஒரு வருட காலத்தில் நூலை அரங்கேற்றி முடிந்தருளினார்.

புராணம் அரங்கேற்றி முற்றுப் பெற்ற உடனே கந்த புராணத் திருமுறையோடு எழுந்தருளப் பண்ணித் தொண்டை மண்டலத்திலுள்ள இருபத்து நான்கு கோட்டத்து வேளாளர்களும் காஞ்சிபுரத்திலுள்ள மற்றை யோரும் ஒருங்கு கூடிச் சிவிகை தாங்கியும், சாமரை

வீசியும், குடை, கொடி முதலியன எடுத்துப் பிடித்தும், திருவீதி வலம் வந்து, நூலையும் ஆசிரியரையும் மிகப் பாராட்டினார்கள். இச்செய்தியைப் படிக்காசுப் புலவர் தமது தொண்டை மண்டல சதகத்தில் குறிப்பிட்டுள்ளார்.

## கட்டளைக் கலித்துறை

அந்தப் பரமும் அறுநான்கு
கோட்டகத் தாருமொன்றாய்க்
கந்தப் புராணம பன்னீரா
யிரஞ்சொன்ன கச்சியப்பர்
தந்தப் பல்லக்குங் கவிகையும்
தாங்கிஅச் சந்நிதிகசே
வந்தப் புராணம் அரங்கேற்
றினார் தொண்டை மண்டலமே.

என்பதே அச்செய்யுள்.

இவர் காலம் கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டு. கந்த புராணமென்பது வடமொழியிலுள்ள பதினெண் புராணங்களுள் ஒன்றாகிய ஸ்காந்த புராணத்தின் சங்கர சங்கிதையில் சிவ ரகசிய காண்டத்தில் வரும், 1. சம்பவ காண்டம், 2. அசுர காண்டம், 3. மகேந்திர காண்டம், 4. யுத்த காண்டம், 5. தேவ காண்டம், 6. தட்ச காண்டம் என்னும் முதலாறு காண்டங்களின் மொழி பெயர்ப்பு. ஏழாவதாகிய உபதேச காண்டத்தைக் கோனேரியப்ப முதலியார் என்னும் புலவர் தனியே தமிழ்ச் செய்யுள் உருவத்தில் இயற்றி இருக்கிறார்.

கச்சியப்ப சிவாசாரியார் இயற்றிய கந்தபுராணம் சொற் பொருள் நயமும், பக்திச் சுவையும் மிகுந்ததாக இருத்தலின் தமிழ்ப் புலவர்களாலும், முருகன் அடியார் களாலும் சிறப்பாகப் போற்றப் பெற்று வருகின்றது.

பலர் அதனைப் பாராயணம் செய்து வருகிறார்கள். அது ஆறு காண்டங்களும், 141 படலங்களும், 10346 செய்யுட்களும் கொண்டது. முருகக் கடவுளுடைய திரு அவதாரம் முதல் வள்ளியம்மை திருமணம் இறுதியாக அப்பெருமான் உடைய இனிய சரித்திரத்தை விரிவாகச் சொல்வது. இடையிடையே பல கிளைக் கதைகளையுடையது. விரிவான வருணனைகளும் உபாக்கியானங்களும் படித்து இன்புறற்குரியன.

**குறிப்பு :-**

தொண்டை மண்டலச் சதகத்தில் கண்ட மேற்படி பாடலில் பன்னீராயிரம் செய்யுள் என்று குறிப்பிட்டு உள்ளது உத்தேசமாக இருக்கலாம் அல்லது கோனேரியப்ப முதலியார் அவர்கள் எழுதியுள்ள ஏழாவது காண்டத்தில் உள்ள பாடல்களைச் சேர்த்தால் அத்தொகைக்கு வரக் கூடும்.

## கந்தபுராணக் காப்புச் செய்யுள்

**விநாயகர்**

**திகட சக்கரச் செம்முகம் ஐந்துளான்**
**சகட சக்கரத் தாமரை நாயகன்**
**அகட சக்கர வின்மணி யாவுறை**
**விகட சக்கரன் மெய்ப்பதம் போற்றுவாம்.**

முதன் முதலில் நூலாசிரியர் விநாயகர் காப்பாக மேற் கண்ட செய்யுளை தந்திருக்கிறார். அதன் பொருள் வருமாறு: திகழ் தசம் கரம் என்பதுதான் திகட சக்கரம் ஆயிற்று. அதாவது திகழ்கின்ற பத்துக் கைகளையும், ஐந்து முகங்களையும் உடையவர் விநாயகர். அவருக்கு விகடச் சக்கர விநாயகர் என்ற பெயரும் உண்டு. இந்நூல் ஆசிரியர் காஞ்சியில் உள்ள ஏகாம்பரேஸ்வரர் கோயில் ஆயிரங்கால் மண்டபத்தில் எழுந்தருளியிருக்கும் விகடச் சக்கர விநாயகர் என்று பெயர் பெற்ற விநாயகரைச்

சிந்தித்து நூலைத் துவங்குகின்றார். காஞ்சி மாநகர முதல் தெய்வமாகப் போற்றப்படும் ஸ்தல விநாயகர் இவர்தான்.

அவருக்கு விகடச் சக்கர விநாயகர் என்று பெயர் வந்த தன் வரலாறு வருமாறு: தட்சன் ஒரு சமயம் யாகம் செய்தான். அவன் சிவபெருமானை அழைக்காமையால் வீரபத்திரர் அந்த யாகத்தை அழித்தார். எனவே வீரபத்திரர் மீது திருமால் கோபங்கொண்டு தன் சக்கரத்தை ஏவினார். அதை வீரபத்திரர் தலை மீது அணிந்திருந்த கபாலம் கௌவிக் கொண்டது. திருமாலின் சேனாதிபதியாகிய வீடுவசேனர் அச்சக்கரத்தை மீட்பதற்காக விகடக் கூத்து ஆடினார். அதைக்கண்டு கபாலம் நகைக்க, சக்கரம் கீழே விழுந்தது. அதை விநாயகர் விரைந்து ஓடி எடுத்துக் கொண்டார். ஆகவே வீடுவசேனர் மீண்டும் விநாயகர் முன்பு அவர் விருப்பப்படி விகடக் கூத்து ஆட வேண்டியதாயிற்று. அப்படி விகடக் கூத்து ஆடிய பின்பு விநாயகர் வீடுவசேனரிடம் அச்சக்கரத்தைக் கொடுத்தார். அதனால் அவ்விநாயகர் சக்கர விநாயகர் எனப் பெயர் பெற்றார்.

## அவையடக்கம்

**புதுமயில் ஊர்பரன் புராணத்து உற்றிடாக்**
**கதையிலை அன்னது கணிதம் இன்றரோ**
**அதுமுழுது அறையஎற்(கு) அமைதற் பாலதோ**
**துதியுறு புலமைசேர் சூதற்கு அல்லதே.**

கந்த புராணம் ஒரு பெருங் கடல். அது புதிய மயிலிலேயே ஊர்கின்ற திருமுகன் விளையாட்டுப் பற்றியது ஆகும். அதில் இல்லாத கதையும் இல்லை. அவற்றிற்கு அளவும் இல்லை என்பதைக் கச்சியப்ப சிவாசாரியாரே கூறுகிறார்.

அரோ, பால் என்பவை அசைகள். இங்கு சூதன் என்பது சூத முனிவரைக் குறிக்கும். அவர் காந்தத்தை உபதேசித்தவர். அவராலேயே அதன் பெருமை கூற முடியாதே என்று குறிப்பிடுகின்றார்.

கந்த புராணம் மிகப் பெரிய செய்யுள் நூல். இதன் கண் முருகனைப் பற்றிய கதைகளும் சைவ சம்பந்தமான பல கிளைக் கதைகளும் உள்ளன. அவை அனைத்தையும் பற்றி எழுத இச்சிறு நூல் இடம் தராது. ஆகவே வாசகர்கள் மூல நூலைக் கற்றுப் பயன்பெறுவார்களாக.

கம்பராமாயணத்தோடு ஒருங்கெண்ணத்தக்க ஒப்புமைப் பகுதிகளும் கந்தர் அலங்காரத்தின் ஈற்றிலுள்ள ஆறு கட்டளைக் கலித்துறைப் பாடல்களும் வாசகர்களின் நலங்கருதி கீழே சேர்க்கப்பட்டுள்ளன. இவை சிறந்த தோத்திரப் பாடல்கள். நாள்தோறும் பாராயணம் செய்வதற்கு ஏற்றவை. வாசகர்கள் பயன்படுத்திக் கொள்வார்களாக.

## முருகவேள் வணக்கம்

**மூவிரு முகங்கள் போற்றி**
**முகம்பொழி கருணை போற்றி**
**ஏவரும் துதிக்க நின்ற**
**ஈராறுதோள் போற்றி காஞ்சி**
**மாவடி வைகும் செவ்வேள்**
**மலரடி போற்றி அன்னான்**
**சேவலும் மயிலும் போற்றி**
**திருக்கைவேல் போற்றி போற்றி**

—கந்தபுராணம்
பாயிரம்— பாடல் எண் 3

வான்முகில் வழாது பெய்க
மலிவளம் சுரக்க மன்னன்
கோன்முறை அரசு செய்க
குறைவிலாது உயிர்கள் வாழ்க
நான்மறை அறங்கள் ஓங்க
நற்றவம் வேள்வி மல்க
மேன்மைகொள் சைவ நீதி
விளங்குக உலகம் எல்லாம்

*பாயிரம்— பாடல் எண் 5*

## ஒப்புமைப் பகுதி

*கம்பராமாயணமும் கந்தபுராணமும் ஒரே மாதிரியான காவிய அமைப்பினைப் பெற்றுள்ளன. ஒரு சில இடங்களில் வேறுபட்டிருப்பினும் ஒப்புமைப் பகுதிகள் அதிகம். கீழ்க்கண்ட பட்டியலில் அவை வரிசைப் படுத்தப் பட்டுள்ளன.*

| தலைப்புக்கள் | கம்பராமாயணம் | கந்தபுராணம் |
|---|---|---|
| நூலாசிரியர் | கம்பர் | கச்சியப்பர் |
| காலம் | கி. பி. 12-ஆம் நூற்றாண்டு | கி. பி. 12-ஆம் நூற்றாண்டு |
| காண்டங்கள் | ஆறு | ஆறு |
| ஏழாவது காண்டத்தைப் பாடியவர் | அம்பிகாபதி | கோனேரியப்ப முதலியார் |
| பாடல்கள் | 10500 விருத்தப் பாக்கள் | 10346 விருத்தப் பாக்கள் |
| காவியத்தலைவன் | இராமன் | முருகப் பெருமான் |
| சமயம் | வைணவம் | கௌமாரம் |
| துணைவன் | இலக்குவன் | வீரவாகுத்தேவர் |

| தலைப்புக்கள் | கம்பராமாயணம் | கந்தபுராணம் |
|---|---|---|
| தூதன் | அனுமன், அங்கதன் | வீரவாகுத்தேவர் |
| பகைவன் | இராவணன் | சூரபதுமன் |
| இனம் | அரக்கன் | அரக்கன் |
| சேனைகள் | குரங்கினம் | பூதகணங்கள் |
| பகைவனின் மைந்தர் | இந்திரஜித்து | பானுகோபன் |
| சிறை இருந்தோர் | சீதை | சயந்தன் |
| பகைவன் நகர் | இலங்கை (தீவு) | வீரமகேந்திரம் (தீவு) |
| படை | வில் | வேல் |
| பகைவனுக்கு அறம் உரைத்தவர்கள் | கும்பகர்ணன், விபீஷணன் | சிங்கமுகன் |
| போர்க்காலம் | 18 மாதம் | பத்து நாட்கள் |
| போர்க் காரணம் | சூர்ப்பனகை | அசமுகி |
| பகைவன் மனைவி | மண்டோதரி | பதுமகோமளை |
| நூல் அரங்கேறிய இடம் | திருவரங்கம் | திருக்கச்சி |
| அழிந்தமைக்குக் காரணம் | பிறன்மனை நயந்தது | தேவர்களைத் துன்புறுத்தியது. |

## தோத்திரப் பாடல்கள்

*கந்தர் அலங்காரம் பாடியவர் : அருணகிரியார்*

### கட்டளைக் கலித்துறை

**1. திருவடி யுந்தண்டை யும்சிலம்**
**பும்சிலம் பூடுருவப்**
**பொருவடி வேலும் கடம்பும்**
**தடம்புயம் ஆறிரண்டும்**

மருவடி வான வதனங்கள்
ஆறும் மலர்க்கண்களும்
குருவடி வாய்வந்தென் உள்ளம்
குளிர குதிகொண்டவே

*முருகக் கடவுளின் திருவடிகளும், தண்டைகளும் சிலம்புகளும், கிரௌஞ்ச மலை உருவிச் செல்லுமாறு போர்புரிந்த வடித்த வேற்படையும், கடம்ப மலர் மலையும், பெரிய தோள்கள் பன்னிரெண்டும், மனங்கமழும் அழகிய ஆறு திருமுகங்களும், தாமரை மலர் போன்ற கண்களும் குருமூர்த்தி ரூபமாய் வந்து எனது மனம் குளிரும்படி கூடின.*

2. இராப்பக லற்ற இடங்காட்டி
யானிருந் தேதுதிக்கக்
குராப்புனை தண்டையம் தாளரு
ளாய்கரி கூப்பிட்டநாள்
கராப்படக் கொன்ற கரிபோற்ற
நின்ற கடவுள்மெச்சும்
பராக்ரம வேல நிருதசங்
கார பயங்கரனே,

*கஜேந்திராழ்வான் 'ஆதியம்பரமே' என்றழைத்த போது முதலை ஒழியக் கொன்று அவன் போற்ற நின்று அருளிய திருமாலும் புகழும் வலிமை பொருந்திய வேற்படை தரித்த முருகக் கடவுளே! அரக்கரைக் கொல்பவனே! அவர்க்குப் பயங்கரம் இயற்றுபவனே! இரவும் பகலும் காணாத அறிவு நிலையினைத் தெரிவித்து நான் அந்த ஞான நிலையில் அமர்ந்திருந்தே நின்னைத் துதிக்கக் குராமலர் மாலையால் அணி செய்த தண்டை பொருந்திய அழகிய நின் திருவடியை எனக்குத் தந்தருள்வாயாக.*

3. செங்கேழ் எடுத்த சிவனடி
வேலும் திருமுகமும்
பங்கே நிரைத்தநற் பன்னிரு
தோளும் பதுமமலர்க்
கொங்கே தரளஞ் சொரியும்செங்
கோடைக் குமரனென
எங்கே நினைப்பினும் அங்கேயென்
முன்வந் ததிர்நிற்பனே

*தாமரைமலர் மணமும் முத்தும் சொரியும் படியான திருச்செங்கோட்டின் கண் விற்றிருக்கும் குமாரக் கடவுளே யென்று எங்கு நினைத்தாலும் சிவந்த நிறம் பொருந்தியதும் சிறுவதும் வடிக்கப்பட்டதுமான வேற் படையும் ஆறு திருமுகங்களும் இருபாகங்களிலும் நிறைந் திருக்கும் பன்னிரண்டு தோள்களும் பொலிய அவ்விடத்தில் அடியேன் முன்னர் வந்து தரிசனம் தந்தருளுவான்.*

4. ஆவிக்கு மோசம் வறுமா(று)
அறிந்துன் அருட்பதங்கள்
சேவிக் கவென்று நினைக்கின்றி
லேன்வினை தீர்த்தருள்வாய்
வாவித் தடவயல் சூழுந்
திருத்தணி மாமலைவாழ்
சேவற் கொடியுடை யானே
அமர சிகாமணியே

*குளங்களுடன் பரந்த கழனிகள் சூழ்ந்துள்ள திருத்தணியம் பதியில் உள்ள தெய்வத் தன்மையில் பெருமை வாய்ந்த குன்றின் மீது வாசஞ் செய்யும் கோழிக் கொடியுடைய முருகக் கடவுளே! தேவர்களுக்கு முடிமணி போன்று இருப்பவனே! சரீரத்துள் பொருந்திய சீவனுக்கு அழியுங் கேடு வரும் விதத்தையுணர்ந்து உனது அருள் மயமான திருவடிகளைச் சிந்தித்தேன் இல்லை; எனினும் அடியேனின் பிறப்பு இறப்புகளுக்குக் காரணமாக இருக்கும் வினையினைத் தீர்ப்பாயாக.*

5. கொள்ளித் தலையில் எறும்பது
போலக் குலையுமென்றன்
உள்ளத் துயரை யொழித்தரு
ளாயொரு கோடிமுத்தம்
தெள்ளிக் கொழிக்கும் கடற்செந்தில்
மேவிய சேவகனே
வள்ளிக்கு வாய்த்தவ னேமயி
லேறிய மாணிக்கமே

*கோடிக் கணக்கான முத்துக்களைத் தெள்ளிக் கொழிக்கும் சமுத்திரஞ் சூழ்ந்த திருச்செந்தூரில் வீற்று இருக்கும் படியானவனும் அவுணரை வதைத்தவனும் ஆகிய வீரனே! வள்ளி நாச்சியாருக்குத் தலைவனாக வாய்த்தவனே! மயிலில் ஊரும் மாணிக்கம் போன்றவனே! எரியும் கொள்ளிக் கட்டையின் நுனியில் சிக்கிய எறும்பினைப் போன்று அவஸ்தைபடும் எனது உள் ஊறிய மனத்துயரினைப் போக்குவாயாக.*

6. சூலம் பிடித்தெம பாசம்
சுழற்றித் தொடர்ந்துவரும்
காலன் தனக்கொரு காலும்அஞ்
சேன்கடல் மீதெழுந்த
ஆலங் குடித்த பெருமான்
குமாரன் அறுமுகவன்
வேலும் திருக்கையும் உண்டே
நமக்கொரு மெய்த்துணையே

*பாற்கடலில் உதித்த ஆலகால விஷத்தைப் பருகிய சிவபெருமானின் குமாரனாகிய ஆறுமுகக் கடவுளின் வேற் படையும் அழகிய தோள்களும் எமக்கு ஒப்பற்ற மெய்த் துணையாக இருக்கின்றனவே! அதனால் சூலம் தரித்துக் கொண்டு எமபாசத்தை வீசிச் சுழற்றிக் கொண்டு தொடர்ந்து அருகே வருகின்ற யமனுக்கு ஒருக்காலும் அஞ்சமாட்டேன்.*

# 5. திருவேகம்ப மாலை

## பட்டினத்துப் பிள்ளையார்

### கி. பி. பதினாறாம் நூற்றாண்டு

(திருக்கச்சியில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளி யிருக்கும் ஏகாம்பர நாதரைத் துதித்துக் கூறியபடியால் இப்பெயர் பெற்றது.

**பட்டினத்தார்**

ஒருவர் பட்டினத்தார் என்னும் பெயரினர். பன்னிரெண்டாம் நூற்றாண்டினர். சைவத்துறவி. தத்துவ ஞானி. இவர் கோயில் நான்மணிமாலை, திருக்கழுமல மும்மணிக் கோவை, திருவிடை மருதூர் மும்மணிக் கோவை, திருவேகம்ப முடையார் திருவந்தாதி, திருவொற்றியூர் ஒரு பா ஒரு பஃது என்ற ஐந்து நூல் களை எழுதியுள்ளார். இவை 11.ஆம் திருமுறையில் சேர்க்கப்பட்டுள்ளன. இவர் பத்திர கிரியார் காலத்தவர்.

மற்றொருவர் பட்டினத்துப் பிள்ளையார் என்ற பெயரினர். தத்துவ ஞானி; முற்றுந்துறந்த துறவி, யாக்கை நிலையாமை, இளமை நிலையாமை, செல்வம் நிலையாமை இவைகளை அடிப்படையாகக் கொண்டு 570 பாடல்களைப் பாடியுள்ளார். அவைகள் பட்டினத்தடிகள் திருப்பாடல் திரட்டு என்னும் நூலாகத் தொகுக்கப்பட் டுள்ளன. இவரைப் பதினாறாம் நூற்றாண்டினர் எனலாம். மேற்கூறிய திருவேகம்ப மாலை இவரால் எழுதப்பட்டது. இதில் 41 கட்டளைக் கலித்துறைப் பாடல்கள் உள்ளன. அவற்றுள் 2, 5, 7, 8, 9, 13

*எண்ணுள்ள ஆறு பாடல்களும் அவற்றிற்கு உரைகளும் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.*

## கட்டளைக் கலித்துறை

**2. கட்டி யணைத்திடும் பெண்டீரும்**
**மக்களும் காலத்தச்சன்**
**வெட்டி முறிக்கும் மரம்போல்**
**சரீரத்தை வீழ்த்திவிட்டால்**
**கொட்டி முழக்கி யழுவார்**
**மயானங் குறுகியப்பால்**
**எட்டி அடிவைப்ப ரோஇறை**
**வாகச்சி ஏகம்பனே!**

*ஆசை மிகுதியினால் கட்டியணைத்துக் கொள்ளும் மனைவியரும், பிள்ளைகளும், யமனாகிய தச்சன் வெட்டி முறித்து விடுகின்ற மரத்தைப் போல், தேகத்தை விழும் படிச் செய்துவிட்டால் பல பறைகளை யடித்து முழக்கி அழாநிற்பர். அவர்கள் இடுகாட்டினை நெருங்கி, அம்மயானத்தைக் கடந்து தாண்டி தமது கால்களை வைப்பார்களோ? வையார். தலைவனே! திருக்கச்சிக் கண் எழுந்தருளியிருக்கும் ஏகாம்பரநாதனே!*

**5. நல்லார் இணக்கமும்நின் பூசை**
**நேசமும் ஞானமுமே**
**அல்லாது வேறு நிலையுள**
**தோஅக மும் பொருளும்**
**இல்லாளும் சுற்றமும் மைந்தரும்**
**வாழ்வும் எழிலுடம்பும்**
**எல்லம் வெளிமயக் கேயிறை**
**வாகச்சி யேகம்பனே!**

*நல்வர்களுடைய நட்பும், தேவரீரைப் பூசித்தலும் அதில் அன்பும், சிவஞானமும் அல்லாமல் வேறு தரிக்கத்*

*தகும் நிலையுண்டோ? இல்லை. வீடு மனை நிலம் முதலிய வும் தனதான்யாதி ஐஸ்வரியங்களும் மனைவியும் உறவினர் முதலாயினாரும் புத்ர வர்க்கங்களும் இறுமாப்புடன் வாழும் செல்வ வாழ்க்கையும் அழகு கொண்ட தேகமும், மற்றெல்லாமும் புற மயக்கமே. தலைவனே! திருக்கச்சியில் எழுந்தருளியிருக்கும் ஏகாம்பரநாதனே!*

**7. பிறக்கும் பொழுது கொடுவந்த**
**தில்லை பிறந்துமண்மேல்**
**இறக்கும் பொழுது கொடுபோவ**
**தில்லை இடைநடுவில்**
**குறிக்குமிச் செல்வம் சிவன்தந்த**
**தென்று கொடுக்கறியா(து)**
**இறக்கும் குலாமருக் கென்சொல்லு**
**வேன்கச்சி ஏகம்பனே!**

*அடியேன் பூமியில் பிறக்கும் காலத்தும் கொண்டு வந்ததாகிய பொருள் வேறொன்றும் இல்லை; பூமியில் தோன்றி சாகும் காலத்திலும் கொண்டு போகும் பொருள் இல்லையாம். இப்பிறப்பிற்கும் இறப்பிற்கும் நடுவண தாகிய வாழ்க்கைக்கண் தோன்றியதாக எண்ணப்படும் இந்த நிலையிலாச் செல்வம் எல்லாம் வல்லவனாகிய சிவ மூர்த்தி ஆன்மாக்களின் கர்மங்களுக்கு ஈடாகக் கொடுக்கப் பட்ட தென்று எண்ணி இரப்பார்க்குக் கொடுக்க அறியா மல், வீணாக உயிரை விடும் கீழ்மக்களுக்கு நான் ஏது செல்லுவேன்? திருக்கச்சியைத் திருக்கோயிலாகக் கொண்டு எழுந்தருளியிருக்கும் ஏகாம்பர நாதனே!*

**8. அன்ன விசாரம் அதுவே**
**விசாரம் அது ஒழிந்தால்**
**சொன்ன விசாரம் தொலையா**
**விசாரம்நல் தோகையரைப்**

**பன்ன விசாரம் பலகால்**
**விசாரம்இப் பாவிநெஞ்சுக்(கு)**
**என்ன விசாரம்வைத் தாய்இறை**
**வாகச்சி ஏகம்பனே!**

பொய்யாகிய தேகத்தினைப் போஷித்தற் பொருட்டுத் தேடும் அன்னத்தின் விசாரம். அதுவே எனக்குப் பெரு விசாரமாம். அவ்விசாரம் எவ்வகையேனும் நீங்கின், பொருள் தேடி இன்புறச் செய்யும் விசாரம் நீங்காத விசாரமாம் அது ஒழிந்தால் அழகு வாய்ந்த மயில் போலும் சாயலையுடைய பெண்களைப் புகழ்ந்து பேசும் இந்த விசாரம் பலகாலத்தும் விசாரமாம்; சித்த சாந்தம் அடையாத இந்தப் பாவியின் மனதிற்கு என்ன விசாரத் தினை வைத்தாய்? இறைவனே! திருக்கச்சி நகர்கண் எழுந்தருளிய ஏகாம்பரனே!

**9. கல்லாப் பிழையும் கருதாப்**
**பிழையும் கசிந்துருகி**
**நில்லாப் பிழையும் நினையாப்**
**பிழையும்நின் அஞ்செழுத்தைச்**
**சொல்லாப் பிழையும் துதியாப்**
**பிழையும் தொழாப்பிழையும்**
**எல்லாப் பிழையும் பொறுத்தருள்**
**வாய்கச்சி ஏகம்பனே!**

நீர் அருளிச் செய்த வேதசிவாகமங்களைக் கற்காத பிழையும், அதன் கண் உள்ள அருமைகளை மனக்கண் கொள்ளாப் பிழையும், மனம் உருகி, உன் திருவடி பற்றாக நிற்காத தவறும், தேவரீர் திருவடியை நினையாத தவறும், உனது மந்திரத் திருமேனியை யுணர்த்தும் மந்திர மாதாவாகிய ஐந்தெழுத்தினை வாயாரச் சொல்லிச் செபிக்காத பிழையும், உன்னை வணங்காத பிழையும்,

*இவையொழிந்த மற்றெல்லாப் பிழையும் பொறுத்துக் கொண்டு அருள் புரிவாய்! திருக்கச்சியில் எழுந்தருளி யிருக்கும் ஏகம்பனே!*

**13. ஊரும் சதமல்ல உற்றார்**
**சதமல்ல உற்றுப்பெற்ற**
**பேரும் சதமல்ல பெண்டீர்**
**சதமல்ல பிள்ளைகளும்**
**சீரும் சதமல்ல செல்வம்**
**சதமல்ல தேசத்திலே**
**யாரும் சதமல்ல நின்றாள்**
**சதங்கச்சி ஏகம்பனே !**

*ஒருவருக்குத் தன் முன்னோராலும் தன்னாலும் வந்த கிராமாதிகளும், நெடுநாள் அனுபவிக்கப்படும் பொருள்கள் ஆகா. உடன் பிறந்தார் மனைவி மக்கள் முதலிய உறவினரும் நெடுநாளாகச் சூழ்ந்து உறுதி கூறத் தக்கவர் ஆகார். புத்திரப்பேறு வேண்டி விரதம் முதலிய செய்து கவலையடைந்து பெற்றாராகிய தாய் தந்தையர் களும், எக்காலத்தும் இருந்து நமக்கு உறுதியாகார். பல்லார் அறியப் பறையறைந்து நாள் கேட்டுத் தன் தேக ரட்சணார்த்தம் கொண்ட மனைவியரும், சாகுங்காலத்து உறுதியைத் தாரார்; தாம் தவஞ் செய்து பெற்ற புத்திரர் களும், அத்தந்தையருக்கு இறுதிக் காலத்துத் துணை யாகார். தனது புகழாகிய செல்வமும் சதமாகாது. இப் பூமியில் யாவரும் உறுதியாகார். தேவரீர் திருவடிகளே இம்மை மறுமை இரண்டிற்கும் உறுதி தரத் தக்கவையாம்; தலைவனே! திருக்கச்சிக்கண் எழுந்தருளிய ஏகாம்பர நாதனே!*

# 6. காஞ்சிப் புராணம்

## (கி. பி. 18-ஆம் நூற்றாண்டு)

கி. பி. 18-ஆம் நூற்றாண்டில் சிவஞான முனிவர் ஏகாம்பர நாதரைப் பாட்டுடைத் தலைவராகவும் காமாட்சியம்மையைப் பாட்டுடைத் தலைவியாகவும் கொண்டு காஞ்சிப் புராணம் என்னும் அரிய நூலைச் செய்துள்ளார். இது 65 படலங்களையும், 2742 பாடல்களையும் உடையது. நூலின் முற்பகுதியில் தொண்டை நாடு, பாலாறு, காஞ்சி மாநரம் இவைகளைச் சுவைபட முதல் 500 பாடல்களில் பாடியுள்ளார். படித்து இன்புற வேண்டிய பகுதியாகும் இது. இந்நூலை இறைவன் கட்டளைப்படியே தாம் பாடியதாக நூலின் அவையடக்கத்தில் கூறியுள்ளார்.

இந்நூலில் அடியிற்கண்ட ஐவகை சித்திரக் கவிகளும் பாடியுள்ளார். 1. முரச பந்தம், 2. கோமுத்திரி, 3. உபய நாகபந்தம், 4. சுழி குளம், 5. சருப்பதோபத்திரம். படயங்களில் பாட்டுக்களை அமைத்துள்ளார். படித்து இன்புறற்குரியன.

காஞ்சிபுரத்திலுள்ள சிவத்தலங்கள் அனைத்தையும் பற்றி விரிவாகப் பாடியுள்ளார். இலக்கிய வளம் நிறைந்த நூல். சைவ சமயத் தத்துவங்கள் ஆங்காங்கே இலைமறை காய்போல் மிளிர்கின்றன. இந்நூலைத் தோத்திர நூலாகவும், சாத்திர நூலாகவும், இலக்கிய நூலாகவும் கொள்ளலாம்.

ஒரு சமயம் உமையம்மையார் இறைவனின் இருகண்களையும் தமது இரு கைகளால் விளையாட்டாக

முடினார். விளையாட்டே வினையாயிற்று. அண்ட சராசரங்கள் எல்லாம் இருளில் மூழ்கின. இறைவன் கோபமுற்று இறைவிக்குச் சாபங் கொடுத்து விட்டார். 'நீ பூலோகம் சென்று தவமியற்றி, பாவத்தை நீக்கிக் கொண்டு, இங்கே வந்து சேர்வாயாக' என்பதே அவர் கொடுத்த சாபம்.

காமாட்சியம்மை இறைவனைத் திரும்பவும் அடைதற் பொருட்டு, காஞ்சிபுரத்திற்கு வந்து, மணலால் லிங்கம் அமைத்து, மாமரத்தின் நிழலில் இருந்து வழிபாடு செய்து வந்தார். இரு நாழி நெல் கொண்டு முப்பத்திரண்டு அறங்களையும் வளர்த்து வந்தார். இறைவன் சோதனையின் பேரில் ஆற்று வெள்ளம் அதிகரிக்க, அம்மையார் நடு நடுங்கி லிங்கத்தைச் சேர்த்துத் தழுவிக் கொண்டார். அவ்வாறு அம்மையாரால் தழுவக் குழைந்த இறைவன் அருள்பாலித்த செய்திகள் இப்புராணத்துள் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. இது இரு பெருங் காண்டங்களையுடையது. இவ்வாசிரியர் வடமொழி, தென்மொழி ஆகிய இரண்டிலும் புலமை பெற்றவர். துறவற நிலையிலிருந்து வழுவாதவர்.

## சிவஞான முனிவர்

சிவஞான போதத்திற்கு இவர் வகுத்த 'சிவஞான மாபாடியம்' என்னும் பேருரை நூல் இவரைப் பரிமேலழகர் நிலைக்கு உயர்த்தியுள்ளது. தொல்காப்பிய முதற் சூத்திர விருத்தி, பாயிரவிருத்தி என்னும் நூலும், நன்னூல் விருத்தியுரையும் இவரது இலக்கண அறிவைப் புலப்படுத்தியிருக்கின்றன. இவருடைய சோமேச முதுமொழி வெண்பா திருக்குறளின் பெருமையைச் சான்று காட்டி விளக்குகிறது. அமுதாம்பிகை பிள்ளைத் தமிழ் என்னும் நூல் இவரது கற்பனை வளத்தைக் காட்டுகின்றது. கச்சியம்பதியில் சில காலம் வாழ்ந்திருந்தார்.

அப்போது எழுதியதுதான் காஞ்சி புராணம். இவர் தருக்க வாதத்தில் சிறந்தவர். சைவம் வளர அரும்பாடுபட்டவர்.

## திருமணப் படலம்

### முன்னுரை

தழுவக் குழைந்த படலத்தின் ஈற்றுப்பகுதி வருமாறு :

இந்திரன் முதலிய தேவர்களும், அயன் அரி என்னும் இருவரும் தங்கள் தங்கள் தேவிமாரோடும் திருவேகம் பத்தை அடைந்தனர். நாரதர், வசிஷ்டர், அகத்தியர் முதலிய முனிவர்களும் அவண் வந்து சேர்ந்தனர். வந்து யாவரும் இறைவன் திருக்கோலத்தைக் கண்டு, ஆனந்த வெள்ளத்தில் அமிழ்ந்து வணங்கித் துதித்தனர். அப்போது இறைவனார் தனத்தழும்பும் வளைத்தழும்பும் பொருந்திய உருவத்துடன் இலிங்கத்தினின்றும் தோன்றி, வந்த வெள்ளத்தைச் சருவ தீர்த்தப் பெயரினால் நிறுத்தி, அம்மையாரைத் தழுவிக்கொண்டு, ‘மயில் போலும் சாயலினையுடையாய் மனங் கலங்கற்க’ என்று சொல்லித் தமது மணவாளத் திருக்கோலத்தைக் காட்டினார்.

அம்மையார் தழுவிய கைகளை விடுத்துப் பூமியில் வணங்கி அவ்வடிவத்தைக் காணுந்தோறும உவகை அடைந்து துதித்தார். இறைவனார் தமது அன்பினால் கூறுகின்றார் : ‘‘காளி, நீயும் நாமும் வேறல்லோம்; வானும் நிலவும் போல விளங்குவோம். ஆயினும் உலகம் உய்யும்படி இப்பிராயச் சித்தத்தை நீ செய்தாய். இனி நீ விரும்பியதைக் கூறுக’’ என்று வினவினார்.

அம்மையார், ‘‘பெருமானே, கைலை மந்தரம் சிவலோகத்திலும் நமக்கு இனியது இக்காஞ்சியாகலின் இதன்கண் வாழ்வோர் யாவரும் முத்தியடையவும், இந் நகரத்தில் அறிந்தும் அறியாமலும் செய்த பாவங்கள் நீங்கித் தவம் ஒன்று பலவாய் பெருகி, அறம் பொருள்

இன்பங்கள் உண்டாகவும் அருள் செய்ய வேண்டும்'' என்று வேண்டினார். சிவபெருமான், ''நம்மிடத்தும் நம் அடியாரிடத்தும் செய்யும் பிழையைத் தவிர வேறு எப்பிழையும் நீ வேண்டியவாறே இங்குத் தீர்ந்து, தவம் பெருகி நாற்பயனும் உண்டாகச் செய்தோம்; வேறு உனக்கு வேண்டுவதென்னை?'' என்று வினவினார்.

அம்மையார் வணங்கி, ''தேவரீர், முன்னே மந்தர மலையில் காளீ என்று அழைத்தருளினீர்; அதைக் கேளாதது போல் இருந்தேன். இன்றும் அவ்வாறு அழைத்தீர்; ஆகையால் இக்கரிய நிறத்தை மாற்றிக் கவுர நிறத்தை அருள வேண்டும்'' என்றார்.

குறிப்பு :

காளி— கறுப்பு நிறம். கவுரி— வெண்மை நிறம்.

இறையனார், புன்னகை செய்து, ''பெண்ணே, அசுரர்களால் இவ்வுலகம் வருந்தியது; அவ்வருத்தம் நீங்குதற்காக உன்னை இவ்வாறு அழைத்தோம்; இப்பொழுதே உனது கரிய சட்டையை நீக்கிக் கவுர நிறம் பெறுவாயாக. சும்பன், நிசும்பன் என்னும் அசுரர்களை அழித்தற் பொருட்டு அக்கரிய சட்டையில் கவுசி என்னும் துர்க்கை தோன்றுவாள் காண்பாயாக'' என்றார். அம்மையார் அங்ஙனமே பாம்பு தோல் உரிப்பது போலக் கரிய சட்டையை மாற்றிக் கவுர நிறம் பெற்று இறைவரை வணங்கிச் சொல்லுகின்றார்.

''எம்பெருமானே, உமது திருவருளால் காளி நிறம் நீங்கிக் கவுரி என விளங்குகின்றேன். ஆகையால், இமய மலையில் முன் நிகழ்ந்தது போல இன்று இக்காஞ்சியிலும் நமக்குத் திருமணம் உண்டாக விரும்புகின்றேன். உருத்திரர் முதலிய யாவரும் நம்மைக் காண வந்திருக்கின்றனர்,'' என்று கூறிப் பின்னும் சொல்லுகின்றார் :

''இத்திருமணம் கவுரி திருக் கலியாணம் என்று வழங்குதல் வேண்டும். அன்றியும், யான் இப்போது ஐந்து வயது கன்னியாக இருத்தலால், ஐந்து வயதுடைய கன்னியர்கள் எவரும் கவுரியர் எனப்படுதல் வேண்டும். அவர்களைச் சிவப் பிராமணர்களுக்குக் கொடுத்தவர்கள் சிவலோகத்தை அடைதல் வேண்டும்'' என்று வேண்ட, இறைவனார் அருளுகின்றார்.

காஞ்சியம்பதியில் ஆண்டுதோறும் பங்குனி உத்தரத் திருவிழாவில் எமக்குத் திருமணம் நிகழக் காண்பாயாக என்று முன்னே அகத்தியனுக்கு வரந் தந்திருக்கின்றோம். அங்ஙனமே இங்கு நமக்கு ஆண்டுதோறும் பங்குனி உத்தரத்தில் திருமணம் நிகழ்வதாக. அத்திருமணத்தில் உனக்குரிய தொழில்களைப் பார்ப்பனக் கன்னியர் செய்வார்களாக. அன்றியும் நீ முப்பத்திரண்டு தருமங் களையும் வளர்த்தற்கு வித்தாக ஆண்டுதோறும் இருநாழி நெல் தருகின்றோம். அதனாலே உயிர்கள் இகபரங்களை அடைந்து தழைக என்று அருளிச் செய்து அம்மையார் கருத்து முற்றவும், அகத்தியர் தவம் நிரம்பவும், உலகம் வாழவும் இறைவனார் திருமணத்தில் திருவுளம் வைத்தனர்.

## திருமணப் படலம்

இப்படலத்துள் கூறப்பட்ட வரலாறு உயிர்கள் போக நிலையை அடைதற்பொருட்டு இறைவனும் இறைவியும் திருமணம் நிகழ்த்திக் கொள்வர் என்னும் உண்மையை விளக்கும்.

விண்ணுலகத்திற்கு மேல் வளர்ந்துள்ள மாவின் அடியில் எழுந்தருளியுள்ள இறைவன் திருமேனி அம்மையார் தழுவக் குழைந்த வரலாற்றைச் சொன்னோம். இனி, கண்டவர்கள் பேரின்பத்தை அடைய அருள் செய்யும் கவுரியின் திருமணத்தைக் கூறுவோம்.

திருவேகம்பப் பெருமான் திருமாலை நோக்கித் ‘திருமணத்திற்குரிய செயலைச் செய்க’ என்று கட்டளை யிட, அவர் மகிழ்ந்து, திருமணத்திற்கு வேண்டிய பொருட் களைக் கொண்டு வருமாறு தேவர்களை விடுத்து, நகர மெங்கும் முரசறைவித்து, தேவ கம்மியர்களை அழைத்து கலியாண மண்டபம் அமைக்கும்படி பணித்தார். அக் கம்மியர்கள் நிலத்தைப் பொன்னால் அமைத்து, பவளத் தினால் ஆயிரம் தூண்கள் நிறுத்தி, மரகதத்தால் போதிகை அமைத்து, வயிரத்தால் உத்திரம் இட்டு, நவரத்தினங்கள் அழுத்திச் சித்திரங்கள் எழுதிய பலகை களை மேலே பரப்பி, பளிங்கினாற் சுவரெடுத்து, மற்றும் பல பல வகையாக அழகுபடச் செய்து; வாழை, கமுகு, கரும்பு, கற்பகத்தரு இவைகளை நாட்டி, குண்டவேதிகாதி களையும் செய்து, கலியாண மண்டபத்தை அமைத்து, அதன் நடுவில் இறைவனும் இறைவியும் வீற்றிருத்தற்கு இரத்தினாசனம் இட்டு வைத்தார்கள்.

நகர மாந்தர்கள் முரசொலி கேட்டுப் பெரு மகிழ்வுற்று, வீதிகளைப் புனிதமாக்கி, பனிநீர் தெளித்து, பூப்பந்தல்களும் நவமணிப் பந்தல்களும் ஆங்காங்கு இட்டு மகர தோரணங்கள் கட்டி, பூரண கும்பங்களும் முளைப் பாலிகைகளும் தீபங்களும் இடம் தோறும் வைத்து, மற்றும் பல வகையாக நகரத்தை அலங்காரம் செய்தனர். தேவர்கள் தாங்கள் எல்லாப் பொருள்களையும் சேர்த்துத் திருமண வேலையில் முற்பட்டார்கள். அப்பொழுது திருமால் இறைவன் திருவருள் பெற்று, நன்னாளில் பாலிகைகளில் முளைகளை வித்தி, இடபக் கொடி ஏற்றித் திருவிழாவைத் தொடங்கி வைத்தார். ஒன்பது நாட்கள் திருவிழா நடந்த பின்பு பத்தாம் நாள் பங்குனி உத்தர நாளில் இறைவனார் திருமணங் கொள்ளுதற் பொருட்டுத் திருமஞ்சனச் சாலையை அடைந்தார்.

திருமால் தமது தவப்பயனால் இறைவனார் திருமேனி யைத் தீண்டிப் பொற்குடத்திலுள்ள நீர் முதலியவற்றால்

திருமஞ்சனம் செய்வித்துத் திரு ஒற்றாடை சாத்திப் பொன்னாடை புனைவித்து, சந்தனம் பூசி, சிலம்பு, அரை ஞாண், மோதிரம், பொன்னரிமாலை, வாகுவலையம், குழை முதலிய ஆபரணங்களைத் திருவடி முதலிய உறுப்பு களில் அணிவித்து, சிரசில் நவரத்தின மயமாகிய மகுடத் தைக் கவித்து அழகு செய்தார். இங்ஙனம் மணக்கோலங் கொண்ட இறைவனார் எழுந்து பெண்கள் அட்ட மங்கலங்கள் ஏந்தி போற்றச் சென்று ஆசனத்தை அடைந்து உருத்திரர் முதலியோரை அவரவர்கள் ஆசனத்தில் இருக்குமாறு கடைக்கண்ணால் நோக்கி, வீற்றிருந்தருளினார்.

பின்னர் திருமால் இலக்குமியை நோக்கி, ''அம்பிகையை அணி பெறுவித்து அழைத்து வருக'' என்று கூற, இலக்குமி களிப்பு மிகுந்து சென்று அம்மையாரை மஞ்சன சாலையில் புகுவித்து, அவரது கூந்தலை அவிழ்த்து நெய்யை அள்ளிச் சாத்தி, நெல்லி விழுது, மஞ்சள் விழுது முதலிய நலங்குகளை இட்டுப் பனி நீராட்டி, திருமேனி ஈரத்தை ஒற்றாடையால் ஒற்றி, பட்டாடை புனைந்து, ஓர் ஆசனத்தில் இருத்தி, யானைத் தந்தத்தால் ஆகிய சீப்பு கொண்டு கூந்தலைச் சீவி, அகில் சந்தனம் முதலிய நறுமணங் கமழும் புகை ஊட்டி சீதேவி முதலிய தலைக் கணியும் ஆபரணங்களை அணிவித்து, பூமாலை சூட்டி, நெற்றியில் பொற்பட்டம் அணிவித்து, சிந்தூர திலகம் இட்டு, கண்களுக்கு மை எழுதி, தனத்தில் சந்தனத்தைப் பூசி, அதன்மேல் மகரந்தப் பொடியை அப்பி, விசிறி கொண்டு விசிறி, செவி, நாசி, கழுத்து, கை, தோள், விரல், இடை, பாதம் ஆகிய உறுப்புக்களில் சிறந்து விளங்கும் தோடு, மூக்கணி, கண்டசரம், கடகம், அங்கதம், மோதிரம், மேகலை, சிலம்பு முதலிய ஆபரணங்களை அணிவித்து, காலில் செம்பஞ்சுக் குழம்பு ஊட்டி அழகு செய்து வணங்கி நின்றனள். ஆபரணங்கள் அம்மையாரது திருமேனியில் பொருந்தினமையால் மிக அழகடைந்தமை

கண்டு, இலக்குமி இவைகள் யான் அணிந்த அணிகளோ என ஐயுறுவாளாயினாள்.

பின்பு, தேவமாதர்கள் மங்கலம் பாட, அம்மையார் இலக்குமியின் கரத்தைப் பற்றிக் கொண்டு, தேவர்கள் பூமழை பொழிய பூமியில் விரிக்கப்பட்ட ஆடையின்மேல் மெல்ல நடந்து சென்று, இறைவன் பக்கலில் அமர்ந்து வீற்றிருந்தார். இறைவனும் இறைவியும் வீற்றிருத்தல் கண்டு யாவரும் மகிழ்ச்சியடைந்தனர். அப்போது திருமால் வாத்தியங்கள் ஒலிப்பச் செய்து, திருமகள் பாலை வார்க்க இறைவன் திருவடிகளை விளக்கினார். பின்பு, சர்க்கரை, நெய், பால் கலந்த மது பருக்கத்தை அளித்து, பெருமானது திருக்கையில் உலகமீன்ற பெரு மாட்டியாகிய அம்மையாரது திருக்கைகளை வைத்துத் தாரை வார்த்துக் கொடுத்தார். அப்போது சங்குகள், தேவ துந்துபிகள் முதலிய வாத்தியங்கள் முழங்கின. வாழ்த்தொலி மிகுந்தன. கற்பகப் பூமழை சொரிந்தன. அக்காலையில் சிவபெருமான் பிரமதேவனை எரியோம்பு மாறு பணித்து அம்மையாரது கழுத்தில் மங்கல நாண் சாத்தியருளினார். பிரமனும் ஏனைய சடங்குகளை யெல்லாம் குறைவறச் செய்து முடித்தனன்.

திருமணத்தைக் கண்டவர்கள் எல்லாம் ஆனந்த வெள்ளத்தில் மூழ்கினார்கள். இமாசலத்தில் நடந்த திருமணத்தைக் காட்டிலும் இத்திருமணத்தில் அம்மையாருக்குக் கவுர நிறமும் அப்பனார்க்கு முலைத் தழும்பும் வளைத்தழும்பும் அதிகமாகும் என்று மிகவும் மகிழ்ச்சியுற்றார்கள். பிறகு இறைவனார் அம்மையா ரோடும் விடை மீதேறி வீதியில் திருவுலாப் போந்து அருளினார். பானுகம்பன் முதலியோர் வாச்சியங்களை முழக்க, திருச்சின்னங்களை ஊத,தேவர் பூமழை பொழிய, பேதை முதலிய பருவங்களையுடைய பெண்களெல்லாம் மையலுற இறைவனார் காட்சியளித்து, திருக்கோயிலின் உள் சென்று, அம்மையாரோடு பூவணை மேல் வீற்றிருந்து

மாலயன் முதலிய யாவரையும் நோக்கி உங்கட்கு வேண்டும் வரம் யாது? என, யாவரும் வணங்கி, ''இரு முதுகுரவராகிய நீவிர் உலகத்தில் திருமணம் செய்யும் இடந்தோறும் இருந்து அருள் செய்ய வேண்டும்'' என்று வேண்டினர். இறைவனார், ''இவ்வரத்தை அளித்தோம்; இனி, நீங்கள் இந்நகரத்தைக் காத்து இங்ஙனமே இருப்பீர் களாக'' என, எல்லாத் தேவர்களும் அவ்வாறே காஞ்சியில் தங்கினர்.

அம்மையாரது கூற்றில் தோன்றிய கவுசிகி என்னும் துர்க்கையும் என்னை மணந்து கொள்ள வேண்டுமென்று வேண்ட, இறைவன் அவளையும் மணந்து, ''நீ கச்சியைக் காவல் புரிக'' என்றருளினார். கவுசிகி அவ்வாறே காப்பாளாயினாள். அதனால் காஞ்சி கன்னி காப்பு எனப்படும். அன்றியும் கவுசிகி முன் சொல்லியவாறு கவுசிகீசரை வழிபட்டுத் திருவருள் பெற்றிருக்கும் நாளில், சும்பன், நிசும்பன் என்னும் இரண்டு அசுரர்கள் உலகத்தை வருத்துதல் கண்டு, பிரமன் வந்து வேண்ட, இறைவனார் கவுசிகியை விடுத்தார். கவுசிகி விந்த மலையிற் சென்று தங்கி இருந்து அவ்வசுரர்களை அழித்து மீண்டு வந்து, காஞ்சியில் வாழ்ந்தனள். இத்திருமணத்தைக் கண்டவர் களும், சொல்லக் கேட்டவர்களும், நினைத்தவர்களும் பெண்களை மணந்து பேரின்பமும் அடைவார்கள்.

# 7. ஆழ்வார்கள்

திருநாடு என்று புகழப்படும் பரமபதத்தில் திருமாமணி மண்டபத்தில் சீரிய சிங்காதனத்தில் சர்வாபரண பூஷிதனாய் திவ்விய ஆயுதங்களுடன் ஸ்ரீதேவி, பூதேவி, நீளாதேவிகளோடு வீற்றிருந்து, தேவர்களையும் பக்தர்களையும் மகிழ்வித்துக் கொண்டிருந்தார் சர்வேஸ்வரன்.

உலகத்து உயிர்கள் பிறவியென்னும் பெருங்கடலில் கரை காணாது தடுமாறுவதைக் கண்டு அவர்களை ஆட்கொள்ளத் திருவுளங் கொண்டு, தானே இராமன், கிருஷ்ணன் முதலிய அவதாரங்களை எடுத்து, திருத்தப் படாதபாடு பட்டார். பயனில்லாமல் போகவே, நமக்கு இது சாத்தியம் அன்று என்று கருதி, ஸ்ரீவத்ச, கௌஸ்துப வைஜயந்தி, வனமாலைகளையும் பார்த்து, ''நீங்கள் போய் லீலா விபூதியில் நானா வர்ணங்களிலும் அவதரித்து உலகை உத்தாரணம் செய்யுங்கள்'' என்று நியமித்தருளினார். சர்வேஸ்வரன் அவர்களுக்கு மயர்வற மதி நலம் அருளி, அவர்கள் வாயிலாக சர்வாதிகாரமான திவ்வியப் பிரபந்தங்களைப் பிரகாசிக்கச் செய்தார்.

திவ்வியப் பிரபந்தம் என்னும் இந்நூல் நாலாயிரம் பாடல்களைக் கொண்டது. அப்பாடல்கள் தெய்வாம்சம் கொண்டவை; சந்த இன்பம் உடையவை. அவற்றைத் தோத்திரப் பாடல்கள், அகப்பொருட் பாடல்கள், வேத சாரமான பாடல்கள், பிள்ளைத்தமிழ்ப் பாடல்கள், இயற்கை வருணனை பாடல்கள், இறைவனைத் துயில் எழுப்பும் பாடல்கள், இறைவனது அவதார மகிமைகளைப் பற்றிய பாடல்கள் எனப் பலவகையாகப் பிரிக்கலாம்.

இந்நூலின்கண் அடியிற்கண்ட 12 ஆழ்வார்கள் பாடிய பாடல்களுள் காஞ்சிபுரம் பற்றிய சில பாடல்களையும், காஞ்சிபுரம் சம்பந்தப்பட்ட ஆழ்வார்களின் வாழ்க்கை நிகழ்ச்சிகளையும் காணலாம்.

1. பொய்கையாழ்வார் 2. பூதத்தாழ்வார்
3. பேயாழ்வார் 4. திருமழிசையாழ்வார்
5. நம்மாழ்வார் 6. மதுரகவியாழ்வார்
7. குலசேகராழ்வார் 8. பெரியாழ்வார்
9. ஆண்டாள் 10. தொண்டர் அடிப் பொடியாழ்வார்
11. திருப்பாணாழ்வார் 12. திருமங்கையாழ்வார்

**குறிப்பு**

இப்பகுதியில் பொய்கையாழ்வார் காஞ்சியில் பிறந்த வரலாறும், திருமழிசையாழ்வார் காஞ்சியில் சிறிது காலம் தங்கியிருந்த வரலாறும், திருமங்கையாழ்வார் காஞ்சிபுரத்தில் பொன் பெற்ற வரலாறும் அவர் யதோக்தகாரி சந்நதி, அஷ்டபுஜம் ஆகிய இருவரைப் பற்றிப் பாடிய பாசுரங்களும் இடம்பெறும்.

## 1. பொய்கையாழ்வார்

### அவதார மகிமை

பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் ஆகிய மூவரும் முதல் ஆழ்வார்கள் எனப்படுவர். இவர்கள் மற்ற ஆழ்வார்களினும் காலத்தால் முற்பட்டவர்கள். பொய்கையாழ்வார் கல்லுயர்ந்த நெடுமதில் சூழ்:கச்சியில் கால் நிலம் தோய்ந்து, விண்ணோர் தொழும் கண்ணன் வெஃகாவில் பொற்றாமரைப் பொய்கையில், பொற்றா மரையில் ஐப்பசி மாதம் விஷ்ணுவின் நட்சத்திரமான

திருவோண நட்சத்திரத்தில் திருமாலின் பஞ்சாயுதங்களில் ஒன்றான பாஞ்ச சன்யம் என்னும் சங்கின் அம்சமாய்த் தோன்றினார்.

திருவெஃகா என்பது காஞ்சிபுரத்திலுள்ள பதினெட்டுத் திருப்பதிகளுள் ஒன்று. இத்தலம் 'யதோக்த காரி சன்னதி' என வழங்கப்படுகிறது. இது சின்ன காஞ்சி புரத்தில் உள்ளது. சொன்ன வண்ணம் செய்த பெருமான் என்பது பொருள். இறைவன் இங்கே சயனத் திருக் கோலத்தில் காட்சியளிக்கிறார். இத்தலத்தின் வடபுறத்தி லுள்ள பொய்கையில் தாமரை மலரில் பொய்கை ஆழ்வார் திரு அவதாரம் செய்து அருளினார்.

தாமரை மலரில் தோன்றியதால் இவரைப் பிரமன் போல்வான் என்றும் கூறுவர். பொய்கையாழ்வார் எல்லா நலன்களையும் பெற்று விளங்கினார். அவரது தோளில் திரு இலச்சனை செய்து, திரு எட்டெழுத்தை உபதேசித்து இறைவனை ஆராதிக்கும் வகையை உபதேசித்தார் சேனையர் கோன். வைணவர் தம் தோள்களில் சக்கரப் பொறி, சங்கின் பொறி இவற்றைப் பெறுவர், இதனைத் திரு இலச்சினை பெறுதல் என்பர். அஷ்டாட்சர மந்திரம் என்பதுதான் திரு எட்டெழுத்து.

இயல்பினால் வந்த ஞானத்தோடு இப்போது பக்தியும் கூடிடப் பொய்கையாழ்வார் இறைவனைத் தொழ, பல திருப்பதிகளுக்குச் சென்றார். ஒருவரையொருவர் அறியாமல் பூதத்தாழ்வாரும் பேயாழ்வாரும் பல திருப்பதி களுக்கு நடந்து சென்றனர்.

## திருக்கோவலூரை அடைதல்

ஒரு சமயம் மூவரும் திருக்கோவலூரில் கோயில் கொண்டிருக்கும் இறைவனைத் தரிசிக்கும் பொருட்டுத் தனித்தனியே அத்திருப்பதிக்குச் சென்றனர். வழியில்

தென் பெண்ணையாறு குறுக்கிட்டது. அது பரமபதத்திற்கு முன்புள்ள விரசை போன்றிருந்தது. அதன் இரு கரைகளிலும் சோலைகள் உயர்ந்து செழித்து வளர்ந்திருந்தன.

வானை அளாவும் மாடங்களிடையே இறைவனது கோயிலின் விமானம் பொய்கையாழ்வார் கண்களில் தோன்றியது. அங்குள்ள மாடங்கள் விண்ணில் வெவ்வேறு நிலையில் நின்று தேவர்கள் உலகளக்கும் இறைவனது திருவுருவைக் காண்பதையொத்து விளங்கின. உள்ளே புகும்போது தாமரைக் குளத்தைப் பார்த்தார். அடர்ந்த இலைகள் இறைவனது திருமேனியையும் மலர்கள் இறைவனது திருக்கண்களையும் ஒத்திருப்பதை ஆழ்வார் கண்டார்.

ஆழ்வார் உலகளந்த திருமேனியைக் கண்டு பரவசமானார். வலது திருவடி விண்ணை நோக்கி உயர்ந்துள்ளது. இடது கையில் சக்கரம் பொருந்தியுள்ளது. அருகில் ஆதிசேடன் பொருந்தியுள்ளான். திருவடியின் கீழே பிரகலாதாழ்வானும் மாவலியின் மகன் நமுசியும் உறைந்துள்ளனர். இறைவனைப் போற்றிப் புகழ்ந்த பின்னர் பொய்கையாழ்வார் அன்றிரவு மிருகண்டு முனிவரது ஆசிரமத்திற்குச் சென்றார். பின்னர் பூதத்தாழ்வாரும் பேயாழ்வாரும் அவ் விரவைக் கழிக்க அங்குச் சென்றனர்.

## மழை

சூரியன் மறைந்தது. எங்கும் இருள் சூழ்ந்தது. நட்சத்திரங்கள் ஒளியிழந்தன. வானம் கடல் போல் கறுத்தது. மேல் காற்று எழுந்தது. குவிந்த மேகங்கள் இறைவனது திருமேனி போன்று கறுத்துத் தோன்றின. காற்றின் ஓசை, மேகங்களின் முழக்கம் இவற்றால் மரங்கள் நடுநடுங்கி மலர்களைச் சொரிந்தன. மேகங்

களின் மின்னல் ஒளி வீசியது. மேகங்கள் நீர்த்துளிகள் சிந்தின. இவ்வாறு மேகத்தினின்றும் பெருகிய நீர் ஆகாய கங்கையினும் சிறந்தது. இறைவன் விண்ணில் வளர்ந்த போது அவனது திருவடியைப் பிரமன் விளக்கிய நீர் ஆகாய கங்கையாகப் பெருகியது. அன்றிரவு பொழிந்த மழை ஆழ்வார்கள் பிரபந்தங்கள் இசைக்கக் காரணமா யிருந்தது அல்லவா?

பொய்கையாழ்வார் மிருகண்டு முனிவர் குடிலில் இடைக்கழியிற் சாய்ந்து கண்ணுறங்கலானார். மழை பெய்ததால் பூதத்தாரும் பேயாரும் அதே குடிலுக்கு ஒருவர் பின் ஒருவராய்ச் செல்ல நேர்ந்தது.

## இடைக்கழியில் இறைவன்

பூதத்தார் தெருக் கதவைத் தட்டினார். இருவர் இருக்க இடம் உண்டு என்று எண்ணியவராய் பொய்கை யார், "இந்த இருளில் வந்தவர் யார்?" என்று வினவி னார். பூதத்தார் தான் இன்னாரெனத் தெரிவித்தார். இருவரும் உள்ளே சென்று அளவளாவினார்கள். அப்போது பேயாழ்வார் அங்கே தோன்றி, "ஒரு ஜாமப் பொழுது அடியேன் தங்க இடமுண்டோ?" என்று கனிவாகக் கேட்டார். அதைக் கேட்ட பொய்கையார், "முதலில் அடியேன் உடலை ஒடுக்கிப் படுத்திருந்தேன். அதன் பின்னர் பூதத்தார் வந்தார். நாங்கள் இருவரும் உட்கார முடிந்தது. பண்பாளரே! தாங்கள் இப்போது வந்துள்ளீர்; மூவரும் இருள் நீங்கும் அளவும் நின்று கொண்டிருப்போம்" என்றுரைத்தார். பின்னர் மூவரும் எம்பெருமானது திருவடிச் சிறப்பைப் பாடிக் கொண்டே நின்றனர்.

இவரிடையே திருக்கோவலூர் பெருமான் பிராட்டி யுடன் நிற்க, இவர்கள் மேலும் நெருக்குண்டு, "நம்மிடையே புதிதாய் வந்தவர் யார்?" என ஒருவர்

மற்றவரைக் கேட்கலாயினர். ''யானறியேன்'' என்று ஒவ்வொருவரும் பதிலளித்தனர். அப்போது இறைவன் அவர்களை நோக்கி, ''பெரியோர்களே! மேலான நலமே விளையும்'' என்று இறைவன் இனிமையாகக் கூறினான். இறைவன் சங்கு, சக்கரம், கதை, வாள், வில் முதலிய பஞ்சாயுதங்களுடனும் தாமரையில் வாழும் இலக்குமி யுடனும் சோதி வடிவாய் காட்சியளித்தான். தேவர்கள் வணங்கும் அத்திருவடிகளில் மூவரும் விழுந்துவணங்கினர். இறைவனது புகழைப் பாடிப் போற்றினர். இறைவன், ''உம்மால் நற்றமிழும் நன்னெறியும் கடல்போல் பரவுக'' என்று வாழ்த்தினன்.

இறைவன் இவர்களை ஒப்பிலாப் பரிவோடு அணைத்து மறைய,அவனது திருவடியினின்றும் பெருகிய வரநதி போல் பண்டை மறைகள் தமிழிற் பெருகலாயின. முதலாழ்வார்கள் பாடிய பாடல்கள் 300 வெண்பாக்கள். திருப்பெண்ணையின் கரையில் வாழும் பெருமானை இவர்கள் தங்கள் புயத்தால் உணர்ந்து தமிழ்ப் பாவால் வாழ்த்தி உய்ந்தனர். நிலத்தில் நெடுங்காலம் வாழ்ந்தனர். விண்ணிலிருந்து அர்ச்சனை மூர்த்தியாய் நிலத்திற்கு எழுந்தருளிய பெருமான் வழியில் இளைப்பாறும் தலமாய்த் திருவேங்கடம் விளங்குகின்றது. திருக்கோவ லூரை அர்ச்சாவதாரத்திற்குப் பொற்காலிட்ட திருப்பதி என்பர். வேதத்தால் போற்றப்படும் பரமபதநிலையன் இம்மண்ணை நாடிப் போந்ததால் வேதமும் தமிழ்மறை யாகி முதன் முதலில் வெளிவந்த திருப்பதி திருக் கோவலூராகும்.

## முதல் திருவந்தாதி

### இயற்பா :

பொய்கையாழ்வார் 100 வெண்பாக்களின் மூலம் இறைவனைப் பாடியுள்ளார். அவை முதல் திருவந்தாதி

எனப்படும். முதற் பாடல் வருமாறு : செய்யுள் எண்கள் நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தில் உள்ளவாறு குறிக்கப் பட்டுள்ளன.

**வையம் தகளியா வார்கடலே நெய்யாக**
**வெய்ய கதிரோன் விளக்காக— செய்ய**
**சுடராழி யானடிக்கே சூட்டினேன் சொன்மாலை**
**இடராழி நீங்குகவே என்று.**

—2082

இந்த உலகமே அகலாகவும், பெரிய கடலே நெய்யாகவும் வெப்பம் மிகுந்த சூரியனே விளக்கவும் கொண்டு சிவந்த ஒளி பொருந்திய சக்கரப் படையையுடைய திருமாலுக்கு என் பெருந்துன்பங்கள் அகலுவதாக என்று இந்தச் சொன்மாலையைச் சூட்டுகிறேன் என்பதாம்.

இந்தப் பாடல்கள் அந்தாதித் தொடையாய் அமைந்தவை. இறைவனை வழிபடும் முறை, அதன் மூலம் நாம் பெறும் பேறுகள் போன்ற செய்திகளை எளிய முறையில் பாடியுள்ளார்.

**வேங்கடமும் விண்ணகரும் வெஃகாவும் அஃகாத**
**பூங்கிடங்கில் நீள்கோவல் பொன்னகரும்— நான்கிடத்தும்**
**நின்றான் இருந்தான் கிடந்தான் நடந்தானே**
**என்றால் கெடுமாம் இடர்.**

—2158

திருவேங்கடம் என்றும், விண்ணகரம் என்றும், வெஃகா என்றும், அழகிய பூஞ்சோலைகளையுடைய திருக் கோவலூர் என்றும் துதித்து வழிபட்டால் துன்பங்கள் எல்லாம் விலகிச் செல்லும். நிரல் நிறைப் பொருளாக நின்ற திருக்கோலத்திலும், உட்கார்ந்திருக்கும் திருக் கோலத்திலும், சயனத் திருக்கோலத்திலும் இறைவன் ஆங்காங்கே கோயில் கொண்டுள்ளான் என்பதை நயம் படக் கூறுகின்றார்.

*பரமேஸ்வர விண்ணகரம்— காஞ்சிபுரத்திலுள்ள வைகுண்ட பெருமாள் கோயில். வெஃகா— யதோக்தகாரி சந்நிதி. இவர் காலம் கி. பி. ஏழாம் நூற்றாண்டு.*

## 2. திருமழிசையாழ்வார்

### முன்னுரை

*ஸ்ரீமன் நாராயணனே மேலான தெய்வம் என்று நிரூபித்துக் காட்டி, பிற தெய்வங்களைத் தாழ்த்திக் காட்டியவர் திருமழிசையாழ்வார். முதலாழ்வார்கள் மூவரும் பிற மதங்களைத் தூஷிக்கவில்லை. இவர் பாடியுள்ள திருச்சந்தவிருத்தம் 120 பாடல்களும், நான்முகன் திருவந்தாதி 96 பாடல்களும் திருமாலின் பரத்துவத்தையே வற்புறுத்துகின்றன. இவர் சைவ, சமண, பௌத்த மதங்களை வெளிப்படையாகவே கண்டிக்கிறார். இவர் தொண்டை நாட்டிலுள்ள திருமழிசையில் அவதரித்தார்.*

## சமய ஆராய்ச்சி

*திருமழிசைபிரான் ரிஷி புத்திரராகையால் சகல கலைகளையும் கற்றுணர்ந்தார். ஐம்புலன்களையும் அடக்கி அஷ்டாங்க யோகப்பியாசத்தில் திருவுளங் கொண்டார். பல மதங்களையும் ஆராய்ந்தார். பின்னர் ஸ்ரீ வைஷ்ணவராய் பரம வைதிக சித்தாந்த நிஷ்டராய் வேதாந்த விழுப்பொருளின் மேலிருந்த விளக்கை யறிந்தார். சர்வேஸ்வரனும் இவருக்கு மயர்வற மதி நலம் அருளித் தனது திவ்விய மங்கள விக்ரகத்தைக் காட்டினார். இவரும் ஐயந்திரிபற அறிந்து,*

**சாக்கியம் கற்றோம் சமண்கற்றோம் சங்கரனார்**
**ஆக்கிய ஆகமநூல் ஆராய்ந்தோம்— பாக்கியத்தால்**
**செங்கட் கரியானைச் சேர்ந்தோம்யாம் தீதிலமே**
**எங்கட்டு அரியதொன் றில்.**

என்று கூறித் திருவல்லிக்கேணியில் பல ஆண்டுகள் பகவத அனுபவம் பண்ணிக்கொண்டு யோகத்தில் அமர்ந்திருந்தார்.

## திருவெஃகா வாசம்

பன்னிரண்டு திருநாமம் சாத்தியருளி, பகவத அனுபவம் பண்ணியிருந்து பொய்கைபிரான் அவதரித்த பொய்கைப் பிரதேசத்தில் சேவித்திருக்கத் திருவுள்ளமாய் கச்சியில் வெஃகாவில் துயிலமர்ந்த வேந்தைச் (யதோக்த காரிப் பெருமாள்- சொன்ன வண்ணம் செய்பவர்) சேவித்து, அப்பொய்கைக் கரையில் பல ஆண்டுகள் யோகத்திலிருந்தார்.

இவர் திருவடிகளில் ஆசை வைத்து கணிகண்ணர் பகவத் பிரணவராயிருந்தார். ஒரு கிழவி ஆழ்வார் எழுந்தருளியிருந்த இடத்தை நாள்தோறும் சுத்தம் செய்து அவரை வணங்கி வந்தாள். ஆழ்வாரின் அருளினால் அவள் யெளவனம் பெற்றாள். தேவமாதைப் போல் பேரழகியானாள். அப்போது காஞ்சிபுரத்தில் ஆட்சி புரிந்துவந்த பல்லவ மன்னன் அவளை மணந்து இன்புற்றான். அரசன் நாளடைவில் வயோதிகன் ஆனான். அவள் மட்டும் யெளவனம் மாறாதிருந்தாள். தனக்கும் யெளவனத்தைத் தருமாறு மன்னன் ஆழ்வாரை வேண்டினான். அவர் மானிடரைப் பாட மறுத்தார்.

அரசன் வெகுண்டெழுந்தான். கணி கண்ணரைத் தனது நாட்டுக்கு வெளியே போகச் சொன்னான். செய்தி அறிந்த ஆழ்வார் கோயிலுக்குச் சென்று முறையிட்டார். எம்பெருமான் இவர் சொன்ன வண்ணம் எழுந்தருளி அவர்களைப் பின்தொடர்ந்தார். காஞ்சி மாநகர் பொலி விழந்தது. அரசன் மந்திரிகளோடு இவர்கள் தங்கியிருந்த 'ஓர் இரவு இருக்கை' என்ற ஊரில் இவர்களைக் கண்டு காலில் விழுந்து மன்னிக்கும்படி வேண்டினான்.

ஆழ்வாரின் வேண்டுகோளின்படி எம்பெருமானும் காஞ்சி புரத்திற்கு மீண்டு எழுந்தருளினார். இவ்வூர் இப்போது 'ஓரிக்கை' என மருவியுள்ளது.

ஆழ்வார் சொன்னவண்ணம் செய்தது எல்லார்க்கும் தெரிய வேண்டுமென்று இடது திருக்கையைத் தலைக்கு வைத்துக் கண் வளர்ந்தருளினார். எங்கும் சீர்மை மிக மக்கள் களித்தனர். மன்னன் அகந்தை நீங்கி ஆட்சி செய்து வந்தான். ஆழ்வார், கணிகண்ணன் இவர்களது அருளால் உலகில் பக்தி வளர்ந்திட கச்சிப்பதி சிறந்தது. ஆழ்வார் கச்சியில் சிலகாலம் யோகத்திலிருந்தார். பின்னர் திருக்குடந்தை செல்லப் புறப்பட்டார். (திருக்குடந்தை—கும்பகோணம்)

இவர் ஏழாம் நூற்றாண்டைச் சேர்ந்தவர். இவர் திருச்சந்தவிருத்தம் 120 பாடல்களையும், நான்முகன் திருவந்தாதி 96 பாடல்களையும் பாடியுள்ளார். இவர் பாடல்களில் இராமாவதாரம், கிருஷ்ணாவதாரம் ஆகியவற்றின் மகிமையைக் காணலாம்.

## திருச்சந்தவிருத்தம்

**815.** **நின்றது எந்தை ஊரகத்து**
**இருந்தது எந்தை பாடகத்து**
**அன்று வெஃகணைக் கிடந்தது**
**என்கிலாத முன்எலாம்**
**அன்றுநான் பிறந்திலேன்**
**பிறந்தபின் மறந்திலேன்**
**நின்றதும் இருந்ததும்**
**கிடந்ததும் என்னெஞ்சுளே.**

பகவான் திருவூரகம் என்னும் உலகளந்த பெருமாள் கோயிலில் நின்று அருளினதும், திருப்பாடகம் என்னும் பாண்டவ தூதர் சன்னதியில் வீற்றிருந்ததும், எனக்கு

ஞானம் பிறக்காத காலமாகிய அன்று திருவெஃகா என்னும் யதோக்தகாரி சன்னதியில் பள்ளி கொண்டருளினதும் நான் அவரை நாடாத முற்காலம் எனலாம். அக்காலத்தில் நான் ஞானப்பிறவி பெற்றிலேன். அப்பிறவி பிறந்தபின் ஒரு கணப் பொழுதும் மறக்கவில்லை. பின்பு பகவான் நின்றதும், இருந்ததும் பள்ளி கொண்டதும் என்னுடைய நெஞ்சுக்குள்ளே ஆயின.

## 3. திருமங்கையாழ்வார்

### அவதாரம்

திருமங்கை யென்னும் பதியில் அவதரித்தமையால் இவர் இப்பெயர் பெற்றார். இவரது ஏனைத் திருநாமங்கள் நீலன், கலியன், கலிகன்றி, பரகாலன், ஆலிநாடன், குறையற்கோன் என்பன.

சோழவள நாட்டில் குறையலூரில் கள்ளர் மரபொன்று புகழேந்தி விளங்கியது. இம்மரபில் நள வருடம் கார்த்திகை மாதம் கிருத்திகை நட்சத்திரத்தில் ஒரு மகவு தோன்றியது. இறைவன் கையிலேந்தும் சாரங்கம் என்னும் வில்லின் அம்சமாய் பிறந்த இம்மகவினைக் கண்டு தந்தை மகிழ்வுற்றார். நீலன் என்று பெயரிட்டார். பொதுக் கலைகளும், போர்க்கலைகளும் இச்சிறுவன் கற்றான். போர் வீரர் இவனைக் கண்டு அஞ்சுமாறு வலிமை பெற்றான் நீலன். நீலனுக்கு அறுவர் தொண்டாற்றினர். நீலன் இளமையில் மாரனார் வெஞ்சிலைக்கு ஆட்செய்து,தெரிவைமார் உருவமே மருவி, சிற்றின்பத்திலேயே காலங்கழித்தான். இவனுடைய வீரப் பிரதாபங்களைக் கேள்வியுற்று, சோழன் இவனைப் திருவாலியின் குறுமன்னனாக ஆக்கினான். ஆலி நாட்டின் அரசனாகவும் சோழனுடைய சேனாதிபதியாகவும் சிறப்புடன் விளங்கினான் நீலன்.

## குமுதவல்லியார்

திருவாலி நாட்டில் நன்றாய் இருப்பதொரு தாமரைத் தடாகத்தில் சில தேவமாதர்கள் நீராட வருவதுண்டு. ஒரு நாள் அவர்களுள் திருமாமகள் என்பவள் குமுதமலர் கொய்யக் காலதாமதமாயிற்று. அவர்கள் இவளை விட்டுச் சென்றனர். இவள் மானிட உருக்கொண்டு அங்குத் தனித்து நின்றனள். அப்போது திருநாங்கூர் வைத்தியன் ஒருவன் நீராடப் பொய்கைக்கு வந்தான் வைத்தியன் இவளைக் கண்டு விசாரித்து, இவளது வரலாற்றை அறிந்து, தனக்குச் சந்ததி இல்லாமையால் இவளைக் குமாரியாக ஏற்றுக் கொண்டான். இவள் குமுதமலர் கொண்டு நின்றதனால் இவளுக்குக் 'குமுதவல்லியார்' எனப் பெயரிட்டனர். இவள் மணப்பருவம் அடைந்தாள். இவளுடைய பேரழகைப் பற்றிக் கேள்வியுற்று ஆழ்வார் இவளைத் தனக்கு மணம் செய்து தருமாறு வைத்தியரை வேண்டினார்.

குமுதவல்லியர் பஞ்ச சமஸ்கார முள்ளவரையன்றி வேறு எவரையும் மணக்கப் போவதில்லையென்று தெரிவித்து விட்டார். ஆழ்வாரும் அவ்வாறே திருநறையூர் சென்று பரம வைணவரானார். அதாவது புயங்களில் சங்கு சக்கர பொறியேற்றார். இறைவனது பன்னிரு நாமங்களை ஓதி, மேனியில் பன்னிரண்டு இடங்களில் திருமண் காப்பு அணிந்து தாசன் என்னும் திருநாமம் ஏற்றார். இறைவனுக்குப் பூசனை செய்தார். இறைவன் உளமகிழ்ந்து, ''உன் நாமம் திருமங்கை யாழ்வார்; நம்முடைய பதிகள் பலவற்றையும் பாடி நீ உயர்வா யாக'' என வாழ்த்தினான். மன மகிழ்வோடு ஆழ்வார் குமுதவல்லியிடம் வந்து தன்னை ஏற்றுக் கொள்ளுமாறு வேண்டினார்.

குமுதவல்லியார், ''ஓர் ஆண்டுக்காலம் நாளும் அடியார் ஆயிரவர்க்கு அன்னம் அளிப்பீராயின் உம்மை

மணப்பேன்'' என்றார். ஆழ்வார் அதற்கு ஒப்புக் கொண்டார். குமுதவல்லியாரை நீலருக்கு வேத விதிப்படி நாடும் ஊரும் அறிய நல்லதோர் நாளில் திருமணம் செய்து கொடுத்தனர்.

## சிறைப்பட்டது

நீலன் அடியார்க்கு நாளும் அன்னம் அறுசுவையோடு அளித்தான். அவர்கள் வேதம் ஓதினர். ஆதலால் இறைவன் அங்கு மன்னினான். மன்னன் மங்கைமடம் என்ற மண்டபம் எழுப்பினான். அருகிலுள்ள பாடிகளில் வாழும் மறையவர் அங்குத் திரண்டனர். இதுகண்டு பொறாத சிலர் சோழ மன்னனிடம் முறையிட்டனர். இவன் மங்கை யொருத்திபால் அன்பு கொண்டுளான். இவனால் நாட்டின் தனம் அழியும் என்று மக்கள் பதைக்கின்றனர். அரசுக்குரிய கடமைகளை இவனது உள்ளம் அறவே மறந்தது என்றனர்.

ஆழ்வார் திருமால் அடியவர்க்கு அமுது செய்விப்பதில் தமது செல்வமனைத்தையும் இழந்தார். பகுதிப் பணத்தைச் செலுத்தாமையால் மன்னன் வெகுண்டு வீரர்களை ஏவினான். அவர்கள் தோற்று ஓடினர். அரசனும் படையெடுத்துச் சென்று தோல்வியுற்றான். தோல்வியுற்ற மன்னன் நீலனை வெல்லும் வகையை ஆய்ந்து அந்தணன் வடிவேற்று நீலனை நாடி, அவனை வஞ்சனையால் வென்றான்.

அரசன் ஆழ்வாரைச் சிறைப்படுத்தினான். மூன்று நாள் உபவாசம் இருந்து ஆழ்வார் வருந்தினார். எம்பெருமான் இவர் கனவில் தோன்றி, ''உமக்குப் பகுதிக்கு வேண்டிய திரவியம் தருகிறோம்; காஞ்சிபுரத்து ஏறவாரும்'' என்றார். இவரும் காவலருடன் காஞ்சிபுரம் சென்று வேகவதி தீரத்தில் தனம் இருக்கும் இடத்தை வரதராஜன் அடையாளத்துடன் கனவில் காட்டக்

கண்டார். அவ்வாறே ஆழ்வார் பொருளைப் பெற்று அரசனுக்குரிய பகுதிப் பணத்தைச் செலுத்திவிட்டு மிகுதியை அன்னதானத்திற்குப் பயன்படுத்தினார். அரசனும் இதையறிந்து இவரை வணங்கி மன்னிப்புப் பெற்றான். பிறகு இவர் இறைவனின் அருள்பெற்று திவ்விய தேசங்களைத் தரிசித்து மங்களாசாசனம் செய்தார்.

**இவர் பாடிய பாடல்கள்**

| | | |
|---|---|---|
| பெரிய திருவந்தாதி | ( 948 — 2031) | 1084 |
| திருக்குறுந்தாண்டகம் | (2032 — 2051) | 20 |
| திருநெடுந்தாண்டகம் | (2052 — 2081) | 30 |
| திருஎழு கூற்றிருக்கை | 2672 | 1 |
| சிறிய திருமடல் | 2673 | 1 |
| பெரிய திருமடல் | 2674 | 1 |
| | | 1137 |

நாலாயிர திவ்வியப் பிரபந்தத்துள் இவருடைய பாடல்கள் நாலில் ஒரு பாகத்தை வகிக்கின்றன. அதே போல் நம்மாழ்வார் பாடிய பாடல்களும் (1296 பாடல்கள்) நாலில் ஒரு பாகமாக உள்ளன.

## அட்டபுயம்

### (அறுசீர் ஆசிரிய விருத்தம்)

**மன்னவன் தொண்டையர் கோன்வணங்கும்**
**நீள்முடி மாலை வயிரமேகன்**
**தன்வலி தன்புகழ் சூழ்ந்தகச்சி**
**அட்ட புயகரத் தாதிதன்னை**

கன்னிநன் மாமதிள் மங்கைவேந்தன்
காமரு சீர்க்கலி கன்றிகுன்றா
இன்னிசை யால்சொன்ன செஞ்சொல்மாலை
ஏத்தவல் லார்க்கிடம் வைகுந்தமே

— *1127*

## பரமேஸ்வர விண்ணகரம்

*(வைகுந்த பெருமாள் கோயில்)*

*எழுசீர் ஆசிரிய விருத்தம்*

சொல்லுவன் சொற்பொருள் தானவை யாய்ச்சுவை
யூறொலி நாற்றமும் தோற்றமுமாய்
நல்லரன் நான்முகன் நாரண னுக்கிடந்
தான்தடஞ் சூழ்ந்தழ காயகச்சி
பல்லவன் வில்லவன் என்றுல கில்பல
ராய்ப்பல வேந்தர் வணங்குகழல்
பல்லவன் மல்லையர் கோன்பணிந் தபர
மேச்சுர விண்ணக ரம்அதுவே.

— *1128*

## இவரது காலம்

*திருமங்கையாழ்வார், 'பல்லவன் பணிந்த பரமேஸ்வர விண்ணகரம்' என்று பல பாடல்களில் குறித்துள்ளார். இவரே, 'நந்தி பணி செய்த நகர் நந்திபுர விண்ணகம்' என்றும் கூறியுள்ளார். பரமேஸ்வரன் என்றும் நந்திவர்மன் என்றும் இரு பெயர்களைக் கொண்டவன் பல்லவ மன்னனேயாவன். இம்மன்னனே*

காஞ்சியில் பரமேஸ்வர விண்ணகரத்தை (வைகுந்த பெருமாள் கோவிலை) அமைத்தவன். இவ்வாழ்வார் பரமேஸ்வரன் என்ற பல்லவ மன்னன் (கி. பி. 731 - 795) காலத்தவர்.

## முடிவுரை

திருமங்கையாழ்வார் ' திருவரங்கம், திருக்குடந்தை, திருபதிரிகாசிரமம், திருசாளக்கிராமம், நைமிசாரண்யம், சிங்கவேள் குன்றம், திருஎவ்வுளூர் (திருவள்ளூர்), திருவல்லிக்கேணி, திருநீர்மலை, திருக்கடல்மல்லை முதலிய பல திவ்விய தேசங்களைப் பற்றிப் பாடியுள்ளார். அகப் பொருள் துறையமைந்த பாடல்களில் 'பரகால நாயகி' என்று அழைக்கப்படுவார். இவ்வாறு உலகத்தை வாழ் வித்த பிறகு ஆழ்வார் திருநாட்டை அலங்கரித்தார்.

# 8. ஆசாரியர்கள்

## குருபரம்பரை

ஆழ்வார்கள் இறைவன் திருவுளப்படி மக்கள் உய்யவே இருள்தரு மாஞாலத்தில் வந்து அவதரித்தனர். மயர்வற மதிநலம் அருளப்பெற்ற ஆழ்வார்கள் பல திவ்விய தேசங்களுக்கும் சென்று பின்னானார் வணங்கும் சோதியாய் அர்ச்சாமூர்த்தங்களாய் திருக்கோயில் கொண்டுள்ள எம்பெருமானைப் பாடிப் பரவினர். மக்களுக்கு எம்பெருமானிடம் பக்தியை உண்டாக்கினர். ஆழ்வார்களை மக்கள் நன்கு புரிந்து கொள்ளவில்லை. எளிமையான அவர்களின் பாசுரக் கருத்துக்களையும் உணரவில்லை. ஆழ்வார்களுக்குப் பிறகு அவர்கள் அடியொற்றி ஆசாரியர்கள் தோன்றினர்.

மயர்வற மதிநலம் அருளப்பெற்ற ஸ்ரீமன் நாதமுனிகளின் பெருமுயற்சியால் கால வெள்ளத்தால் மறைந்து போன நாலாயிரம் பாசுரங்களும் அழியாவண்ணம் பட்டோலைப் படுத்தப்பட்டன. அவை இசையுடன் பாடப்பட்டன. அவைகளுக்கு வியாக்யானங்கள் எழுந்தன. ஸ்ரீ ஆளவந்தார், ஸ்ரீ இராமானுஜர், பராசர பட்டர் போன்ற ஆசாரியர்கள் எம்பெருமானிடம் மக்களுக்குப் பக்தியை உண்டாக்கினர். அனுஷ்டானத்திலும் சிறந்து விளங்கினர்.

இவ்வளவு பெருந்தொழிலையும் சர்வேஸ்வரன் செய்தது லீலா விபூதியிலுள்ள மக்கள் உய்ய வேண்டும் என்பதற்கேயாம். எல்லாம் வாசுதேவன் என்ற உணர்

வோடு தன்னை வந்து பக்தர்கள் அடையவேண்டுப் என்பதற்காகவுமாம்.

முதல் ஆசாரியன் பரமபத நாதனேயாவார். குரு சிஷ்ய பாவத்தில் திரு அஷ்டாட்சர மந்திரத்தை ஓதுவித் தார். சாஸ்திரங்களை வெளிப்படுத்தினார்.

அடுத்து வருபவர் வைணவ குலபதி எனப் போற்றப் படும் நம்மாழ்வார். ஸ்ரீமன் நாதமுனிகள் முதலாக ஸ்ரீ ஆளவந்தார் இராமானுஜர் இடையாக, மணவாள மாமுனிகள் ஈறாக உள்ளவர் ஆசாரியர்களாவர். இவர்கள் பூர்வாசாரியர்கள் எனப்பட்டனர். இவர்களை அடி யொற்றி மடங்களிலுள்ள சிம்மாசனாதிபதிகள் அவர்கள் பணியைச் செய்து வருகின்றனர்.

ஸ்ரீ வேதாந்த தேசிகரின் கடைசி காலத்திலும் பிறகும் வைணவத்தில் இரு பிரிவுகள் தோன்றின. அவையே வடகலை தென்கலைப் பிரிவுகளாகும். ஸ்ரீவேதாந்த தேசிகர் வடகலை சம்பிரதாயத் தலைவராகவும், ஸ்ரீ மணவாள மாமுனிகள் தென்கலை சம்பிரதாயத் தலைவராகவும் நியமிக்கப்பட்டவர்கள். இவர்கள் வெவ் வேறு காலத்தவர். தேசிகரின் மறைவுக்குப் பின்னரே மணவாளர் அவதரித்தார்.

இராமானுஜ தரிசனத்தைப் பரப்ப எடுத்துக்கொண்ட முயற்சிகளும் தியாகங்களும் அவை சம்பந்தமாக அவர்கள் அருளிய வடமொழி தென்மொழி நூல்களும் எண்ணில. ஆசாரியர்களுடைய வாழ்க்கை அனுபவங்கள் சுவை யுள்ளவை; பயனுள்ளவை. அவர்களுடைய நற்பண்புகள், கடவுள் பக்தி, பெரியோர்களிடம் கொண்ட மரியாதை, கல்வி கற்றலில் ஆர்வம், கற்றவற்றை மனத்திருத்தி வேண்டும்போது கொள்ளும் நினைவாற்றல், நல்ல ஒழுக்கத்தில் கவனம், பிறருக்குச் சேவை செய்யும் மனப் பான்மை, எதையும் சகிக்கும் ஆற்றல், பிறர் மனம் புண் படாதவாறு நாவகத்தால் நாவீறுடைமை, சிக்கன

வாழ்க்கை போன்ற நற்பண்புகள் நமக்கு வழிகாட்டு கின்றன.

அடியிற்கண்ட ஏழு ஆசாரியர்களின் சுருக்கமான வாழ்க்கைக் குறிப்புக்கள் இப்பகுதியில் இடம்பெறு கின்றன.

1. ஸ்ரீ நாதமுனிகள்
2. ஸ்ரீ ஆளவந்தார்
3. திருக்கச்சி நம்பிகள்
4. ஸ்ரீ இராமானுஜர்
5. கூரத்தாழ்வார்
6. ஸ்ரீ வேதாந்த தேசிகர்
7. ஸ்ரீ மணவாள மாமுனிவர்

ஆசாரியர்கள் முன்னின்று திருவாய் மொழிக்கு வியாக்கியானங்களும் செய்து வைத்தனர். இவர்கள் யாவரும் காஞ்சிபுரத்தோடு தொடர்பு உடையவர்கள்.

## 1. ஸ்ரீமந் நாதமுனிகள்

நாதமுனிகள் வீர நாராயணபுரம் என்னும் காட்டு மன்னார் கோயிலைச் சேர்ந்தவர். யோக ஞானமும், கல்வி ஞானமும் ஒருங்கே பெற்றவர். ஒரு சமயம் அவர் வடநாட்டு யாத்திரையை முடித்துக் கொண்டு திரும்பி வரும்போது கும்பகோணத்தில் சாரங்கபாணிப் பெருமானைக் கண் குளிரச் சேவித்து வீரநாராயணபுரம் திரும்பினார். காட்டு மன்னார் கோயில் கைங்கரியத்தில் ஈடுபடலானார். ஒரு நாள் அக்கோயிலுக்கு வந்த வைணவ பக்தர்கள் நம்மாழ்வார் பாசுரம் ஒன்றை இசையுடன் சேவித்தனர். நாதமுனிகள் அதைக் கேட்டு மெய்ம்மறந் தார். அப்பாசுரம் தான் முன் குடந்தையில் சேவித்து இன்புற்ற ஆராவமுதனைக் கண்முன் கொண்டுவந்து நிறுத்திற்று.

ஆரா அமுதே என்று தொடங்கி, பத்துப் பாசுரங் களையும் பாடி முடித்தனர். நாதமுனிகள் அவர்களை

நோக்கி, ''பிற பாசுரங்கள் தெரியுமோ?'' என வினவி னார். அவர்கள் தங்களுக்குத் தெரியாதெனச் சொல்லி வருந்தினர். பிற பாசுரங்களையும் அறிய வேண்டுமென்ற அவா அதிகரித்தது. வந்த பக்தர்களை உபசரித்து அனுப்பி விட்டு நம்மாழ்வாரின் அவதார க்ஷேத்திரமாகிய திருக் குருகூரைச் சென்று அடைந்தார்.

மதுரகவியாரின் சீடர் வழிவந்த ஒருவரைச் சந்தித் தார். அவர் மதுரகவியாரின் 'கண்ணிநுண் சிறுத்தாம்பி னால்' என்று துவங்கும் பதினோரு பாசுரங்களையும் திருப்புளியாழ்வார் என்னும் புளிய மரத்தடியில் அமர்ந்து பல தடவைகள் அனுசந்தித்தார். நம்மாழ்வார் அருள் சுரந்தது. யோக தசையில் திருவாய் மொழிப் பாசுரங் களேயன்றி மற்றை ஆழ்வார்களின் பாசுரங்களையும் உபதேசித்தார். நாதமுனிகள் அவற்றை ஞானசக்தியால் உணர்ந்து பட்டோலைப் படுத்திக் கொண்டார். திருவாய் மொழியைத் தேடி வந்தவருக்குத் திவ்வியப் பிரபந்தங்கள் அனைத்தையும் பெறும் பாக்கியம் கிட்டியது.

ஊர் திரும்பிய பிறகு, அவர் அவற்றைத் தொகுத்து இசையமைத்து உலகுக்கு உதவினார். இசையோடும் தாளத்தோடும் பாடித் திருவாய் மொழியை எல்லாரும் பாட வகை செய்தார். அவற்றின் பொருள் உணர்த்தி னார். எனவே இவருக்குத் 'தமிழ்மறை நாலாயிரம் தந்த வள்ளல்' என்ற பெயர் உண்டாயிற்று.

காலத்தால் மறைந்த ஆழ்வார் பாசுரங்களை வெளிக்குக் கொண்டு வந்த பெருமை இவரையே சாரும். இவரே நம்மாழ்வாருக்கு அடுத்தபடி வைணவ சமயா சாரியர்களில் முதல்வராவர். இவருக்குப் பின்னும் வைணவம் தழைத்தோங்க இவருடைய பேரர் ஆளவந்தாரைச் சீடர் மணக்கால் நம்பியைக் கொண்டு சமயக் குரவராக்கி ஈடுபடுத்தினார். திருவரங்கன் சேவையில், கைங்கரியத்தில் ஆர்வம் கொள்ளச் செய்தார்.

## 2. ஸ்ரீ ஆளவந்தார்

இவருடைய பிள்ளைத் திருநாமம் யமுனைத்துறைவர் என்பது. நாலாயிரங் கண்ட நாதமுனிகளின் பிள்ளை வயிற்றுப் பேரர் யமுனைத் துறைவர். இளமையிலேயே எல்லாக் கலைகளையும் ஐயந்திரிபறக் கற்றறிந்தார். வேத சாஸ்திரங்களைத் தந்தைபால் கற்றதுடன் இலக்கணம் தர்க்கம் முதலியவற்றையும் கற்றுத் தேர்ச்சி பெற்றிருந்தார்.

அப்போது ஆக்கியாழ்வான் என்ற வடமொழிப் புலவர் ஒருவர் இருந்தார். இவர் சோழ மன்னனின் புரோகிதனாக இருந்தார். இவர் புல்மையில் அரசருக்குப் பெரிய மதிப்பு இருந்தது. புலவருக்குச் செருக்கும் இருந்தது. புலவர்களை வீணில் வாதுக்கழைத்து வெற்றி கண்டு வந்தார். அவர்களைத் தனக்குக் காணிக்கை செலுத்தி வரச் சொன்னார். அரசனுடைய அவைப் புலவராயிற்றே. காணிக்கை கட்ட மறுத்த சிறுவர் யமுனைத் துறைவருக்கும் ஆக்கியாழ்வானுக்கும் வாதப் போர் நிகழ்ந்தது. போரில் யார் வெல்லுவர் என்பது பற்றி அரசருக்கும் கோப்பெருந்தேவிக்கும் சர்ச்சை ஏற் பட்டது. கோப்பெருந்தேவி யமுனைத் துறைவரே வெற்றி வாகை சூடுவார் என்றாள்.

வாதப் போர் நிகழ்ந்தது. யமுனைத் துறைவர் கூறுவதை ஆக்கியாழ்வான் மறுக்க வேண்டும். வயதில், உருவில் சிறியர் வாதப் போரில் வல்ல சிறுமாமணிகர் யமுனைத்துறைவர் என்பதை ஆக்கியாழ்வான் அறியான் போலும்.

1. உம்மைப் பெற்ற அன்னையார் மலடியல்ல.

2. அரசன் தருமவான்.

3. கோப்பெருந்தேவியார் கற்புடையார்.

என்ற மூன்று உண்மைகளை வெளியிட்டார். இவற்றைக் கேட்ட ஆக்கியாழ்வான் திகைத்தார். எப்படி இவற்றை மறுக்க முடியும்? அரசன் முகத்தில் தோல்வி நிழலாடியது. கோப்பெருந்தேவி முகத்தில் வெற்றிப் புன்னகை தவழ்ந்தது. ஆக்கியாழ்வான் தலை குனிந்தான்.

அரசர் அவற்றை மறுத்துக் கூற யமுனைத்துறை வரையே வேண்டினார். ஒரு பிள்ளையும் பிள்ளையல்ல; ஒரு மரமும் தோப்பாகாது. ஆகவே இவர் அன்னையாரை மலடி எனலாம் என்றார். அரசன் மக்கள் பாவங்களை ஏற்கிறான் "என்பதால் தர்மவான் அல்லன். மகளிர் மணக்கு முன் வேத நூற்படி தேவர்களுக்கும் கந்தர்வர் களுக்கும் அர்ப்பணம் செய்யப்பட்டே மணமகனுக்குத் திருமணம் செய்யப்படுகின்றார்கள். ஆனதால் அவ் வகையில் கற்புடையர் அல்லர் கோப்பெருந்தேவியார் என்றார்.

கோப்பெருந்தேவியார் மகிழ்ச்சி பொங்கத் தன் சபதம் கெடாமல் வெற்றி சூடிய யமுனைத்துறைவரை என்னை ஆளவந்தாரோ? என விளித்து ஆரவாரம் செய்தாள். மன்னனும் ஆளவந்தாரின் அறிவு நுட்பங்கண்டு வணங்கித் தான் முன்கூறியபடி பாதி ராஜ்யத்தையும் பகிர்ந்து கொடுத்தான். ஆளவந்தார் என்ற பெயரே நிலைத்து விட்டது யமுனைத்துறைவருக்கு.

தம் பேரர் சமய உண்மைகளை உணர்ந்து திருவரங்கப் பெருஞ் செல்வத்தைக் காக்க வேண்டு மென்பது நாதமுனிகளுக்குப் பேரவா. இப் பணியைச் செய்யத் தம்முடைய சீடர்களுள் ஒருவரான மணக்கால் நம்பிகளை நியமித்தார். அவரால் அரச பீடத்தில் அமர்ந் திருக்கும் ஆளவந்தாரை எளிதில் அணுக முடியவில்லை. ஆளவந்தாருக்குத் தூதுளம் கீரையில் பிரியம் அதிகம் என உணர்ந்து அதன் மூலம் அறிமுகமானார். அவருடன் பழகிப் பாட்டனாரின் அவாவினை அவருக்குத் தெரிவித்

தார். திருவரங்கத்துக்கு அவரை அழைத்துச் சென்று திருவரங்கச் செல்வனைச் செல்வமெனக் காட்டினார். அன்று முதல் ஆளவந்தார் அரச செல்வத்தை உதறித் தள்ளிவிட்டுப் பாட்டனார் வழங்கிய செல்வத்தை ஏற்றுத் திருவரங்கனை வழிபட்டு, வைணவ பக்தி மதத்தைப் பரப்பி வரலானார்.

இவர் பல சமயங்களில் காஞ்சிபுரத்திற்கு வந்து வைணவ தரிசனத்திற்கு ஆவன செய்துள்ளார். இராமானுஜர் பிரபலமானதற்கு இவரே காரண பூதராவார்.

## 3. திருக்கச்சி நம்பிகள்

### அவதாரம்

சென்னைக்கு மேற்கே பூவிருந்தவல்லி (பூந்தமல்லி) என்ற திருத்தலம் உள்ளது. இத்தலத்தில் வீரராகவ செட்டியாருக்கும் அவர் தம் துணைவியார் கமலையாருக்கும் ஓர் ஆண் மகவு பிறந்தது. ஸ்ரீ வைஷ்ணவம் தழைக்க அவதரித்த அக் குழந்தைக்குத் திருக்கச்சி நம்பி என்னும் திருநாமம் சூட்டிப் பெற்றோர் மகிழ்ந்தனர். இது கி. பி. 1009-ஆம் ஆண்டு.

திருக்கச்சி நம்பி இளவயதிலிருந்தே இறைவனிடம் ஈடுபாடு கொண்டவராயிருந்தார். வாணிபத்தில் நாட்டம் ஏற்படவில்லை. பொருட் செல்வத்தை விட அருட் செல்வத்தையே அவர் மனம் நாடியது. தம் செல்வத்தை அருட்பணிக்கே செலவிடலானார். நந்தவனம் அமைத்து காஞ்சி வரதராஜப் பெருமாளுக்கு மலர் கைங்கரியும் செய்து வந்தார். பெருமாள் மனம் மகிழ்ந்து, ''உவந்தோம் நம்பி'' என்று திருவாய் மலர்ந்தார்.

பூவிருந்தவல்லியிலிருந்து காஞ்சிபுரம் வரும் வழியில் ஸ்ரீபெரும்புதூர் இருக்கிறது. அங்கு ஆசூரி கேசவாச்

சாரியார் காந்திமதி தம்பதியருக்குக் கச்சிப்பெருமான் அருளால் இராமானுஜர் மகவாகப் பிறந்தார். திருக்கச்சி நம்பி காஞ்சிபுரம் வரும்போது அவர்கள் இல்லத்திற்கும் சென்று வருவார்.

## காஞ்சி வாசம்

திருக்கச்சி நம்பியின் தொண்டுக்கு மகிழ்ந்த காஞ்சி வரதராசப் பெருமாள் சிலை வடிவில் நின்று அவருக்கு அருள் புரிந்ததோடு, நேருக்கு நேராக அவருடன் பேசும் ஒப்பற்ற பேற்றையும் உவந்தருளினார். அன்று முதல் நம்பிகள் பெருமாளுடன் நேரில் பேசும் வாய்ப்பினைப் பெற்று மகிழ்ந்திருந்தார்.

ஸ்ரீ வைஷ்ணவ சம்பிரதாயத்தில் குருவுக்கே ஏற்ற முண்டு. வரதராஜப் பெருமாளின் அனுமதி பெற்று, திருவரங்கத்திலுள்ள ஆளவந்தாரிடம் உபதேசம் பெற திருவரங்கம் வந்து சேர்ந்தார். ஆளவந்தார் திருக்கச்சி நம்பிகளை அன்புடன் வரவேற்றார். திருக்கச்சி நம்பிகள் பெருமாளுடன் நேரில் பேசும் புண்ணியம் வாய்க்கப் பெற்றவர் என்பதனை அங்குள்ளாருக்கு எடுத்துக் கூறினார். நம்பிகளுக்குப் பஞ்ச சமஸ்காரம் செய்து வைத்துப் 'பேரருளாளதாசர்' என்னும் திருப்பெயரையும் சூட்டி மகிழ்ந்தார். 'ஆளவந்தாரை ஆச்சார்யராகப் பெறுவதற்குத் துணை புரிந்த பெரிய நம்பிகளின் பெருங் கருணையைத் திருக்கச்சி நம்பி எண்ணி மகிழ்ந்தார்.

## இராமானுஜருக்கு உதவுதல்

திருக்கச்சி நம்பிகள் காஞ்சிக்கு வந்து வரதராஜப் பெருமாளுக்கு ஆலவட்டத் திருப்பணி (கவரி வீசுதல்) செய்து வந்தார். காஞ்சியில் தங்கியிருந்த நம்பிகளைக் காண இராமானுஜர் விரும்பினார். யாதவப் பிரகாசரிடம் மாணாக்கராக இருந்து, பின்னர் அவரைவிட்டு நீங்கிய

இராமானுஜர் நம்பிகளை ஆசாரியராக ஏற்றார். அவரிடம் முறையாகப் பல கலைகளையும் பயின்றார். சில சந்தேகங்களைத் தெளிவுபடுத்துமாறு வேண்டினார்.

இராமானுஜரின் சந்தேகங்களைத் தெளிவுபடுத்துமாறு வரதராஜப் பெருமாளிடம் திருக்கச்சி நம்பிகள் வேண்டிக் கொண்டார். பெருமாளும் நம்பிகளின் வேண்டுகோளின்படி பதிலுரை தந்தருளினார். அவை வருமாறு :

1. நாமே (நாராயணனே) பரம்பொருள்.
2. ஜீவாத்மாவும் பரமாத்மாவும் வேறு வேறு என்பதே சித்தாந்தம்.
3. மோட்சத்திற்குச் சரணாகதியே சிறந்த சாதனம்.
4. அந்திம காலத்தில் நம்மை (நாராயணனை) நினைக்க வேண்டும் என்பதில்லை.
5. பிறவியின் முடிவில் வைகுந்த பதவி சித்திக்கும்.
6. பெரிய நம்பிகளை ஆச்சார்யராக ஏற்கவும்.

இதனால் இராமானுஜரின் ஐயங்கள் நீங்கித் தெளிவு பிறந்தது.

## திருநாடு அலங்கரித்தல்

பாகவதர்களுக்குப் பணிவிடை செய்வதும், ஆசார் யரின் அருளைப் பெறுவதுமே முக்திக்குரிய நெறியென்று உணர்ந்து அதன்படிச் சில காலம் நம்பிகள் வாழ்ந்து வந்தார். இடையில் ஒரு முறை பூவிருந்தவல்லிக்குச் சென்றிருந்தார். அங்கிருந்த பக்தர்கள் ஒருங்குகூடி நம்பியைப் பெருஞ்சிறப்புடன் வரவேற்றனர். அங்கு பெருமாளுக்கும் இவருக்கும் கோயில் எழுப்புமாறு பக்தர் களுக்கு இறைவன் கனவில் தோன்றி கட்டளையிட்டார். அவ்வாறே திருக்கோயில் எழுப்பப்பட்டது.

பின்னர் நம்பிகள் காஞ்சிபுரம் திரும்பி வந்து கைங் கரியம் செய்து வந்தார். 'தேவராஜ அஷ்டகம்' என்னும் பாமாலையைப் பாடிப் பரமனைப் பரவினார். பெருமாளும் மனமுவந்து அவருக்குத் தீர்த்தப் பிரசாதம், பரிவட்டம், ஸ்ரீசடகோபம் ஆகிய வரிசைகளை அருளி நம்பிகளை மடத்திற்குச் செல்லுமாறு பணித்தார்.

தம் மடத்திற்குத் திரும்பிய நம்பிகள் தம் ஐம்பத்து ஐந்தாம் வயதில் தம் ஆசார்யனாகிய ஆளவந்தாரின் திருவடிகளைச் சிந்தித்தவாறே திருநாட்டுக்கு எழுந் தருளினார். இவருக்குக் காஞ்சியில் திருக்கோயில் இருக் கிறது. நித்திய நைமித்திய வழிபாடுகள் நடைபெறு கின்றன. இவருடைய பெயரைத் தாங்கிய திருக்கச்சி நம்பித் தெருவில் இக்கோயில் உள்ளது. நம்பிகளின் வாழ்க்கை வரலாறு வைணவ அடியார்களுக்கு ஒரு வழி காட்டியாகும்.

## 4. இராமானுஜர்

**(கி. பி. 1017-1137)**

வைணவ குரு பரம்பரையில் மிகச் சிறப்பாகப் பாராட்டப்படுபவர் இராமானுஜர். ஸ்ரீ வைஷ்ணவக் கோட்பாடு இவர் பெயராலேயே இராமானுஜ சித்தாந்தம் என வழங்கப்படுகிறது. இவரது ஊர் ஸ்ரீபெரும்புதூர். தந்தையார் ஆதிகேசவப் பெருமாள்; தாயார் காந்திமதி. தொடக்கத்தில் இல்வாழ்க்கையினை மேற்கொண்டு, தமக்கு வாய்த்த மனைவி தெய்வீக வாழ்க்கைக்குத் துணை யாகவில்லை எனக் கண்டபோது, முற்றாகத் துறந்து, துறவு வாழ்க்கையை மேற்கொண்டார்.

பிரம சூத்திரத்திற்கு இவர் எழுதிய பாஷ்யமே வைஷ்ணவ சித்தாந்தத்துக்கு அடிப்படை நூலாகப் பாராட்டப்படுகிறது. நாலாயிர திவ்வியப் பிரபந்

த்தைப் பயின்று இவர் பெற்ற அனுபவம் இவர்தம் கோட்பாட்டை விளக்கத் துணை செய்துள்ளது. திருவரங்கத்தில் ஆசாரிய பீடத்தில் அமர்ந்து வைஷ்ணவ சித்தாந்தத்தைப் பல இடங்களிலும் பரப்பியதோடு எதிராஜனாகப் பாரதம் முழுவதும் சுற்றி வந்தார்.

சமய உலகில் ஆழ்வார் பிரபந்தங்களுக்கு முனிவர்களின் வேதவாக்குகளோடு ஒத்த மதிப்பளித்துத் தம் கோட்பாட்டை விளக்கியதும் சமுதாய நிலையில் தாழ்த்தப்பட்ட மக்களைத் திருக்குலத்தார் எனப் பெயரிட்டு, வேத கல்விக்கும் உரியவர்கள் ஆக்கியதும் இவர் செய்த பெரும் பணி எனல் வேண்டும். பங்குனித் திங்கள் பூரட்டாதி நாளே இவரது குருபூஜை நாள்.

இவர் சந்நியாசம் ஏற்றார். ஆளவந்தார் மறைவுக்குப் பிறகு அவர் நிர்வகித்து வந்த பொறுப்புக்களை இராமானுஜர் ஏற்று உடையவர் ஆனார்.

இராமானுஜர் திருக்கோட்டியூர் நம்பி என்பாரிடம் மறை பொருளைக் கற்றுக் கொண்டார். (அஷ்டாட்சர மந்திரத்தை உபதேசம் பெற்றார்.) ''நான் இந்த ரகசியத்தை வேறு ஒருவருக்கும் வெளியிடேன்'' என்று பிரமாணம் செய்து கொடுத்த பின்னரே அவர் மகா மந்திரத்தை உபதேசித்தார். இராமானுஜர் குருவினிடம் விடைபெற்றுக் கொண்டு நேரே கோபுரத்தின் மீது ஏறினார். அஷ்டாட்சர மந்திரத்தை வந்திருந்த அனைவர்க்கும் உரக்க உச்சரித்தார்.

இதைக் கேள்வியுற்ற திருக்கோட்டியூர் நம்பி கடுங்கோபங் கொண்டார். இராமானுஜர் பணிவாக, ''சுவாமி! அடியேனுக்கு நரகமே சித்திக்கட்டும். இம்மந்திரத்தைக் கேட்ட அனைவரும் முத்தி பெறுவர். நான் செய்ததில் தவறு ஒன்றுமில்லை'' என்று கூறினார். இதைக் கேட்ட திருக்கோட்டியூர் நம்பி மனம் மாறி, இவருக்குச் சீடரானார்.

இவர் (கி. பி. 1017—1137) 120 ஆண்டுகள் இம் மண்ணுலகில் வாழ்ந்தார். எதிராஜர், உடையவர், பாஷ்யக்காரர், எம்பெருமானார், யதிபதி, மந்நாதர் என்பன இவரது வேறு பெயர்கள்.

''கடவுளும் உயிரும் வெவ்வேறாகும். கடவுளிட மிருந்து வேறுபட்டு நிற்கும் உயிர் பக்தியினால் கடவுளிடம் ஒன்றுபடுகிறது'' என்று இவர் போதித்தார். இவருடைய இக்கொள்கை விசிஷ்டாத் துவைதம் எனப் பட்டது. ''முத்தியடைய பக்தியே சிறந்த வழியாகும். கடவுள் முன்னிலையில் அனைவரும் ஒன்று; சாதி வேறுபாடுகள் இல்லை. எச்சாதியினர் ஆனாலும் பக்தி யினால் கடவுளை அடையலாம்'' என்று இவர் போதித் தார்.

இவரும் பிரம சூத்திரத்திற்கு உரை எழுதியுள்ளார். கீதாபாஷ்யம், நித்தியக் கிரந்தம், சத்தியத்திரயம் என்னும் நூல்களையும் இவர் இயற்றியுள்ளார். இவர் நூற்றிருபது ஆண்டுக்காலம் உயிர் வாழ்ந்ததாகக் கூறப் படுகிறது. இவர் காஞ்சிபுரத்தோடு அதிக தொடர்பு உடையவர்.

## 5. கூரத்தாழ்வார்

காஞ்சிபுரத்திற்கு வடமேற்கில் கூரம் என்றொரு கிராமம் இருக்கிறது. அப்பதியில் செல்வம் மிகுந்த அந்தணர் குடும்பத்தில் நந்தர், பெருந்தேவி தம்பதி யருக்குக் கூரேசர் பிறந்தார். இவரது பிள்ளைத் திருநாமம் ஸ்ரீவத்சாங்கர் என்பது. இதற்குத் தமிழில் திருமறுமார்பர் என்று பெயர். இவர் கூரத்தில் பிறந்தமையால் கூரேசர் என அழைக்கப்பட்டார். இவரது தந்தையர் பால் கல்வி கற்று ஒழுக்கத்தில் சிறந்து விளங்கினார். திருமகள் கேள்வன்பால் பக்தி பூண்டு பரம வைணவரானார். திருக்கச்சி நம்பிகள் இவரைக் கூரத்தாழ்வார் என்றே அழைத்தார்.

காஞ்சிமாநகர் வரதராஜப் பெருமாளே வியக்கும் அளவுக்கு இருந்தது அவரது பெருஞ் செல்வம். அத்தனை செல்வத்தையும் ஏழை எளியவருக்குத் தானம் செய்து விட்டு, ஸ்ரீ இராமானுஜரை வணங்கி அவருடைய பிரதம சீடராய் வாழ்ந்து வந்தார். இராமானுஜருடன் ஸ்ரீரங்கம் சென்று அவருடன் வாழ்ந்து வந்தார்.

அந்நாளில் சோழமன்னன் சைவனாய் இருந்தான். வைணவராயிருந்த இராமானுஜரைக் கொல்ல நினைத்து அவருக்கு ஆள் அனுப்பினான். அப்போது கூரத்தாழ்வார், "தேவரீரைப் பழிவாங்கவே மன்னன் எண்ணியுள்ளான். தேவரீர் அங்குச் செல்வது தகாது. அடியேன் தேவரீரது ஸ்தானத்தில் சென்று வருவேன். தங்கள் காஷாயத்தை அடியேனுக்கு அளித்துவிட்டுத் தேவரீர் அடியேனது வெள்ளை வேட்டியை அணிதல் வேண்டும். இனித் தாமதிக்க நேரமில்லை. உடனே புறப்பட்டுப் போதல் வேண்டும்" என்றார். கூரத்தாழ்வார் கூறியபடியே உடையவர் மடத்தை விட்டு வெளியேறினார்.

கூரத்தாழ்வார் குருவின் காஷாயம் தரித்து, திரிதண்டம் ஏந்திக் கமண்டலத்தை எடுத்துக் கொண்டு அரசனின் ஏவலரைப் பின்தொடர்ந்தார். பெரிய நம்பியும் உடன் சென்றார். அரசன் அவரை இராமானுஜர் என்றே நினைத்து ஆசனமளித்து உபசரித்தான். கூரத்தாழ்வார், "மன்னனே, பண்டித சிகாமணிகளே! சர்வ லோகத்தையும் தூய்மைப்படுத்தும் ஸ்ரீ மகாவிஷ்ணுவே பிரம்மா தொடங்கி, தூண் ஈறாக உள்ள பிரபஞ்சத்திலுள்ள யாவர்க்கும் உபாசனா மூர்த்தியாவார்" என்றார்.

இதனைக் கேட்ட அரசன் வெகுண்டு, "இன்றே சைவ சமயத்தை நீர் பின்பற்ற வேண்டும். இன்றேல் உமக்குத் துன்பம் நேர்வது திண்ணம்" என்றான். கூரேசர் அதற்கு இணங்காமையால் அரசன் வெகுண்டு, "இவர்களுடைய கண்களைப் பிடுங்கி விட வேண்டியது" என்றான். மதி

யிழந்த மன்னனைக் காண்பதே பாவம் என்று கூரேசர் தம் நகங்களாலேயே கண்களைப் பிடுங்கி அவன் மேல் வீசினார். பெரிய நம்பியின் கண்களை ஏவலர் போக்கி விட்டனர்.

சிறிதுகாலம் சென்றதும் அரசனுக்குக் கண்டமாலை தோன்றி, புழுக்கள் அரித்து விரைவில் அவன் மாண்டான். அதனால் அவனுக்குக் 'கிருமிகண்டன்' என்று பெயர் வழங்கலாயிற்று. கூரத்தாழ்வார் தோன்றிய நாள் தொட்டு வைகுந்த பிராப்தி அடைந்தது ஈறாக, தியாக சீலராகவே வாழ்ந்து உலகோர் உய்ய வழிகாட்டினார். இவர் பஞ்சஸ்தவம் என்ற நூலையும், உடையவர் அருளிய கத்தியத்திரையத்திற்கு உரையையும் எழுதியுள்ளார். இவர் பரமபதம் அடைவதற்கு முன்னரே இறைவன் அருளால் கண் பார்வையைத் திரும்பப் பெற்றார் என்று கூறுகின்றனர்.

## 6. ஸ்ரீவேதாந்த தேசிகர்

### (கி. பி 1268 - 1369)

காஞ்சி மாநகரத்திற்கு அருகில் உள்ள 'தூப்புல்' என்ற பகுதியில்தான் இவர் தோன்றினார். பெற்றோர் அனந்தசூரி, தோதாரம்மை. இவரது பிள்ளைத் திருநாமம் 'வெங்கடேசன்.' வேதாந்த தேசிகர் என்ற பட்டப் பெயர் பின்னால் வழங்கப்பட்டது. காஞ்சி மாநகரையே வாச ஸ்தலமாகக் கொண்டு, பிரவசனம் செய்து வைணவ தரிசனத்தைப் பரப்பி வந்தார்.

இவர் நம்மாழ்வார் திருவாய் மொழிப் பாசுரங் களிலும், இராமானுஜர் இயற்றிய ஸ்ரீபாஷ்யத்திலும் ஆழங்காற்பட்டவர். ஸ்ரீ பாஷ்யத்தை மட்டும் 30 தடவைக்கு மேல் பிரவசனம் செய்திருக்கிறார். இராமானுஜர் தரிசனத்தை வளர்த்தார். ஆசு, மதுரம்,

சித்திரம், வித்தாரம் என்னும் நாற்கவிகளிலும் விற்பன்னர், 'கவிதர்க்க கேசரி' என்று பட்டம் சூட்டப் பெற்றார்.

எளிய வாழ்க்கையை நடத்தினார். உஞ்சிவிருத்தி செய்தே தேக யாத்திரையை நடத்தினார். பெருமான் ஆராதனமும் நடந்தது. இவரது தேசிகப் பிரபந்தம் படிப்போர் உள்ளம் தெளியும் கருத்துள்ளது. இவர் காலத்திற்குப் பின் வைணவத்தில் இவரைத் தலைவராகக் கொண்டு வடகலை சம்பிரதாயம் உருவாயிற்று. தென் கலை சம்பிரதாய பிள்ளை லோகாசாரியாரும் இவரும் தாயாதிகள்.

முஸ்லீம் படையெடுப்பின் போது இவ்விருவரும் கலந்து திருவரங்கனைப் பத்திரப்படுத்துவதில் தியாகங்கள் பல செய்தனர். இவர் 101 ஆண்டுகள் வாழ்ந்து பின்னர் திருநாட்டை அலங்கரித்தார்.

ஸ்ரீ வேதாந்த தேசிகருக்குக் காஞ்சி விளக்கடி கோயில் தெருவில் கோயில் உள்ளது. வரதராஜப் பெருமாள் பிரம்மோத்சவத்தின் போது தேசிகர் சன்னதிக்குப் பெருமாள் எழுந்தருளுவது வழக்கம். அதே போல் தேசிகர் பிரமோத்சவத்தின் போது தேசிகர் வரதராஜப் பெருமாள் கோவிலை வலம் வருவது வழக்கம்.

## 7. ஸ்ரீ மணவாள மாமுனிகள்

### (கி. பி. 1370-1443)

மணவாள மாமுனிகளைக் கற்றறிந்தோர் இராமானுஜரின் மறு அவதாரம் என்று கூறுவர். இராமானுஜரைப் போலவே இவரும் ஆதிசேஷனின் அம்சம். இவர் ஆழ்வார்களின் பாசுரங்களில் சிறப்பாக நம்மாழ்வார் பாசுரங்களில் ஆழங்காற்பட்டவர். இருவருமே திருவரங்கப் பெருமான் திருவருளுக்குப்

பாத்திரமானவர்கள் ஆசாரிய மணிமாலையில் மணவாள மாமுனிகள் கடைசியானவர். ஆயினும் பரமனருளால் மயர்வற மதிநலம் அருளப் பெற்றமையால் பூர்வாசிரியர்கள் அனைவருடைய ஞான பக்தி முதலியன இவரிடம் நிரம்பி வழிந்தன. வடமொழி தென்மொழி இரண்டிலும் வாக்குத் தெளிவும் எழுத்தாற்றலும் சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் திறனும் அவரை அணி செய்தன.

இவர் ஆழ்வார் திருநகரியில் அவதரித்தார். பெற்றோர் தாதரண்ணர், அரங்க நாச்சியார். இவர் ஆசாரியார் நியமனப்படி எதிராஜ சதுர்வேதி மங்கலத்தில் எம்பெருமானார் தரிசனத்தைப் பரப்பிக் கொண்டு ஆழ்வார்கள் அருளிச் செயல்களையும் ஸ்ரீ பாஷ்யத்தையும் சீடர்களுக்கு விளக்கி வந்தார். ஸ்ரீ சைலேசர் திருநாடு அலங்கரித்ததும் மணவாளர் திருவரங்கம் வந்து சேர்ந்தார்.

மணவாள மாமுனிகள் திருநாட்டை அலங்கரித்தார் யதி சமஸ்கார முறைப்படி திருப்பள்ளிப்படுத்தப்பட்டார் சரம கைங்கர்யம் ஜீயர் நாயனாரைக் கொண்டு பூர்த்தி செய்யப்பட்டது.

**அடியார்கள் வாழ அரங்கநகர் வாழ**
**சடகோபன் தண்தமிழ்நூல் வாழ— கடல்சூழ்ந்த**
**மன்னுலகம் வாழ மணவாள மாமுனியே**
**இன்னுமொரு நூற்றாண் டிரும்.**

இவர் தென்கலை வைணவத்தை வளர்த்தவராவர். தென்கலையாருக்கு இவரே ஆசாரியார். வரதராஜப் பெருமாள் கோயிலில் இவருடைய சந்நிதி இருக்கிறது. இவருக்குச் சாத்துமுறை உற்சவங்களைத் தென்கலையார் செய்து வருகின்றனர்.

# 9. சிலாசாசனங்கள்

## முன்னுரை

நாம் இதுவரை காஞ்சிமாநகரைப் பற்றிப் புராண இதிகாசங்களிலும் இலக்கியங்களிலும் கூறிய செய்திகளை அறிந்தோம். இனி கல்வெட்டுக்கள் காஞ்சிமாநகர் பற்றி என்ன கூறுகின்றன என்பதைப் பார்ப்போம். காஞ்சி புரத்தில் ஏகாம்பர நாதர் கோவில், பரமேஸ்வர விண்ணகரம் என்ற வைகுந்தப் பெருமாள் கோயில், கைலாச நாதர் கோயில், வரதராஜப் பெருமாள் கோயில் ஆகியவற்றில் பல கல்வெட்டுக்கள் உள்ளன. இன்னும் சில கோயில்கள் தொல்பொருள் ஆராய்ச்சி இலாகா வினரின் பாதுகாப்பில் உள்ளன. வாசகர்களின் நலங்கருதி உதாரணத்திற்காக, சின்ன காஞ்சிபுரம் வரதராஜப் பெருமாள் கோயில் உள்ள அருளாளப் பெருமாள் கோயில் உள்ள அருளாளப் பெருமாள் கோயில் சாசனம் பற்றிக் கீழே விவரிக்கப்பட்டுள்ளது.

## கல்வெட்டு

கல்வெட்டு என்பது அரிய செய்திகளைக் கல்லில் வெட்டி வைப்பதாகும். இங்ஙனம் வெட்டப்பெறும் கல் எழுத்துக்குச் சாசனம் என்றும் சிலாலேகை என்றும் பெயர்கள் உண்டு. இவ்வாறு கல்லில் எழுதும் வழக்கம் பழங்காலந்தொட்டே நம் நாட்டில் இருந்து வந்தது. ஆனால் அப்பழங்காலத்தில் போரில் புறங்கொடாது இறந்துபட்ட வீரர்களின் பீடும் பெயருமே கல்லில் எழுதப் பெற்று வந்தன. அவைகளுக்கு நடுகல் என்று பெயர்.

தானதருமங்களைப் பற்றி எழுதி வைக்கும் வழக்கம் அப்பழங்காலத்தில் இல்லை. பல்லவர் ஆட்சி தொடங்கிய பின்னரே இவ்வழக்கம் ஏற்படலாயிற்று. இவ்வாறு அறச் செயல்களைப் பற்றிச் செதுக்கப்பட்ட கல்வெட்டுக்களின் தொடக்கத்தில் அக்காலத்து அரசனது மெய்க்கீர்த்தியும், அதன்பிறகு தானஞ் செய்வோர், தானம் செய்யப்படும் பொருள், அதைப் பாதுகாக்கும் முறை முதலிய செய்திகளும் குறிக்கப் பெற்றிருக்கும் இம் மெய்க்கீர்த்தி பத்தாம் நூற்றாண்டில் முதலாம் இராசராசன் ஆட்சிக் காலத்தில் தான் விரிவாகக் கூறும் பழக்கம் ஏற்பட்டுள்ளது.

தமிழ் மன்னர்களுடைய வெற்றி மேம்பாடுகளும், அக்காலத்து நாகரிகங்களும், புரவலர், புலவர், தலைவர்கள் முதலியோர் வரலாறுகளும், பல தூய தமிழ்ச் சொற்களும் இன்னும் எத்தனையோ பல அரிய செய்திகளும் கல்வெட்டுக்களினால் அறிகிறோம். அக்காலத்தார் கல்வெட்டுக்கள் பழுதுறாவண்ணம் எண்ணெய் பூசிப் பாதுகாத்து வந்தனர். இதைக் கோயில் மேற்பார்வையாளர்கள் கவனித்து வந்தனர் செப்புத் தகடுகளில் நகல் எழுதியும் வைத்திருந்தனர். கல்வெட்டுக்களை இக் காலத்தார் போற்றிப் பாதுகாவாமையினால் சூரிய வெப்பத்தால் பொரிந்துபோய் பழுதுற்றன.

இடைக்காலத்தில் இவைகளின் அருமை தெரியாமல் இருந்தது. ஆங்கில அரசாட்சி தோன்றிய பிறகு இங்குள்ள கோயில்களில் வெட்டப்பட்ட கல்வெட்டுக்களைக் கண்டு, அவைகளின் அருமை பெருமைகளை உணர்ந்து, அவைகளை ஆராய்ந்து வெளியிடுவதற்கு ஓர் இலாகாவை ஏற்படுத்தினர். ஜெர்மானியப் பேரறிஞர் டாக்டர் உல்ஷ்துரை அவர்களும் அவருக்கு உதவியாக நம்நாட்டு அறிஞர்களும் இத்துறையில் முயன்று கல்வெட்டுக்களுக்குப் படியெடுத்துப் புத்தக வடிவமாய் வெளியிட்டனர். ஆங்கில மொழி பெயர்ப்புடன் பெரும் பொருட் செலவில்

மூன்று தொகுதிகள் வெளிவந்தன. (South India Inscriptions) (Volume I, II and III)

## அருளாளப் பெருமாள் கோயில் சாசனம்

ஸ்வஸ்திஸ்ரீ
பூமாது புணரப் புவிமாது வளர
நாமாது விளங்க ஜயமாது விரும்பத்
தன்னிரு பதமலர் மன்னவர் சூட
மன்னிய உரிமையால் மணிமுடி சூடிச்
செங்கோல் சென்று திசைதொறும் வளர்ப்ப
வெங்கலி நீங்கி மெய்யறந் தழைப்பக்
கலிங்கம் இரியக் கடமலை நடாத்தி
வலங்கொள் ஆழி வரையாழி திரிய
இருசுடர் அளவும் ஒருகுடை நிழற்ற

விஜயாபிஷேகம் பண்ணி, வீரசிம்மாசனத்து முக்கோக் கிழான் அடிகளோடும் வீற்றிருந்தருளிய கோப்பரகேசரி பன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீ விக்கிரம சோழ தேவர்க்கு யாண்டு ஒன்பதாவது ஜயங்கொண்ட சோழ மண்டலத்து எயிற் கோட்டத்து எயில் நாட்டுத் திருஅத்தியூர். ஆழ்வாரைப் பாடியருளின ஸ்ரீ பூதத் தாழ்வாரும் பொய்கையாழ்வாரும பிறந்த திரு அவிட்ட நாள் அருளாளப் பெருமாள் புறப்பட்டருளி எண்பத் தொரு திருமஞ்சனமும் பெருந்திரு அமுதும் செய்தருள

ஆக இவையிற்றுக்கு நிவந்தமாகச் செல்வதாக இட்ட சம விலைப்படியால் இக்கோயில் சிலவு அளக்கும் அருமொழி நங்கை மரக்காலால் திரு அவிட்ட நாள் ஒன்றுக்கு நெல்லு முப்பது கலமாக ஓராட்டை நாளைக்கு வேண்டுவதாக நெல்லு முன்னூற்றுத் தொண்ணூறு கலத் துக்கும் சோழ மண்டலத்து விருதராஜபயங்கர வளநாட்டு

மண்ணி நாட்டு வங்கமுழையூர் முழையூருடையான் வெண் காடன் ஆதித்த தேவனான வங்கத்தரையன் இத்தேவர் பண்டாரத்துச் சிலவு அளக்கும் அருமொழி நங்கை மரக் காலால் அளந்த நெல் எழுநூற்று எண்பதின் கலம். இந்நெல் எழுநூற்று எண்பதின் கலத்துக்கு மாசந்தோறும் நெல் முப்பத்திரு கலனே தூணிப் பதக்காக யாண்டு வரை நெல் அரைப் பொலிசையால் பொலிசை பொலிவதாக நெல் முன்றூற்றுத் தொண்ணூற்றுக் கலம்.

இந்நெல்லுக்கு அருளாளப் பெருமாள் மாசந் தோறும் திரு அவிட்ட நாள் புறப்பட்டருளி திருமஞ்சனமும் பெருந் திருவமுதும் செய்தருள வேண்டுவனவற்றிற்கு இந்நிமந்த படியே பண்டாரத்திலே விட்டுச் சந்திராதித்தவத் நிமந்த மாகச் செய்யக் கடவதாகச் சிலாலேகை செய்வித்துக் கொடுத்தோம்

ராஜ ராஜ கிரமவித்தன், நாராயண கிரமவித்தன், பாண்டவ தூர கிரமவித்தன், இளைய கோக்கிரம வித்தனும் இளையருளாளக் கிரமவித்தனும், எட்டி திருக் காளத்தி உடையானும் இவ்வனைவோம். இப்படிக்கு இவை உத்திர மேலூருடையான் எட்டி திருக்காளத்தி யுடையான் எழுத்து.

## South India Inscriptions Vol. III Part II page 187

This inscription is found on the west wall of the stone platform called the mountain in the Arulala Perumal in Little Conjeevaram. It records the arrangement made for the celebration of the Janmanakshatra (Jyestha) of the Vaishnava Saints Putathalvar and Poygaiyalvar in the said temple. 780 Kalams of paddy were given to the temple and from the interest accrued there from the image of Arulala Perumal had to be bathed and carried out in procession on thirteen occations in a year(ie) on

the days of the Nakshatra Jyeshtha. The grant was made in the ninth year of the chola king of Vikrama Choladeva ie AD 1127.

**தானஞ்செய்தவன் :** வெண்காடன் ஆதித்த தேவனான வங்கத்தரையன்.

**தானப் பொருள் :** 780 கலம் நெல்.

இக்கல்வெட்டு சின்ன காஞ்சிபுரம் அருளாளப் பெருமாள் எழுந்தருளியிருக்கும் அத்திகிரி என்ற கல்மேடையின் மேற்புறச் சுவரில் உள்ளது. வைணவ அடியார்களாகிய பூதத்தாழ்வார், பொய்கையாழ்வார் இவர்கள் பிறந்த அவிட்ட நட்சத்திரத்தன்று இக்கோயிலில் நடைபெற வேண்டிய விழாவைப் பற்றி இது கூறுகிறது. 780 கலம் நெல் கோயிலுக்குக் கொடுத்து அதற்கு வட்டியாகக் கிடைக்கும் நெல்லிலிருந்து அருளாளப் பெருமாள் அவிட்ட நட்சத்திரத்தன்று திருமஞ்சனம் செய்வித்து, வீதி உலா வருவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. ஆண்டு ஒன்றுக்கு 13 தடவை அவிட்ட நட்சத்திரம் வருகிறது. அந்நாட்களில் இவ்விழா செய்யப்பட வேண்டும். இந்தத் தர்மம் சோழமன்னன் ஸ்ரீ விக்கிரம சோழ தேவனது 9-ஆம் ஆட்சியாண்டில் செய்யப்பட்டது. அதாவது கி. பி. 1127. இம்மன்னன் இராஜகேசரி என்ற குலோத்துங்க மன்னனின் மகன். இவ்வரசனைப் பற்றிய செய்திகள் மெய்க்கீர்த்தியில் கூறப்பட்டுள்ளன.

## கல்வெட்டுக்களால் அறியப்படும் பொதுச் செய்திகள்

1) பெரும்பாலும் இக்கல்வெட்டுக்கள் 'ஸ்வஸ்திஸ்ரீ' அல்லது சுபமஸ்து என்று ஆரம்பமாகின்றன. மங்களம் உண்டாகுக என்பது இதன் பொருள்.

2) அரசனே தானம் செய்வதாக இருந்தாலும் அல்லது குடிமக்களுள் வேறு யாராவது தருமம் செய்வதகா இருந்தாலும் அக்கால மன்னனின் ஆட்சியாண்டைக் குறிப்பது வழக்கமாயுள்ளது. உதாரணமாக இக் கல்வெட்டு சோழமன்னனின் 9-ஆம் ஆட்சியாண்டில் வெட்டப்பட்டது என்பது 1118+9=1127 என்று தெரிகிறது. அச்சமயத்தில் காஞ்சிபுரம் சோழர் ஆட்சியில் இருந்திருக்கிறது

3) மெய்க்கீர்த்தி என்பது அம்மன்னனின் வெற்றிச் சிறப்பு. போர் நிகழ்ச்சிகள், உடன் பிறந்தவர்களுக்கு நாட்டைப் பிரிந்துக் கொடுத்தல் போன்ற பிற சிறப்புக் களையும் குறிப்பதாகும். இவை எதுகை மோனையோடு சொற்செறிவு, பொருட் செறிவு நிறைந்தனவாய், வட மொழியும் தென் மொழியும் கலந்த மணிப் பிரவாள நடையில் செய்யுளைப் போல் அமைக்கப்பட்டுள்ளன. அடி வரையறை இல்லாமல் உரை நடை போலவும் உள்ளன. பாண்டியருள் சிலர் தங்கள் சிறப்புக்கள் மட்டுமேயன்றி முன்னோர் சிறப்புக்களையும் சேர்த்து எழுதிக் கொண்டனர்.

4) இராசகேசரி, பரகேசரி என்பன சோழ மன்னர்கள் தரித்து வந்த பட்டப் பெயர்களாகும். இராசகேசரி என்றால் இராசாக்களில் சிங்கம் போன்றவன் என்றும் பரகேசரி என்றால் அயலார்களுக்குச் சிங்கம் போன்றவன் என்றும் பொருள்படும். இப்பட்டப் பெயர்களால் இன்னார்க்குப் பிறகு இன்னார் பட்டம் எய்தினார் என்ற செய்தி புலனாகும். தந்தை இராசகேசரியாயின் மகன் பரகேசரியாவான். அவன் மகன் இராசகேசரி என

இவ்வாறு மாறி மாறி வரும். இவ்வாறே பாண்டிய மன்னர்களும் மாறவர்மன் கடையவர்மன் என்ற பட்டப் பெயர்களைப் புனைந்திருந்தனர்.

5) அருமொழி நங்கை என்பது அரசியின் பெயரில் உள்ள மரக்காலின் பெயர்.

6) இந்தத் தர்மம் இடைவிடாது கடைசி வரை நடைபெற வேண்டுமென்பதைச் 'சந்திராதித்தவ நிமந்தமாக, என்று குறிப்பிட்டுள்ளனர். அதாவது சந்திர சூரியர்கள் இருக்கும் வரை என்பது பொருள்.

7) கல்வெட்டை வெட்டியவன் பெயர் இறுதியில் உள்ளது. செதுக்கு வேலை செய்பவர்கள் இலக்கிய இலக்கணம் நன்கு கற்காத காரணத்தால் கல்வெட்டுக் களில் எழுத்துப் பிழைகள் இலக்கணப் பிழைகள் மலிந்து உள்ளன. (உதாரணம் : செலவு—சிலவு)

## இக்கல்வெட்டு பற்றிய சில குறிப்புகள்

1) ஒவ்வொரு நட்சத்திரமும் 27 நாட்களுக்கு ஒரு முறை வரும். ஆகையால் ஆண்டு ஒன்றுக்கு 13 திரு நட்சத்திரம் வரும் என்று குறிக்கப்பட்டுள்ளது. ஒரு விழாவுக்கு 30 கலம் நெல் வீதம் 13 விழாக்களுக்கும் 390 கலம் செலவாகும். அதை மாதந்தோறும் ($32\frac{1}{2} \times 12 = 390$) வீதம் பிரித்து வசூலிக்க வேண்டும்.

2) தர்மமாக 780 கலம் நெல் கொடுக்கப்பட்டது. அதற்கு வட்டியாக மாதந்தோறும் $32\frac{1}{2}$ கலம் நெல் கொடுக்க வேண்டுமென்று விதிக்கப்பட்டுள்ளது. இது 50% (ஐம்பது சதவீதம்) என்பது அதிகமாகத் தோன்று கிறது.

3) ஆழ்வாரின் திருநட்சத்திரம் அவிட்டம். ஆனால் கல்வெட்டில் கேட்டை என்று எழுதப்பட்டிருக்கிறது. காரணம் தெரியவில்லை.

4) திருமஞ்சனத்திற்குத் தேவையான பொருள்கள் எண்பத்தொன்று. ஒவ்வொன்றும் எவ்வளவு வாங்க வேண்டுமென்று கல்வெட்டில் விரிவாகக் குறிக்கப்பட்டு உள்ளது. இடம் அஞ்சி அவைகள் XXXX இக்குறியிட்டு நீக்கப்பட்டன.

5) அருமொழி நங்கை என்பது சோழ மன்னன் வீர ராஜேந்திர சோழனின் மனைவியின் பெயர்.

6) பொலிசை— வட்டி; பொலிவதாக— விருத்தி யடைவதாக. அருளாளப் பெருமாள் என்பது வரதராஜப் பெருமாள்.

# திருக்கோயில்கள்

காஞ்சி மாநகர் ஐந்து பெரும் பிரிவுகளையுடையது என்று சொல்லப்படுகிறது.

1. **சிவகாஞ்சி :** பெரிய காஞ்சிபுரம். இங்கு ஏகாம்பரநாதர் கோயில் சிறப்புடையது. பாடல் பெற்ற சிவஸ்தலங்கள் ஐந்து. அதன்றியும் கைலாசநாதர் கோயில், கச்சபேஸ்வரர் கோயில் முதலியன உள்ளன. காஞ்சியில் மொத்தம் 108 சிவன் கோயில்கள் உள்ளன.

2. **விஷ்ணு காஞ்சி :** சின்ன காஞ்சிபுரம். இங்கு வரதராஜ பெருமாள் கோவில் சிறப்புடையது. காஞ்சி புரத்தில் ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்யப்பட்ட வைணவ ஆலயங்கள் 14, புராண சிறப்புடையவை 4 ஆக 18 வைணவ ஆலயங்கள் உள்ளன.

3. **பிரம்ம காஞ்சி :** மத்திய காஞ்சி. சங்கராச் சாரியார் தோற்றுவித்த அத்வைத மதத்திற்கு அதிதேவதை பிரம்மம். ஆகவே சங்கரமடமும் அதன் ஆதீனத்தில் உள்ள காமாட்சியம்மன் கோயிலும் இங்கு உள்ளன.

4. **பௌத்த காஞ்சி :** கி. பி. இரண்டாம் நூற்று ஆண்டில் பௌத்த துறவியாகிய அறவண அடிகள், மணிமேகலை ஆகியோர் இப்போது ரயில்வே ஸ்டேஷ னுக்கு அருகில் உள்ள அறப்பணஞ்சேரி என்ற கிராமத்தில்

இருந்ததாகச் சொல்லப்படுகிறது. பௌத்தமத கோயில்கள் தற்போது இங்கில்லை.

5. **ஜின காஞ்சி :** வேகவதியாற்றின் தென் கரையில் உள்ள திருப்பருத்திக் குன்றத்தில் சமண சமய தீர்த்தங்கரர் கோயில்கள் இரண்டு உள்ளன.

ஆகவே இப்பகுதியில் கூடுமானவரை எல்லாக் கோயில் களைப் பற்றியும் சிறு குறிப்புக்கள் தர முயற்சிக்கப்பட்டு உள்ளது.

## 1. சிவ காஞ்சி

காஞ்சி மாநகரில் பாடல் பெற்ற சிவஸ்தலங்கள் ஐந்து. அவை யாவன :

1. **திருக்கச்சி ஏகம்பம் :-** ஏகாம்பரநாதர் கோயில்.

2. **திருமேற்றளி :-** இது பிள்ளையார் பாளயம் நடுத் தெருவில் உள்ளது.

3. **அநேகதங்காவதம் :-** கைலாசநாதர் கோயிலுக்குப் போகும் சாலைக்குத் தென்புறத்தில் உள்ளது.

4 **ஓணகாந்தன் தளி :-** ஏகாம்பரநாதர் கோயிலுக்கு மேற்குப் பக்கத்திலுள்ள பஞ்சுப்பேட்டை பெரிய தெருவில் உள்ளது.

5. **திருநெறிக் காரைக்காடு :-** இப்பகுதி இப்போது திருக்காலிமேடு என்று வழங்கப்படுகிறது.

# 1. ஏகாம்பரநாதர் கோயில்

(திருக்கச்சி ஏகம்பம்)

**சுவாமி :** *ஏகாம்பர நாதர், பெரிய கம்பர்.*

**தேவி :** *ஏலவார் குழலி, காமாட்சியம்மை.*

**தல விருட்சம் :** *மாமரம்.*

## திருஞான சம்பந்தர் தேவாரம்

**மறையானை மாசிலாப் புன்சடை மல்குவெண்**
**பிறையானைப் பெண்ணோ(டு) ஆணாகிய பெம்மானை**
**இறையானை ஏர்கொள் கச்சித்திரு ஏகம்பத்(து)**
**உறைவானை அல்ல(து)உள் காதென(து) உள்ளமே.**

*— இரண்டாம் திருமுறை. பாடல் எண் 1.*

*உண்மைத் தொண்டருக்குத் தன்னை மறையாதவனும், குற்றமற்ற தீப்போன்ற செந்நிறமுடைய சடையினிடத்தே விளங்கும் வெண்மையான பிறைச்சந்திரனை உடையவனும், ஒரு பாதி பெண்ணும், ஒரு பாதி ஆணுமாகிய பெருமானும், யாவர்க்கும் தலைமையானவனும் அழகைக் கொண்ட கச்சித் திருவேகம்பத் தலத்தில் எழுந்தருளியவனுமான எம்பிரானையன்றி வேறு எவரையும் எண்ணாது என் மனம். மறையானை— வேதத்தில் உள்ளவனை, வேதம் அருளியவனை என்றுமாம்.*

## திருநாவுக்கரசர் தேவாரம்

கருவுற்ற நாள்முத லாகஉன்
பாதமே காண்பதற்கு
உருகிற்றென் உள்ளமும் நானும்
கிடந்தழிந் 'தெய்த்தொழிந்தேன்
திருவொற்றி யூரா திருவால
வாயா திருவாரூரா
ஒருபற்றி லாமையுங் கண்டிரங்
காய்கச்சி ஏகம்பனே!

*— திருவிருத்தம், நான்காம் திருமுறை,*
*பாடல் எண் 6.*

*திருவெற்றியூரிலும், திருவாலவாய் எனப்படும் மதுரையிலும், திருவாரூரிலும், திருக்கச்சியேகம்பத்திலும் ஒருங்கே எழுந்தருளியுள்ள பெருமானே! கர்ப்பத்திலே பொருந்திய நாள் முதலாக உன்னுடைய திருவடிகளையே காண என் மனம் உருகுகின்றது. நானும் பலவாறு பிறவிக் கடலில் கிடந்து உழன்று சலித்துவிட்டேன். அவ்வாறு துன்புற்றதையும் எனக்கு உன்னையன்றி வேறு ஒரு பற்றும் இல்லாமையையும் அறிந்து எனக்கு இரங்கியருள் புரிவாயாக.*

## சுந்தரமூர்த்தி தேவாரம்

சிந்தித்து என்றும் நினைந்து எழுவார்கள்
சிந்தையில் திகழும் சிவன்தன்னைப்
பந்தித்த வினைப்பற்று அறுப்பானை
பாலோடு ஆனைஞ்சும் ஆட்டுகந்தானை
அந்தமில் புகழாள்உமை நங்கை
ஆதரித்து வழிபடப் பெற்ற
கந்தவார் சடைக்கம்பன் எம்மானைக்
காணக்கண் அடியேன் பெற்றவாறே!

*— ஏழாம் திருமுறை. பாட்டு எண் 8.*

நாள் தவறாது தியானித்தும் நினைத்துக் கொண்டும் காலையில் எழுபவர்களுடைய மனத்தில் விளங்கும் சிவபெருமானும், என்னைக் கட்டுப்படுத்திய பழவினைகளின் தொடர்பை வேரோடு ஒழிப்பவனும், பால் முதலிய பசுவின் பொருள்கள் ஐந்திலும் (பஞ்ச கவ்வியத்தில்) முழுகுவதில் மகிழ்பவனும்,முடிவில்லாத புகழ் உடையவள் ஆகிய உமாதேவியாரால் அன்போடு வணங்கப் பெற்ற, மணமுடைய நீண்ட திருச்சடையையுடைய திருவேகம்பனுமாகிய எம்பெருமானைக் காணும் பொருட்டு இடக்கண் பார்வையை அடியேன் பெற்ற விதத்தை என்னவென்று சொல்வது!

கண் இழந்த சுந்தரர் திருவேகம்பம் சென்று அடி பணிந்து தமக்குக் கண் அளிக்க வேண்ட, அதற்கு இரங்கிய பெருமான் இடக்கண்ணை அளித்த போது, உள்ளம் மகிழ்ந்து, அன்பு பொங்கிப் பாடியது இப்பதிகம்.

## மாணிக்கவாசகர்— திருவாசகம்— எட்டாம் திருமுறை

காசணி மின்கள் உலக்கையெல்லாம்
    காம்பணி மின்கள் கறையுரலை
நேச முடைய அடியவர்கள்
    நின்று உலாவுக என்றுவாழ்த்தித்
தேசமெல் லாம்புகழ்ந் தாடுங்கச்சித்
    திருவேகம் பன்செம்பொற் கோயில்பாடிப்
பாச வினையைப் பறித்துநின்று
    பாடிப் பொற்சுண்ணம் இடித்துநாமே.

— திருப்பொற்சுண்ணம், பாட்டு எண் 4.

உலக்கைகளுக்கு மணிவடம் கட்டுங்கள். உரலுக்குப் பட்டாடை சுற்றுங்கள். அன்புள்ள அடியார்கள் நிலைத்திருந்து வாழ்க என்று வாழ்த்துங்கள். உலகம் எல்லாம்

புகழ்கின்ற திருவேகம்பம் உடையானது திருக்கோயிலைப் புகழ்ந்து பாடுங்கள். நம் பாச வினைகளைக் களைந்து நின்று, பாடிக் கொண்டே பொற்சுண்ணம் இடிப்போம். (காசு- மணிவடம்; காம்பு- பட்டாடை) கறை- நிறம்.

காஞ்சியில் 'பெரிய கோயில்' என்றாலே இத் திருக் கோயிலையே குறிக்கும். தென்னிந்தியாவிலுள்ள பழமை யான கோயில்களுள் இதுவும் ஒன்று. நாடோறும் எண்ணற்ற யாத்திரிகர்கள் வந்து தரிசித்து செல்கின்றனர். இந்நகர அமைப்பில் இக் கோயில் உயிர்நாடியாக விளங்கு கின்றது.

இது பஞ்சபூதத் தலங்களுள் பிருதிவித் தலமாகும் இங்குள்ள ஏகம்பர் மூல லிங்கம் மணல் இலிங்கமாகும். திருவாரூரும் பிருதுவி தலமென்று புராணங்களில் குறிப் பிடப்பட்டுள்ளது. எட்டு திருமுறைகளிலும் பதிகங்களைப் பெற்று விளங்குகின்ற இத்தலத்தில் மூர்த்தி, தலம், தீர்த்தம் ஆகிய முச்சிறப்புக்களும் பொருந்தியுள்ளன.

## தல விருட்சம்

தல விருட்சம் மாமரம். வேதமே இம்மாமரம். இதன் வேர் மகாமாயை வடிவாயிருப்பது. நான்கு வேதங்களும் நான்கு கிளைகளாகத் தழைத்து விளங்குகின்றன. பெரிதாகத் தோற்றமளிப்பினும் இது ஒரே மரமாகும்.

## பஞ்ச பூதத் தலங்களாவன

1. பிருதிவி — காஞ்சிபுரம் (மண்)
2. அப்பு — திருவானைக்காவல் (நீர்)
3. தேயு — திருவண்ணாமலை (நெருப்பு)
4. வாயு — திருக்காளத்தி (காற்று)
5. ஆகாயம் — சிதம்பரம் (ஆகாயம்)

பண்டைக் கல்வெட்டுக்களிலிருந்து இக்கோயில் 'திருவேகம்பம்' என்றும் 'திருவேகம்ப முடையார் கோயில்' என்றும் வழங்கப்பட்டு வந்ததென்பதை அறிகிறோம். 1069-ஆம் ஆண்டைச் சேர்ந்த ஒரு கல்வெட்டில் வீர ராஜேந்திர தேவன் என்னும் அரசன் திருவேகம்ப முடையார் கோயிலில் அமர்ந்து விரும்பியோர்க்குப் பரிசுகளைத் தந்ததாகக் குறிப்பு காணப்படுகிறது.

இக்கோயில் கம்பை நதிக் கரையில் இருந்ததென்றும் தற்போது அந்நதி பூமியின் கீழ் உள் ஓட்டமாக ஓடுவதாகக் கூறப்படுகிறது. தற்போது கோயிலின் உள்ளே கம்பைத் தீர்த்தம் என்று ஒரு குளம் உள்ளது.

கோயிலின் மொத்தத் தரைப்பரப்பு சுமார் 23 ஏக்கர். இக்கோயிலில் 5 பிராகாரங்கள் உள்ளன. கோயிலின் உட்பகுதி மிகவும் விசாலமானது. தொலைவில் நின்று பார்ப்போர்க்கும் மூலவர் நன்கு காட்சி தரும் நிலையில் கோயில் அமைந்துள்ளது. இக்கோயில் ஏழாம் நூற்றாண்டிற்கு முற்பட்டது.

இறைவன் திருப்பெயர் ஏகாம்பர நாதர். ஏகாமரம்-ஒற்றை மரம். மாவடியின் கீழ் இறைவன் இலிங்க வடிவில் வந்து தோன்றினார். தேவியின் பெயர் ஏலவார் குழலி. காஞ்சி மண்டலம் முழுமைக்கும் தேவி, காமாட்சியே ஆவாள். இத்தலம் சத்தி பீடமாதலின் எந்தச் சிவாலயத்திலும் தனியாகத் தேவி சந்நிதி கிடையாது. எனினும் அந்தந்தக் கோயில்களில் வழிபடும் வடிவமாகக் காமாட்சியின் திருவடிவத்தையே பல பெயர்களில் போக சக்தியாக எழுந்தருளச் செய்து வழிபடுவது மரபு. அம்மரபிற்கு ஏற்ப இக்கோயிலில் உள்ள வழிபடு தேவி வடிவம் ஏலவார் குழலி அம்மையாகும். எனினும் எக்காலத்தும் எவ்விழாக்களிலும் வழங்கப்படும் மரபு "திருக் காமாட்சியம்மை இடங் கொண்ட திருவேகம்ப நாதர்" என்பதேயாம்.

உமா தேவியார் இறைவனிடம் இருநாழி நெல் பெற்று எண்ணான்கு (32) அறங்களையும் புரிந்து அறப் பெருஞ் செல்வியாகத் திகழும் அற்புதச் செயல் நிகழ்ந்த பெருமையுடையது இக்கோயில். இக்கோயிலின் பிராகாரத்தில், ஆயிரத்தெட்டு இலிங்கங்கள் கொண்ட ஒரு பெரிய லிங்கமும், நூற்றெட்டு தனித்தனி இலிங்கங் களும் மற்றும் பல திருமேனிகளும், நாயன்மார்கள் அறுபத்து மூவருடைய திருமேனிகளும், உற்சவ மூர்த்தங் களும் உள்ளன.

## திருக்கோயில் அமைப்பு

### 1. இராஜ கோபுரம்

'கோபுர தரிசனம் கோடி புண்ணியம்' என்பது முது மொழி. கோபுரத்தைக் கண்டபோதே வணங்க வேண்டும். இக்கோபுரம் 192 அடி உயரமுடையது. 9 நிலைகளைக் கொண்டது. இது 1509-ஆம் ஆண்டில் கிருஷ்ண தேவ ராயரால் கட்டப்பட்டதாகும். இக் கோபுரத்தின் இரு புறங்களிலும் விநாயகர், சுப்பிரமணியர் சந்நிதிகள் உள்ளன.

### 2. வாகன மண்டபம்

இக்கோபுரத்தைக் கடந்து சென்றால் உள்ளே வாகன மண்டபம் உள்ளது. இதற்குச் சரபேச மண்டபம் என்ற பெயரும் உண்டு. நவராத்திரி உற்சவத்தின் போது தேவி அலங்காரத்தோடு இம்மண்டபத்திற்கு எழுந்தருளி, அடியவர்க்குக் காட்சி தருகிறாள். பெருவிழாக் காலங் களில் சுவாமி இம்மண்டபத்திற்கு வந்து, வாகனம் ஏறி அலங்காரமாகத் திருவீதியுலா புறப்படுவது வழக்கம்.

### 3. ஆயிரக்கால் மண்டபம்

இராஜ கோபுரத்தையடுத்த உட்பிரகாரத்தில் இடப் பக்கம் ஆயிரக்கால் மண்டபம் உள்ளது. தற்போது இது

சற்றுப் பழுதடைந்த நிலையில் உள்ளது. இதைச் செப்பம் செய்வது நல்லது. இதன் முகப்பில் விகட சக்கர விநாயகர் இருக்கிறார். இவரே இவ்வாலயத்தின் தல விநாயகர். இரட்டைப் புலவர்கள் இவரைப் பாடியுள்ளனர். அவர்கள் பாடியுள்ள ''திருவேகம்ப நாதர் உலா'' மிகச் சிறந்த உலா நூலாகும்.

### 4. கம்பைத் தீர்த்தம்

இது ஆயிரக்கால் மண்டபத்திற்கு அருகில் இருக்கிறது. இது குளமாக உள்ளது. கம்பாநதி அந்தர்வாகினியாக ஓடுவதாக சமய நூல்கள் கூறுகின்றன. இது சிறந்த தீர்த்தமென்று காஞ்சிப் புராணம் கூறுகிறது.

### 5. திருக்கச்சி மயானம்

இது கோயில் கொடிக் கம்பத்தின் பக்கத்தில் மேற்கு நோக்கிய சந்நிதியாக விளங்குகிறது. இவரைத் திருநாவுக்கரசர் பாடியுள்ளார். இக்கோயிலின் முன்னுள்ள 16 கால் மண்டபத்தைக் கட்டியவர் வள்ளல் பச்சையப்ப முதலியார். அங்குள்ள ஒரு தூணில் பச்சையப்பருடைய உருவம் உள்ளது.

### 6. சிவகங்கைத் தீர்த்தம்

இது இக்கோயிலிலுள்ள பெரிய தீர்த்தம். நல்ல படிக்கட்டுகள் உள்ளன. நீர் பரிசுத்தமாக உள்ளது. 1971-இல் இத்தீர்த்தம் செப்பம் செய்யப்பட்டது.

### 7. மாவடி

இங்குள்ள மாமரம்தான் தலவிருட்சம். வேதமே மாமரம். இதன் வேர் மகாமாயை வடிவாயிருப்பது. 4 வேதங்களும் 4 கிளைகளாகத் தழைத்து விளங்குகின்றன. இம்மாமரம் அளவில் மிகப் பெரியது. எனினும் இது

ஒற்றை மாமரமே என்பது குறிப்பிடத்தக்கது. இம் மாமரம் வேத சொரூபமாதலின் இதன் மேல் ஏறுவதற்கு எவரையும் அனுமதிப்பதில்லை. வலம் வந்து வழிபடுவதற் குரிய சுற்று வழியும் அமைக்கப்பட்டுள்ளது. இம்மாவடி சிறந்த பிரார்த்தனை இடமாகவும். திருமணங்கள் செய் வதற்குரிய சிறப்பிடமாகவும் விளங்குகிறது.

### 8. மூல இலிங்கம்

காஞ்சிபுரம் பிருதிவித்தலம். இம் மூல இலிங்கம் மணல் இலிங்கமாகும். வேதமாகிய மாவடியின் கீழ் வேதத்திற்குத் தலைவராகிய இறைவரே சிவலிங்க வடிவமாக எழுந்தருளி யுள்ளார். இம்மணல் இலிங்கத்தின் மீது வெள்ளிக் கவசம் போடப்பட்டுள்ளது. அபிஷேக அலங்காரங்கள் அனைத்தும் ஆவுடையார்க்கே உரியன. இலிங்கத்திற்குப் புனுகு சட்டம் மட்டுமே குறித்த காலங்களிற் சார்த்தப் படுகிறது. இலிங்கத்தின் மேல் பன்னிரண்டு கால்கள் கொண்ட விமானம் இருக்கிறது. கருப்பக் கிரகத்தின் உட்புறச் சுற்றில் சைவ சம்பந்தமான எல்லாத் திருவுருவங் களும் உள்ளன.

### 9. சிற்பக் கலையழகு

இவ்வாலயம் சிற்பக் கலையழகு மிளிரும் ஒரு சிறந்த கருவூலமாகும். இராஜகோபுரம் முதல் எல்லா இடங் களிலும் சிற்பங்கள் அழகு செய்கின்றன. உட்பிராகாரம் மிகவும் சிறந்து விளங்குகிறது. உயர்ந்த மேற்கூரை; நெடிய தூண்கள்; அவற்றின் மேலும் கீழும் செதுக்கப் பட்டுள்ள சிற்பங்கள்; அதன் ஒழுங்கு வரிசை ஆகியவை கண் கொள்ளாக் காட்சிகள். கண்டு ஆனந்திக்க வேண்டியவை.

### 10. கல்வெட்டுக் குறிப்புகள்

இக் கோயிலில் உள்ள கல்வெட்டுக்கள் அரசாங்கத் தாரால் 1893-இல் நகல் எடுக்கப்பட்டு தென்னிந்திய

கல்வெட்டுக்கள் என்ற நூலில் சேர்க்கப்பட்டுள்ளன. அவை கோயிலுக்குச் செய்யப்பட்ட தான தருமங்கள் முதலியவற்றைக் குறிப்பனவாகும். (எண் 3 தெலுங்கு, எண் 11 வடமொழி) மற்றவை தமிழ் மொழியில் உள்ளன.

1. முதற் குலோத்துங்க சோழ தேவனது 6-வது ஆட்சி ஆண்டைச் சேர்ந்தது.

2. இரண்டாம் பிராகாரத்தின் வடக்குச் சுவரில் காகதீய மன்னன் கணபதி என்பவனின் மறைவைக் குறித்தது.

3. (தெலுங்கு) மேற்கண்ட இடத்தில் __ நகர அரசன் சதாசிவ தேவர் காலத்தைச் சேர்ந்தது.

4. இரண்டாம் பிராகார மேற்குச் சுவரில் திரிபுவன சக்கரவர்த்தி ராஜ ராஜ தேவனின் 15-ஆவது ஆட்சி ஆண்டைச் சேர்ந்தது.

5. மேற்படி இடத்தில் மேற்படியாரின் 19-வது ஆட்சி ஆண்டைச் சேர்ந்தது.

6. இரண்டாம் பிராகார மேற்குச் சுவரில் கோ ராஜ கேசரி வர்மன் எனப்பட்ட குலோத்துங்க சோழ தேவனின் இரண்டாவது ஆட்சியாண்டைச் சேர்ந்தது.

7. இரண்டாம் பிராகார மேற்குச் சுவரில் திருபுவன சக்கரவர்த்தி மூன்றாம் ராஜ ராஜ தேவ சோழ மன்னனின் 17-ஆவது ஆட்சியாண்டைச் சேர்ந்தது.

8. மேற்படி இடத்தில் மேற்படியாரின் 19-வது ஆட்சி ஆண்டைப் பற்றியது.

9. இரண்டாம் பிராகாரத் தெற்குச் சுவரில் கோபர கேசரிவர்மன் என்ற இரண்டாம் ராஜ ராஜ தேவனின் 15-ஆவது ஆட்சியாண்டைச் சேர்ந்தது.

10. இரண்டாம் பிராகார வடக்குச் சுவரில் மூன்றாம் குலோத்துங்க சோழ தேவனின் 27-ஆவது ஆட்சி ஆண்டைச் சேர்ந்தது.

11. (வடமொழி) ஆயிரக்கால் மண்டபத்தின் கோபுரத்தில் உள்ளது.

### 11. விழாக்கள்

காஞ்சியில் எப்போதும் விழாக்கள் நடந்து கொண்டே இருக்கும். இக்கோயிலில் நடைபெறும் விழாக்கள் பல. மாதந்தோறும் ஏதாவது ஒரு விழா இருந்துகொண்டே இருக்கும். பங்குனி மாத பிரம்மோத்சவம் சிறப்பானது. பகல் இரவு இரண்டு வேளைகளிலும் சுவாமி திருவீதி உலாவரும். லட்சக்கணக்கான மக்கள் வந்து விழாவினைக் கண்டு களிப்பர். திருவிழா நாட்களில் நாடோறும் மாலையில் கோயிலில் அமைக்கப்படும் சிறப்புப்பந்தலில் சமயச் சொற்பொழிவுகளும், நாதஸ்வரக் கச்சேரிகளும், தேவார பாராயணமும் நடைபெறும். நாடோறும் காலை இரவு வேளைகளில் சுவாமி திருவீதி உலா வருங் காலத்து வேத பாராயணமும் நடைபெறும்.

### 12. திருப்பணிகள்

இத்திருக்கோயிலை அவ்வப்போது செப்பஞ் செய்து சீர்படுத்தும் திருப்பணியில் பல்லவ, சோழ, விஜய நகர மன்னர்கள் பேராவல் காட்டிப் பணி செய்துள்ளனர். கி. பி. 1799-இல் செங்கற்பட்டு ஆட்சித் தலைவராயிருந்த Mr. Hodgson என்னும் ஆங்கிலேயர் மதிற்சுவரைச் செப்பஞ் செய்து உதவினார். 1900-இல் நாட்டுக் கோட்டை திரு இலட்சுமணன் செட்டியார் ஐந்து லட்ச ரூபாய் செலவில் கோயில் திருப்பணியும் கும்பாபிஷேகமும் செய்து வைத்தார். அதன் பின்னர் கண்டனூர் V. S. இராமநாதன் செட்டியார் திருப்பணி செய்தார். வள்ளல்

பச்சையப்ப முதலியார் 16 கால் மண்டபத்தைக் கட்டி யுதவினார். அவ்வப்போது இத்திருக்கோயில் செப்பனிடப் பட்டு வருகிறது.

## 13. நிர்வாகம்

இக்கோயில் நிர்வாகம் தமிழ்நாடு இந்து அறநிலையப் பாதுகாப்புத் துறைக்குக் கட்டுப்பட்டு, அதன் கீழ் ஐவரைக் கொண்ட அறங்காவலர் குழுவால் நிர்வகிக்கப் பட்டு வருகின்றது. ஐவருள் ஒருவர் நிர்வாக அறங்காவல ராக பொறுப்பேற்கிறார். அறநிலையத் துறையின் அதிகாரியாக நிர்வாக அலுவலர் ஒருவர் கோயிலின் நிர்வாகப் பொறுப்பை ஏற்றுப் பணி புரிகின்றார். நிர்வாகம் செவ்வனே நடைபெற்று வருகிறது.

## 14. கும்பாபிஷேகம்

ஒவ்வோர் ஆண்டும் வசந்த பஞ்சமி ஒரு புனிதமான நாள் 1-2-1979 அன்று வசந்த பஞ்சமி. அந்த நாளில்தான் ஸ்ரீகாஞ்சியில் இரண்டு கும்பாபிஷேகங்கள் நடை பெற்றன. காலை 7 மணிக்கு ஏகாம்பரநாதர் கோயிலிலும், காலை 10 மணிக்கு காமாட்சியம்மன் கோயிலிலும் நடைபெற்றன. நாட்டின் பல பாகங்களிலி ருந்தும் பக்தர்கள் பெருந்திரளாக வந்து கூடினர். இறைவனையும் இறைவியையும் தரிசித்து மகிழ்ந்தனர். 31-1-79, 1-2-79 ஆகிய இரண்டு நாட்களிலும் ஓர் அதிசயம் நடைபெற்றது. பெங்களூர் தொழிலதிபர் உயர்திரு இராமச்சந்திர சா என்னும் கொடைவள்ளல் கும்பாபிஷேகத்திற்கு வந்திருந்த சுமார் ஒரு லட்சம் பேருக்கும் கச்சீஸ்வரர் கோயிலில் இலை போட்டு அறுசுவையோடு அன்னமிட்டார். அக்கொடைவள்ளலை அனைவரும் வாழ்த்தினர்.

## 15. திருமணங்கள்

ஆண்டு தோறும் ஏகாம்பர நாதரின் பங்குனி உத்திர திருவிழாவின் போது, பத்தாம் நாள் உத்சவமாக ஏகாம்பரநாதருக்கும் ஏலவார் குழலிக்கும் வெகு விமரிசையாய் திருமணம் நடைபெறும்., அதே நேரத்தில் ஏழை எளிய மக்களின் திருமணங்கள் கோயிலில் நடை பெறுவதுண்டு.

ஆனால் 6-9-84-இல் இக்கோயிலில் 101 திருமணங்கள் ஒரே சமயத்தில் நடைபெற்றது. அதன் விவரம் வருமாறு :-

திருச்சி செல்வந்தரும் பெரு வணிகருமான ஒரு கொடைவள்ளல் 6-9-84 தேதியில் காஞ்சிபுரம் ஏகாம்பர நாதர் கோயிலில் 101 திருமணங்களை இலவசமாக நடத்தி வைத்தார். துணிமணிகள், மாங்கல்யம், கலியாணப் பந்தல் செலவுகள்,மணவிருந்து இவைகளைச் செய்ததோடு அன்றி மேற்கொண்டு அவர் செய்தவையாதெனில் :-

திருமணத்தின் முன்னாள் இரவு 5-9-84 பஞ்ச மூர்த்திகள் தங்க வாகனங்களில் நான்கு மாட வீதிகளில் உலா வரச் செய்தார். 101 ஓதுவா மூர்த்திகள் தேவார பஜனைகளோடு, 101 திருமணத் தம்பதிகளும் ஊர்வலத்தில் கலந்து கொண்டனர். கோவிலில் இரவு 7 மணிக்கு உயர்திரு கிருபானந்தவாரியார் அவர்களின் உபன்யாசமும் இரவு 10 மணிக்கு கலை நிகழ்ச்சியும் (சுப்பு அவர்களின் வில்லுப் பாட்டு) நடைபெற்றன. 6-9-84 காலையில் திருமணங்கள் முடிந்ததும் மணவிருந்தும் நடைபெற்றது. இத்திருமணங்கள் சங்கராச்சாரியார் அவர்களின் திரு முன்பு நடைபெற்றன.

இதுபற்றி 'தினமணி'யில் வந்துள்ள செய்தியைப் பாருங்கள்.

## காஞ்சி சுவாமிகள் முன்னிலையில் 101 தம்பதிகளுக்குத் திருமணம்

காஞ்சிபுரம் ஸ்ரீ ஏகாம்பரர் கோவிலில் வியாழக் கிழமையன்று பிரமாண்டமாக அமைக்கப்பட்ட அலங் காரப் பந்தலில் பஞ்ச மூர்த்திகள் முன்னிலையில் 101 ஜோடிகளுக்கு இலவச திருமணம் நடைபெற்றது. காஞ்சி ஜெகத்குரு ஸ்ரீஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகள் முன்னிலை யில் :இத்திருமணங்கள் நடைபெற்றன. ஸ்ரீ கிருபானந்த வாரியார், ஸ்ரீ மயிலை குருஜி சுந்தரராம சுவாமிகள், பெங்களூர் ஸ்ரீ சைல மட சுவாமிகள் ஆகியோரும் கலந்து கொண்டு மணமக்களை ஆசிர்வதித்தனர். அறநிலையத் துறை கமிஷனர் ஆளுடை பிள்ளையும் இந்த வைபவத்தில் கலந்து கொண்டார். ஸ்ரீ காஞ்சி பரமாச்சாரியார் ஸ்வாமிகள் பந்தலருகே வந்து 101 தம்பதிகளையும் ஆசீர் வதித்தார்.

இந்த 101 ஜோடி திருமணத்தை, திருச்சி தேங்காய் வியாபாரி ஆர். எஸ். எஸ். சதாசிவ வஸ்தராத் என்பவர் நடத்தி வைத்தார்.

ஒவ்வொரு ஜோடிக்கும் 2 புடவைகள், 1 ரவிக்கை, மெட்டி, 4 கிராம் தங்கத்தாலி, பட்டு வேஷ்டி, அங்க வஸ்திரம் ஆகியவற்றை அளித்தார். தவிர தானே நேராகச் சென்று தம்பதிகளைப் பார்த்து, சதாசிவ வஸ்திராத்தின் சேவைகளைப் பாராட்டி, ஸ்ரீ ஜெகத்குரு

அவருக்கு 'சத்சேவா ரத்னா' என்ற விருதை அளித்தார். திருமணத்துக்குப் பேருதவி புரிந்த பன்மொழிச் செல்வர் டி. வி. ஆர். சாரி, ஜி. சீனிவாசன், மருதநாயகம் பிள்ளை, ஆர். எஸ். எஸ். அமைப்பாளர் சூர்ய நாராயணராவ் மற்றும் கோவில் நிர்வாக அதிகாரி ஆகியோருக்கு ஸ்ரீ ஆச்சார்ய ஸ்வாமிகள் சார்பில் பொன்னாடைகள் போர்த்தப்பட்டன.

திருமணத்தை யொட்டி நேற்றிரவு பஞ்சமூர்த்தி ஊர்வலம். பின்னே 101 ஓதுவார், அதன் பின்னே மணமக்கள் ஜானவாச ஊர்வலம், இருபுறம் ஆர். எஸ். எஸ். சேவாதள தொண்டர்கள் அணிவகுப்பு, சிறப்பான நாதஸ்வரக் கச்சேரி ஆகியவை கண் கொள் ளாக் காட்சியாக இருந்தன.

— செய்தி தினமணி 7-9-84 தேதியது.

# 2. காமாட்சியம்மன்

பாரத நாட்டின் பழம்பெரும் நகரங்களுள் தலை சிறந்து விளங்குவது ஸ்ரீகாஞ்சி. ஸ்ரீபராசக்தியின் ஸ்ரீ சக்கரபீடத்தின் உருவாகவே அது அமைந்திருக்கிறது. காமராஜபீடம் என்று போற்றப்படுகிறது. அது ஸ்ரீகாமகோடி பீடத்தை ஸ்ரீசக்கரத்தின் நடுவில் உள்ள பிந்துஸ்தானமாக உடையது.

மகாதிரிபுர சுந்தரியும் ஸ்ரீ வித்தியா சொரூபிணியு மான ஸ்ரீ காமாட்சி, காமகோடி நற்பீடத்தின் அதிதேவதையாகக் கொலுவீற்றிருப்பதால் இத்தலம் ஸ்ரீ வித்யையின் இருப்பிடமாக விளங்குகிறது. அத்வைத ஞானத்திற்கு ஸ்ரீவித்யா உபாசனை அடிப்படை சாதன மாதலால், இத்தலம் அத்வைத தத்துவத்திலும், பிரம்ம ஞானத்திலும் உயர்ந்தோங்கி வந்திருக்கிறது. இங்கு தர்மதேவதை ஆனந்த நடனம் புரிகிறாள்.

எனவேதான் யோகீஸ்வரர்களும் ஞானவள்ளல்களும் சித்த புருஷர்களும், மாமுனிவர்களும் ஸ்ரீ காஞ்சியை நாடி வருகிறார்கள். அம்பிகையின் கடாட்சத்தை நாடி, அடியார் திருக்கூட்டம் ஸ்ரீ காஞ்சிக்கு வருகிறது. இங்கே பார்வதி தேவி கம்பா நதி தீரத்தில் மணலில் இலிங்கம் செய்து ஏகாம்பர நாதரை வழிபட்டு, மெய்த்தவம் இயற்றி சாபம் நீங்கப் பெற்றாள்.

நம் வேத தர்மத்தின் கலங்கரை விளக்கமாய் பட்டொளி வீசி, பாரதத்தின் ஆன்மீக ஒளி பாரெங்கும் பரவக் காரணமாய் இருந்த ஸ்ரீ ஆதிசங்கர பகவான், காஞ்சிக்கு எழுந்தருளினார்கள். வேதத்தைக் காக்கவும் பிரம்ம ஞானத்தைப் பரப்பவும் குருபீடம் ஒன்றை அமைத்தார்கள். ஸ்ரீ வித்யையின் ரகசியங்களையும், மந்திரங்களையும், யந்திரங்களையும் பல சீடர்களுக்கு உபதேசம் செய்து அருளினார்கள். தேவி உபாசனையின் பல அம்சங்களை உலகம் அறியும் பொருட்டு இயற்றினார்கள்.

ஸ்ரீ காமாட்சியை ஆராதிப்பதற்காகச் சில உபாசனா முறைகளைத் தோற்றுவித்த ஸ்ரீ ஆதிசங்கரர் அவற்றைச் சரிவர நடத்தி வருவதற்காக நர்மதா நதிக்கரையிலிருந்து முப்பது தேவி பக்தர்களை, அவர்களுடைய குடும்பங்களுடன் காஞ்சிக்கு அழைத்து வந்தார்கள். அவர்கள் ஸ்ரீ காமாட்சி தேவியைக் குலதெய்வமாகக் கொண்டு ஸ்ரீ வித்யையைப் பரப்பினார்கள். அவர்கள் காலத்திலிருந்து தேவி பக்தி செழித்தோங்கத் தொடங்கியது. அவர்களுக்குக் ''காமகோட்டியார்'' என்ற பெயரும் வழங்கப் பட்டது. இவர்கள் காமாட்சி தாசர்கள்; வேதத்தை முறைப்படி அத்யயனம் செய்தவர்கள். சகல சாஸ்திரங்களையும் கற்றவர்கள்; இதிகாச புராணங்களை அறிந்தவர்கள். ஸ்ரீ சங்கர பகவத் பாதாளுடைய சமாதி ஸ்தானமும் இதுவே.

இத்தகைய மகிமை பொருந்திய காமராஜ பீடத்தில் ஓங்கார கோணத்தில் பராசக்தி ஸ்ரீ காமாட்சி பத்மாசனமிட்டு மோகன வடிவழகுடன் காட்சி அளிக்கிறாள் மூலசக்தி, ஆதிசக்தி, ஆத்ம சக்தியாகி விளங்குகிறாள் அம்பிகை. சந்திர சூடாமணியாகிய அவள் கிரீடம் ஜொலிக்கிறது. பாசம், அங்குசம், கோதண்டம், பஞ்ச பாணம் முதலியவைகளைத் தம் திருக்கரங்களில் தாங்கி நிற்கிறாள். இரு செவிகளிலும் சூரியர் சந்திரர் ஒளி வீசவும் சகல சௌபாக்கியங்களையும் தரவல்ல

திருமாங்கல்யம் கண்டத்தில் திகழ்ந்து ஒளிரவும், மணம் பரப்பும் மலர் மாலைகள் அசையவும் காட்சி தருகிறாள். கருணைக் கடலென அருள் பாலிக்கும் அம்பிகையை நினைந்து, கிளி உருவில் தேவர்கள் தவம் செய்கின்றனர்.

அம்பிகை ஒரு சமயம் ஏகாம்பர நாதரிடமிருந்து இருநாழி நெல் பெற்று, முப்பத்திரண்டு அறங்களை வளர்த்ததாக வரலாறு கூறுகிறது. ஆதியில் இக்கோயிலில் தாந்திரிகர்கள் இருந்ததாகத் தெரிகிறது. அத்வைத மதத்தை இந்தியாவின் பல இடங்களிலும் பரப்பிய ஸ்ரீ சங்கரர் பிற மதத்தவர்களை வாதில் வென்று காஞ்சியை அடைந்து சர்வக்ஞ பீடமேறி காமகோடி பீடத்தை ஸ்தாபித்தார்கள். இங்கு அஷ்ட லட்சுமிகள் கொண்ட யந்திரத்தைப் பிரதிஷ்டை செய்தார்கள். இப்போது நிகழும் பூஜைகள் அதற்குத்தான். அம்மனுக்கு அல்ல.

காஞ்சிக் கோயில்கள் அனைத்திலும் அம்மனுக்குத் தனி சந்நிதியில்லை. காரணம் ஸ்ரீ காமாட்சியே எல்லாக் கோயில்களிலும் உள்ள சக்திகளை யெல்லாம் தன்னுள் அடக்கிக் கொண்டு இலங்குகின்றாள் என்பர். பிறகோயில் உற்சவ மூர்த்திகள் ஸ்ரீ காமாட்சி கோயிலை வலம் வருதல் அதன் சிறப்பை மேலும் புலப்படுத்துவதாக அமையும்.

## கும்பாபிஷேகம்

ஒவ்வோராண்டும் வசந்த பஞ்சமி ஒரு புனிதமான நாள். 1-2-1979 தேதியில் வந்த வசந்த பஞ்சமி நாளில் ஸ்ரீ காஞ்சியில் இரண்டு கும்பாபிஷேகங்கள் நடைபெற்றன. காலை 7 மணிக்கு ஏகாம்பர நாதர் கோயிலிலும், காலை 10 மணிக்கு காமாட்சியம்மன் கோயிலிலும் நடைபெற்றன. காஞ்சி சக்தி க்ஷேத்திரமாகவும், சிவ ஸ்தலமாகவும் விளங்குகிறது.

ஸ்ரீ காமாட்சி ஆலயத்திலிருந்த பங்காரு காமாட்சி என்னும் உத்சவ விக்கிரகத்தை நவாபின் படையெடுப்புக்குப் பயந்து தஞ்சைக்கு எடுத்துச் சென்று அங்கே பிரதிஷ்டை செய்துள்ளனர். ஸ்ரீ காஞ்சி காமாட்சி அம்பிகையின் கர்ப்பக் கிரகத்தின் மீதுள்ள விமானமும் தங்கக் கூரையுடன் விளங்கியதாக வரலாறு பகர்கிறது.

ஆதிசங்கரர் முதல் அவர்களின் சிஷ்ய பரம்பரையைச் சேர்ந்த ஸ்ரீ காமகோட்டி பீடாதிபர்களே ஸ்ரீ காமாட்சி ஆலயத்தின் நிர்வாக தர்ம கர்த்தர்களாக இருந்து வருகிறார்கள். இப்போது இந்தப் பீடத்தின் அதிபர்களாக விளங்கி வரும் ஜகத்குரு ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி சுவாமிகள், ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள் ஆகியோரின் பெரு முயற்சியினால் ஸ்ரீ காமாட்சி அம்பிகையின் விமானத்துக்குத் தங்கக்கூரை வேயும் திருப்பணியில் ஒரு பாகம் (மேல் அடுக்கு) பூர்த்தியாகி சென்ற காளயுக்தி வருஷம் தை மாதம் 19-ஆம் தேதி (1-2-1979) வியாழக்கிழமை ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகளின் திருக்கரங்களால் கும்பாபிஷேகமும் சிறப்பாக நடைபெற்றது. இதுவரை திருப்பணிக்காகப் பதினைந்து லட்ச ரூபாய் செலவாகியிருக்கிறது. 20 கிலோ தங்கம் பயன்படுத்தியிருக்கிறார்கள். மீதமுள்ள திருப்பணியும் பக்த மகா ஜனங்களின் ஆதரவினால்தான் நடைபெற வேண்டும்.

## வரலாற்றுச் செய்திகள்

கரிகால் பெருவளத்தான் இமயத்தை நோக்கிப் படையெடுத்துச் சென்ற போது காஞ்சிபுரத்தின் மாட்சியைக் கேட்டறிந்து, இங்குச் சில காலம் தங்கியிருந்ததாகவும், கோயில் திருப்பணிகளைச் செய்ததாகவும் சொல்லப்படுகிறது. சாத்தன் அருளால் காஞ்சியில் பெற்ற செண்டின் உதவி கொண்டு அவன் இமயத்தை வென்று

அங்குப் புலிக் கொடியைப் பொறித்ததாகவும் கூறப் படுகிறது.

இங்குள்ள சில கல்வெட்டுக்களிலிருந்து அறியப்படும் செய்திகளாவன : 1) ஹரிஹரன் என்ற விஜய நகர மன்னன் கி. பி. 1392-இல் இக் கோயிலின் கருப்பக் கிருக விமானத்திற்குத் தங்கத் தகடு வேய்ந்து கும்பாபிஷேகம் செய்தது. 2) அச்சுத தேவராயர் என்ற விஜய நகர அரசர் கி. பி. 1554-இல் கோயிலுக்கென்று கிராம தானங்கள் செய்தது.

இக்கோயிலைப் பற்றிய புராண இதிகாசச் செய்திகள் பலவுள. மேற்குறிப்பிட்ட கும்பாபிஷேகத்திற்கு முன்னர் 1942, 1976 ஆகிய வருஷங்களிலும் கும்பாபிஷேகங்கள் நடைபெற்றுள்ளன.

1942-ஆம் ஆண்டில் ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி சுவாமிகள் இத்திருக்கோயிலின் திருப்பணியையும் மகா கும்பாபிஷேகத்தையும் செய்வித்ததோடு ஸ்ரீ காமாட்சி அம்பாளுக்கு ஸ்ரீ சக்கரா காரமாக வெள்ளி ரதமும் அம்பாளுக்கு சுவர்ண சகஸ்ரனாம ஹாரத்தையும் செய்வித்துச் சமர்ப்பித்தார்.

அதன் பின்னர் 1976-இல் திருக்கோயில் ராஜகோபுரமும், பிரகார கோபுரங்களும், விமானமும் திருப்பணி செய்யப்பட்டு (5-4-1976) இல் ஸ்ரீ காஞ்சி காமகோட்டி பீடாதிபதி ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகளால் மகா கும்பாபிஷேகம் வெகு விமரிசையாக நடத்தி வைக்கப் பட்டது.

## கோயில் அமைப்பு

தன்னை நாடிவரும் பக்தர்களின் இன்னல்களைப் போக்கி, இன்பத்தை நல்கும் நாயகியாய்த் தன் அருட் பார்வையினால் வேண்டுபவருக்கு வேண்டுவன அருளும்

அருள் வடிவமாக அன்னை காமாட்சி காஞ்சியில் கோயில் கொண்டு விளங்குகிறாள். நான்கு திசைகளிலும், நான்கு பெரிய கோபுரங்களுடனும், உயர்ந்த மதில்களுடனும் நல்ல சிற்ப வேலைப்பாடுகளுடனும் இத்திருக்கோயில் காட்சியளிக்கிறது.

மதிலைக் கடந்து உள்ளே போனால் திசைகளைச் சரியாக அறிய முடியாதவாறு இக்கோயில் அமைந்துள்ளது. திசை மயக்கம் ஏற்படுகிறது. உள்ளே சென்றதும் உயர்ந்த கொடிக்கம்பமும் பலிபீடமும் காணப்படுகின்றன. சுவரில் உள்ள கல் ஜன்னல் வழியாகப் பார்த்தால் உள்ளே காயத்திரி மண்டபத்தில் வீற்றிருக்கும் அம்பிகையைத் தரிசிக்கலாம்.

கோபுர வாயிலைக் கடந்து உள்ளே சென்றதும் சுக்கிரவார மண்டபம் இருக்கிறது. வெள்ளிக் கிழமைகளில் உத்சவ காமாட்சி இம்மண்டபத்திற்கு எழுந்தருளுகிறார். இம்மண்டபத் தூணில் ஆஞ்சநேயர் சிற்பம் உள்ளது. அதைத் தாண்டி உள்ளே செல்கிறோம். உத்சவ மண்டபத்தின் படிக்கட்டுகளை ஏறியதும் துர்வாச முனிவர் காட்சியளிக்கிறார். அங்கு மண்டபத்தில் நின்ற வண்ணமே மூலஸ்தானத்தில் வீற்றிருக்கும் ஸ்ரீ காமாட்சி அம்மனின் மூல விக்கிரகத்தையும் ஸ்ரீ சக்கரத்தையும் ஜன்னல் வழியாகத் தரிசிக்க முடிகிறது.

மூலஸ்தானத்தில் ஸ்ரீ வித்யா லலிதா திரிபுரசுந்தரி கரும்பு வில்லுடனும் புஷ்ப பாணங்களோடும் ஸ்ரீ காமாட்சி தேவியாகக் காட்சி அளிக்கிறாள். ஸ்ரீ காமாட்சி தேவியின் முன்பாக விளங்குவது நீ ஆதிசங்கரர் பிரதிஷ்டை செய்த ஸ்ரீ சக்கர வடிவமாகும்.

ஸ்ரீ காமாட்சி தேவிக்கு ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் விசேஷ அபிஷேக ஆராதனைகள் நடைபெற்று வருகின்றன. இப்போது காமாட்சியம்மனுக்குத் தங்கத் தேர் செய்திருக்கிறார்கள். ஒவ்வொரு வெள்ளிக்

கிழமையும் கோயில் உட்பிரகாரத்தில் தேர் வலம் வருகிறது. இவ்விழா கண் கொள்ளாக் காட்சியாக விளங்குகிறது.

## விழாக்கள்

மாசி மாதத்தில் பிரம்மோத்சவம் நடக்கிறது. புரட்டாசி மாதத்தில் நவராத்திரி உற்சவம் நடக்கிறது. நவராத்திரியின் போது நாள்தோறும் விசேஷ இன்னிசை நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன.

**தலவிருட்சம் :** காஞ்சி.

**தீர்த்தம் :** உலகாணித் தீர்த்தம். படிக்கட்டுகள் அழகாக இருக்கின்றன. குளம் நன்றாகப் பராமரிக்கப்பட்டு வருகிறது.

# 3. குமர கோட்டம்

## அறிமுகம்

தொண்டை நாட்டின் கண்ணெனத் திகழும் தலம் காஞ்சிபுரம். இத்தலத்தில் முருகப்பெருமான் எழுந்தருளி யிருக்கும் கோட்டம் திருக்குமர கோட்டம். இத்திருக் கோட்டம் இந்நாளில் அருட்கோட்டமாயிலங்கி ஏராள மான பக்தர்களைத் தன்பால் ஈர்க்கும் பெருமையுடைய தாகத் திகழ்கிறது. "நாதன் ஆணையால் அனைத்தும் நான் படைப்பேன்" என்று கூறிய பிரமனின் முனைப்பை அடக்கும் பொருட்டு அவனைச் சிறையிலிட்டுத் தானே படைப்புத் தொழிலை மேற்கொண்ட கோலத்தில் முருகன் இங்குக் காட்சி தருகிறார். உலகிற்குக் கந்த புராணத்தை வழங்கிய திருக்கோயில் இதுவே.

## திருக்குமர கோட்டம்

வசிக்க முத்தி தரும் தலமாகவும், சொல்லுதற்கு அரிய சிறப்புக்களை உடையதாகவும் உள்ள காஞ்சியம்பதியில் குமரன் உவந்தினிது உறையும் பதி குமர கோட்டமாகும். கலியுக வரதனாகவும், கண்கண்ட தெய்வமாகவும் முருகப் பெருமான் இத்தலத்தில் வீற்றிருந்து வேண்டினார் வேண்டியாங்கு போகவும் திருவும் அருள்கின்றான். இத்தலம் சற்றுத் திசை மயக்கமுடையது. கோட்டம் என்பதற்கு வளைவு என்ற பொருளும் உண்டல்லவா?

சிவபெருமான் கொண்டருளுகின்ற மூர்த்தங்களுள் சோமாஸ்கந்த வடிவம் என்பதும் ஒன்று. அவ்வடிவம் சிவபெருமானுக்கு இடப்புறத்தில் உமாதேவியார் அமர்ந்

திருப்ப இடையில் குமரக்கடவுள் வீற்றிருப்பது ஆகும். இத்தகைய சோமாஸ்கந்த வடிவத்தில் காஞ்சியில் குமர கோட்டம் அமைந்திருக்கிறது. ஏகாம்பரநாதர் கோயிலுக்கும் காமாட்சியம்மன் கோயிலுக்கும் நடுவில் இக்கோயில் அமைந்துள்ளது. ஆகவே இது சோமாஸ்கந்த வடிவில் அமைந்துள்ளது எனலாம். இது மேற்கு ராஜ வீதியில் மேற்கு நோக்கிய சந்நிதியை உடையது.

## காஞ்சிப் புராண வரலாறு

காஞ்சிப் புராணம் குமர கோட்டப் படலத்துள் சொல்லப்பட்ட செய்திகளின் சுருக்கம் வருமாறு : (இதில் உள்ள பாடல்கள் 45)

ஒருநாள் பிரமதேவர் இந்திராதி தேவர்களுடன் சிவபெருமானை வழிபடுவதற்காகத் திருக்கயிலை மலையை அடைந்தார். வழியில் முதற் கோபுர வாயிலில் செவ்வேள் திருவிளையாடல்கள் புரிந்து கொண்டிருந்தார். பிரமனைத் தவிர மற்ற எல்லாரும் யான், எனது என்னும் அகந்தை இன்றி முருகனை வழிபட்டனர். பின்னர் திருக்கோயிலின் உட்சென்று சிவபெருமானையும் உமா தேவியாரையும் வழிபட்டுத் திரும்பினர். பிரம்மதேவர் மட்டும் ''நாம் இவனை வணங்க வேண்டுமா?'' என்று எண்ணி இறுமாந்து சென்றார்.

முருகன் தருக்குடன் செல்லும் பிரமதேவனை அழைத்தார். பிரமதேவர் ஆறுமுகனை அணுகினார். முருகப் பெருமான் பிரமனை நோக்கி, ''நீ யார்? என்ன தொழில் செய்கிறாய்?'' என்று கேட்டார். அக்கேள்வி பிரம தேவருக்கு அச்சத்தை ஊட்டியது. ''சிவபெருமான் ஆணையின்படி படைப்புத் தொழிலைச் செய்கிறேன்'' என்று பிரமர் பணிவாகக் கூறினார். ''உனக்கு வேதம் வருமோ?'' என்ற அடுத்த கேள்வியை எழுப்பினார் முருகன்.

''ஒரு சிறிது அறிவேன்'' என்று பதிலளித்தார் பிரமதேவர். ''அப்படியாயின் முதல் வேதமாகிய 'ரிக்' வேதத்தைக் கூறும்'' என்றார் முருகன். ''ஓம்'' என்று ஆரம்பித்தார் பிரமதேவர். ''நிறுத்தும்; முதலில் ஓம் என்பதற்குப் பொருள் கூறும்'' என்றார் முருகன். பிரமதேவர் பொருள் தெரியாமல் விழித்தார். கலங்கினார்; திகைப்படைந்தார். அதைக் கண்ட முருகப் பெருமான் சினந்து ''ஓம் என்ற பிரணவத்தின் பொருள் அறியாத நீ எவ்வாறு படைத்தல் தொழில் செய்வாய்?'' என்று பிரமதேவரின் தலையில் குட்டினார். வீரவாகு தேவரை அழைத்து, அவரைச் சிறையில் இடும்படி கூறினார்.

கந்தவெற்பில் பிரமன் சிறைப்பட்ட பிறகு படைக்கும் தொழிலை முருகனே மேற்கொண்டார். பிரமதேவர் நெடுநாள் சிறையில் இருந்தார். அவரை விடுவிக்கத் திருமால் முதலியோர் கயிலை சென்றனர். சிவபெருமானிடம் முறையிட்டனர். சிவபெருமான் நந்தி தேவரை நோக்கி, ''முருகனிடம் சென்று பிரமனைச் சிறை விடுத்து நம்மிடம் அழைத்துவருக'' என்றார். அவ்வாறு சென்ற நந்தி தேவரை முருகன் திருப்பியனுப்பி விட்டார்.

தேவர்களின் துயர் நீக்க எண்ணிய சிவபெருமான் தாமே கயிலையிலிருந்து கந்தவெற்புக்கு வந்தார். முருகப் பெருமானை அன்புடன் அழைத்து மடிமீது அமர்த்தி, ''பிரமனைச் சிறை விடுக'' என்றார். முருகப்பெருமானும் அவ்வாறே பிரமனைச் சிறையிலிருந்து விடுவித்தார். பிரமதேவர் வணங்கி விடை பெற்றுத் தன் இருப்பிடம் சேர்ந்தார்.

சிவபெருமான் முருகனை நோக்கி, ''நீ நமது ஆணையை மீறினை. அதனால் உண்டான குற்றம் நீங்க நீ பிராயச்சித்தம் செய்தல் வேண்டும். அதனால் நீ காஞ்சி மாநகர் சென்று அங்கே உன் பெயரால் (தேவ,

சேனாபதீசம்') சிவலிங்கம் நிறுவி வழிபடுக'' என்று அருளினார். குமரனும் அவரைத் தொழுது வலம் வந்து, விடைபெற்று, காஞ்சியம்பதியை அடைந்தார். தம் பெயரால் தேவ சேனாபதீசம் நிறுவி வழிபட்டார்.

## திருவுருவ அமைப்பு

முருகப் பெருமான் பிரமதேவனைச் சிறையிட்ட போது பிரமசாரியாக இருந்தார். அதே திருக்கோலத்தில் தான் இங்கும் உள்ளார். ஒரு திருமுகமும் நான்கு திருக் கரங்களும் கொண்ட அழகிய திருக்கோலம் அது. உயர்த்திய வலக்கரத்தில் உருத்திராட்ச மாலையும், அதற்கு இணையான இடக்கரத்தில் கமண்டலம் உள்ளது. மற்றொரு வலக்கரம் அபயமளிக்கிறது. அதற்கேற்ற இடக்கரம் தொடையின் மேல் ஊன்றிக் கொண்டுள்ளது.

வள்ளி நாயகியைத் தழுவும் போக மூர்த்தியாகிய முருகப் பெருமான் இத்தலத்தில் மான்தோல் உடுத்து, தருப்பையாலான அரைஞாண் அணிந்து, பிரமதேவர் போல குண்டிகையும் வடமும் தாங்கிய பிரமசாரியாகக் காட்சியளிக்கிறார். இத்தலத்திலுள்ள உற்சவ மூர்த்தியின் திருவுருவும் இத்தகையதே.

கோயிலினுள் வேறு பல சன்னிதிகளும் உள்ளன. அவையாவன : தேவ சேனாபதீசம், உருகுமுள்ளப் பெருமாள், கச்சியப்பர், ஆறுமுகப் பெருமான் முதலியன.

## திருவிழாக்கள்

இப்பெருமானுக்கு ஆண்டுதோறும் வைகாசி மாதம் பிரம்மோத்சவம் நடைபெறுகிறது. மூன்றாம் நாள் விழாவில் மயில் வாகனத்தின் மீது திருவீதியுலா வருவார். பத்தாம் நாள் திருத்தேர் உற்சவம். 11-ஆம் நாள் வள்ளி அம்மையார் திருக்கல்யாணம். 12-ஆம் நாள் திருவூடல்

உற்சவத்தோடு நிறைவு பெறும். இப்பெருவிழாவின் போது நாடோறும் சமயச் சொற்பொழிவு, இசை நிகழ்ச்சி முதலியன நடைபெறும்.

ஐப்பசி மாதம் கந்தர் சஷ்டி விழா நடைபெறும். சூர சம்ஹாரம் அப்போது நிகழும்.

மாதந்தோறும் கிருத்திகையன்று முருகப் பெருமான் வீதி உலா வருவார். ஆடி கிருத்திகையும் தை கிருத்திகையும் சிறப்புடையன. அப்போது பக்தர்கள் கூட்டம் அதிகமாயிருக்கும். மூலவருக்குத் தேன் அபிஷேகம் செய்கிறார்கள்.

## கோயில் நிர்வாகம்

இக்கோயில் நெடுநாட்களாக காந்திரோடு ஜவுளிக் கடை சத்திரத்தின் நிர்வாகத்தில் இருந்து வந்தது. 1950-ஆம் ஆண்டு முதல் இந்து சமய அறநிலைய ஆட்சித் துறையினரால் நிர்வகிக்கப்பட்டு வருகிறது.

புதிதாய் இராஜகோபுரம் நிர்மாணிக்கப்பட்டு 1988-ஆம் ஆண்டு கும்பாபிஷேகமும் சிறப்பாய் நடை பெற்றது.

**ஆறிரு தடந்தோள் வாழ்க**
**அறுமுகம் வாழ்க வெற்பைக்**
**கூறுசெய் தனிவேல் வாழ்க**
**குக்குடம் வாழ்க செவ்வேள்**
**ஏறிய மஞ்ஞை வாழ்க**
**யானைதன் அணங்கு வாழ்க**
**மாறிலா வள்ளி வாழ்க**
**வாழ்கசீர் அடியார் எல்லாம்**

—கந்தபுராணம்

வள்ளியம்மை திருமணப்படலம். பாடல் எண் 261.

# 4. வரதராஜப் பெருமாள்

*(திருக்கச்சி, அத்திகிரி)*

*(பெருமாள் கோயில், அத்தியூர்)*

**பெருமாள் :** தேப்பெருமாள், தேவராஜன், பேரருளாளன்.

**தாயார் :** பெருந்தேவித்தாயார்.

**விமானம் :** புண்ணியகோடி விமானம்.

**தீர்த்தங்கள் :** அநந்தஸரஸ்; சேஷ, வராக, பிரம்ம, பத்ம, அக்னி, குசல தீர்த்தங்கள்.

**நதி :** வேகவதி.

**பிரத்யட்சம் :** பிருகு, நாரதர் அநந்தாழ்வான், பிரம்மா, கஜேந்திரர் ஆகியோர்க்குப் பிரத்யட்சம்.

பாசுரங்களில் பொதுவாகக் கச்சியென்று குறிக்கப்படும் இடங்களில் இத்தலம் கொள்ளப்படுகிறது.

ஐராவதம் என்னும் யானையே மலையுருவாகி எம்பெருமானைத் தாங்கினமையால் இது அத்திகிரி, அத்தியூர் என்றாயிற்று. இவ்வத்திகிரியை உத்தர வேதியாகக் கொண்டு பிரம்மா அசுவமேதயாகம் செய்ய, அதில் தோன்றிய புண்ணியகோடி விமானத்தில் எம்பெருமான்

*எழுந்தருளி வரம் கொடுத்தபடியால் வரதராஜன் என்ற திருப்பெயர் ஏற்பட்டது. இக்கோயிலில் நிரம்ப கல்வெட்டுகள் உள்ளன. விஜயமன்னர் காலத்துச் சிற்ப வேலைகள் நிரம்பவுள்ளன. அத்திகிரியின் அடிவாரத்திலுள்ள அழகிய சிங்கப்பெருமாளே மங்களா சாசனம் பெற்றவர் என்று சில அறிஞர்கள் கூறுகின்றனர். மங்களா சாசனம் செய்தவர்கள் மூவர். பாசுரங்கள் ஏழு.*

| | | |
|---|---|---|
| *திருமங்கையாழ்வார் (பாசுர எண்கள்)* | | *1541, 2050, 2060, 2066,* |
| *பூதத்தாழ்வார்* | ,, | *2276, 2277,* |
| *பேயாழ்வார்* | ,, | *2307* |

## திருமங்கையாழ்வார் அருளிச் செய்த

## திருநெடுந்தாண்டகம்

*(எண்சீர் ஆசிரிய விருத்தம்)*

**2066.** **கல்லுயர்ந்த நெடுமதில்சூழ் கச்சி மேய**
**களிறென்றும் கடல்கிடந்த கனியே என்றும்**
**அல்லியம்பூ மலர்ப்பொய்கைப் பழன வேலி**
**அணியழுந்தூர் நின்றுகந்த அம்மான் என்றும்**
**சொல்லுயர்ந்த நெடுவீணை முலைமேல் தாங்கித்**
**தூமுறுவல் நகையிறையே தோன்ற நக்கு,**
**மெல்விரல்கள் சிவப்பெய்தத் தடவி யாங்கே**
**மென்கிளிபோல் மிகமிழற்றும் என்பே தையே.**

*இது நற்றாய் கூற்று: கல்லால் கட்டப்பட்ட உயர்ந்த நீண்ட மதில்களையுடைய காஞ்சிபுரத்தில் பொருந்தியுள்ள யானை யென்றும், திருப்பாற்கடலில் பள்ளி கொண்ட*

பழமே யென்றும், அல்லி மலர்கள் நிறைந்த பொய்கை களையும் கழனிகளையும் வேலியாகக் கொண்ட தேரழுந் தூரில் எழுந்தருளியுள்ள அம்மான் என்றும் கூறி, சிறப் பித்துச் சொல்லப்படுகின்ற நீண்ட வீணையை மார்பின் மீது தாங்கிப் புன்முறுவல் செய்து, மென்மையான விரல்கள் சிவப்படையுமாறு என் பேதைப் பெண் மென்மை வாய்ந்த கிளி போல் நன்றாக அந்த வீணையை வாசிப்பாள்.

## பூதத்தாழ்வார் அருளிச் செய்த
## இரண்டாம் திருவந்தாதி

(நேரிசை வெண்பா)

**2277** **அத்தியூ ரான்புள்ளை யூர்வான் அணிமணியின்**
**துத்திசேர் நாகத்தின் மேல்துயில்வான் — முத்தீ**
**மறையாவான் மாகடல்நஞ் சுண்டான் தனக்கும்**
**இறையாவான் எங்கள் பிரான்.**

அத்தியூரில் (காஞ்சிபுரத்தில்) கோயில் கொண்டி ருப்பவன்; கருடனை வாகனமாக உடையவன்; நவமணி களையும் புள்ளிகளையும் உடைய ஆதிசேஷன் மேல் பள்ளி கொண்டிருப்பவன்; முத்தீயாகவும் (ஆகவனீயம், காருகபத்தியம், தட்சணாக்கினி) வேதங்களாகவும் இருப்பவன். திருபாற்கடலைக் கடைந்த போது வெளிப் பட்ட நஞ்சை யுண்டவனாகிய சிவபெருமானுக்கும் தலைவனாவான் எங்கள் எம்பிரான் என்பதாம்.

# பேயாழ்வார் அருளிச் செய்த
# மூன்றாம் திருவந்தாதி

*(நேரிசை வெண்பா)*

2307 **சிறந்தஎன் சிந்தையும் செங்கண் அரவும்**
**நிறைந்தசீர் நீள்கச்சி யுள்ளும் — உறைந்ததுவும்**
**வேங்கடமும் வெஃகாவும் வேளுக்கைப் பாடியுமே**
**தாம்கடவார் தண்துழா யார்.**

*தண் துழாய்மாலை அணிந்துள்ள எம்பெருமான் என் சிந்தையோடு திருவனந்தாழ்வானோடு, கச்சிப்பதியோடு, திருவேங்கட மலையோடு, திருவெஃகாவோடு, திருவேளுக் கையோடு வாசியற இவ்விடங்களில் திருவுள்ளம் உவந்து வாழ்கிறான் என்கிறார். எம்பெருமான் விரும்பி மேல் விழுவதற்கு உறுப்பான தம் சிந்தைக்கு, சிறந்த என்ற அடைமொழி கொடுத்தது பொருந்தும்.*

## திருக்கச்சி

*கோயில், திருமலை, பெருமாள் கோயில் என்பன வைணவ முக்கியத் தலங்கள். கோயில் என்று சிறப்பிக்கப் படுவது ஸ்ரீரங்கம் கோயில்; திருமலை என்பது திருவேங்கடமுடையான் கோயில் கொண்டுள்ள திருப்பதி-திருமலை; பெருமாள் கோயில் என்பது காஞ்சிபுரம்.*

## காஞ்சிபுரம்

*காசி முதலாய நன்னகரி எல்லாம், 'கார்மேனி அருளாளர் கச்சிக் கொவ்வா' என்ற பெருமையுடையது. பெருமாள்- வரதராஜப் பெருமாள். கருட சேவையால் சிறப்புடையது. தாயார்- பெருந்தேவித் தாயார். பெருமானுக்குத் தேவராஜர் என்ற திருநாமமும் உண்டு.*

பிரம்ம தேவர் விஷ்ணுவை வழிபட்ட இடம். ஆதலால் காஞ்சி என்ற பெயர் பெற்றது. கா-பிரமன்.

## அத்தியூர்

இதற்கு அத்தியூர் என்ற பெயரும் உண்டு. வேகவதி யாற்றின் கரையில் பிரம்மா செய்த யாகத்தின் பயனாக மகா விஷ்ணு புண்ணிய கோட்டி விமானத்தில் காட்சி யளிக்க, ஐராவதம் என்ற யானை மலையாக நின்று விமானத்தைத் தாங்கிற்று. ஆகவே அத்திகிரி என்றும் அத்தியூர் என்றும் பெயருண்டாயிற்று. பிரம்மாவுக்குப் பல வரங்களை அளித்தார் விஷ்ணு. வரதர் என்ற பெயர் பெற்றார். வரதர் என்றால் வரமளிப்பவர் என்று பொருள். அங்கேயே அர்ச்சையில் நின்று பக்த கோடி களுக்கு வரமளிக்கிறார்.

வரதராஜ பெருமாள் கோயிலில் வைகாசி மாதம் பிரம்மோத்சவம் நடைபெறும். அத்திருவிழாவின் போது சுவாமிக்கு முன்னால் தென்கலையார் நாலாயிர திவ்வியப் பிரபந்தம் சேவிப்பர். சுவாமிக்குப் பின்னால் வடகலை யார் வேத பாராயணம் செய்வர். மற்ற மாதங்களில் சாதாரண விழாக்கள் நடைபெறும். பெரு விழாவின் போது மூன்றாம் நாள் கருட சேர்வையும், ஏழாம் நாள் தேர் விழாவும் நடைபெறும். அவை இரண்டும் பிரசித்த மானவை. பெருந்திரளான மக்கள் கூடுவர். அப்போது நகர முழுவதும் விழாக் கோலம் கொண்டிருக்கும். பெருமாள் பெரிய காஞ்சிபுரம் செல்வார். கங்கை கொண்டான் மண்டபத்தில் மண்டபடி நடைபெறும். இராஜவீதிகள் நான்கிலும் பவனி வருவார். உலாவரும் மொத்த தூரம் சுமார் ஏழு மைல்கள் இருக்கும். வழி நெடுக மண்டபடிகள் நடைபெறும். கருட சேர்வையின் போது பஜனை கோஷ்டிகள் சுவாமியைப் பின்பற்றிச்

செல்லும். அன்று நகரம் தெய்வலோகம் போல் காட்சியளிக்கும்.

பேரருளாளன், வரதன், வரதராஜன், தேவராஜன், பெருந்தேவி மணவாளன் என்று இவருக்கு வேறு திருநாமங்களும் உண்டு. உயர்ந்த மதில்களும், இரண்டு பெரிய கோபுரங்களும் கொண்டது இக்கோயில். இக்கோயில் மேற்கு கோபுரத்திற்குச் சில ஆண்டுகளுக்கு முன் கும்பாபிஷேகம் நடைபெற்றது. ரதமும் செப்பனிடப்பட்டு ரதோற்சவமும் இப்போது நடைபெற்று வருகிறது. பெருமாள் இங்கே நின்ற திருக்கோலத்தில் காட்சி தருகிறார். மேற்கு நோக்கிய சந்நிதி.

## அத்தி வரதர்

முன்பு அத்திமரத்தினால் செய்யப்பட்டிருந்தது வரதராஜப்பெருமாள் விக்கிரகம்;— கற்சிலை உருவாக்கப் பட்ட பின்னர்— அதைக் கோயில் குளத்து நீருள் பாது காத்து வைத்துள்ளனர். நாற்பது ஆண்டுகளுக்கு ஒரு முறை அதை வெளியில் எடுத்து, பிரதிஷ்டை செய்து, அணிமணிகளால் அலங்காரம் செய்து, பக்தர்களின் தரிசனத்திற்கு ஒரு மண்டலம் கொலுவில் வைக்கின்றனர். 1980-ஆம் ஆண்டு அவ்விழா நடைபெற்றது. பெருந் தொகை கட்டணமாக வசூலாயிற்று. ஓடாமல் இருந்த தேரைப் புதுப்பிப்பதற்கு அத்தொகை பயன்பட்டது. 17-5-1987-ல் ரதோற்சவம் நடைபெற்றது. திருச்சி B H E L நிறுவனத்தார் நான்கு லட்ச ரூபாய் செலவில் தயாரித்த நான்கு இரும்புச் சக்கரங்கள் தேரில் பொருத்தப் பட்டுள்ளன. Ball bearing அமைப்பு செய்யப்பட்டுள்ள தால் தேரை இழுத்துச் செல்லச் சுலபமாய் இருக்கிறது. 1990 மே மாதம் நடந்த ரதோற்சவத்தின்போது தேர் ஒரே நாளில் நிலைக்கு வந்து சேர்ந்தது குறிப்பிடத்தக்கது.

கோயிலினுள் இருக்கும் குளத்தின் மத்தியில் நீராழி மண்டபம் இருக்கிறது. இக்குளத்தில் தெப்ப உற்சவம் நடக்கிறது. அப்போது பெருமாளும் பெருந்தேவித் தாயாரும் தெப்பத்தில் எழுந்தருளுவது கண்கொள்ளாக் காட்சியாக இருக்கும். மற்றபடி தாயார் கோயிலுக்கு வெளியே எங்கும் செல்வதில்லை. இப்பெருமாளின் சேவையில் பங்கு கொண்டு நற்கதி பெற்றவர்கள் பலராவர். ஆலவட்டக் கைங்கர்யம் செய்து வந்த திருக்கச்சி நம்பி, குறிப்பிடத்தக்கவர். யாக குண்டத்தில் தோன்றியதால் வெப்பம் தணியப் பெருமாளுக்கு இதமாய் இருக்கும் வண்ணம்விசிறி வீசி, திரு ஆலவட்டம் புரிந்து வந்தார். அதற்கு அடுத்தவர் இராமானுஜர். இவர் தீர்த்த கைங்கரியத்தில் ஈடுபட்டார். வைணவம் செழித்தோங்க இராமானுஜரை ஆளவந்தாருக்கு அறிமுகம் செய்வித்து, ஆளவந்தாருக்குப் பின் வைஷ்ணவ தரிசனத்தை நிலை நாட்ட வல்லவர் அவரே என்பதனை ஆளவந்தார் உணர்வதற்கு உதவியாக இருந்தவரும் திருக்கச்சி நம்பிகளே.

இராமானுஜரை முதன்முதலாக ஆளவந்தார் கண்டதும், அவரே தமக்குப் பின்னர் வைஷ்ணவ விருட்சத்தைக் காத்து வளர்க்கக் கூடியவர் என்ற எண்ணம் தோன்றியதும் ஸ்ரீ வரதராஜப் பெருமாளின் திருச்சன்னதியில் தான்.

அதற்கு அடுத்தவர் வேதாந்த தேசிகர். பெருமாளையும் தாயாரையும் பற்றி ஸ்ரீ ஸ்துதியில் எடுத்துரைத்துத் தங்கமழை பெய்வித்த பெருமையைப் பெற்றவர் இவர்.

வைகாசி மாதம் நடைபெற்ற கருடசேவை வைபவத்தைக் கண்டு ராபர்ட் கிளைவ் மணிமாலையைப் பெருமாளுக்குக் காணிக்கையாகச் சமர்ப்பித்த சம்பவம் குறிப்பிடத்தக்கது. இந்தத் திரு ஆபரணத்தைக் கருடசேவையின் போது பெருமாளுக்குச் சாற்றி வருகிறார்கள்.

கோயிலினுள் குளக்கரையில் நூற்றுக்கால் மண்டபம் உள்ளது. குளக்கரையைச் சுற்றி ஆழ்வார்கள் ஆசாரியர்கள் சன்னிதிகள் உள்ளன. காஞ்சிபுரத்தில் மங்களாசாசனம் செய்யப்பட்ட மற்ற திவ்விய தேசங்களைப் பற்றி அடுத்த பகுதியில் கூறப்பட்டுள்ளது.

இக்கோயில் செல்வ வளமுடையது. நிலபுலன்கள் உள்ளன. பல்லவ சோழ மன்னர்கள் காலத்தில் கல்வெட்டுக்கள் இக்கோயிலில் உள்ளன. கிருஷ்ண தேவராயர் காலத்தில் இக்கோயிலின் திருப்பணி வேலைகள் சிறப்பாக நடந்திருக்கின்றன. இக்கோயில் பெரிய கோட்டை போல் அமைந்திருக்கிறது. உட்பகுதி விசாலமானது. மதில் சுவர்கள் உயரமானவை. பெருமாள் தாயார் திருவாபரணங்கள் மிகவும் விலை உயர்ந்தவை. இந்து மத பரிபாலன சபையால் இது நிர்வகிக்கப்பட்டு வருகிறது. உத்சவத்தின் போது இக்கோயில் தெய்வ லோகம் போல் காட்சியளிக்கும். புஷ்கரணி தீர்த்தம் நன்கு பராமரிக்கப்பட்டு வருகிறது. மீன் இருப்பதால் நீர் சுத்தமாக இருக்கிறது.

# 5. வைணவத் தலங்கள்

காஞ்சிபுரத்தில் ஆழ்வார்களால் மங்களா சாசனம் செய்யப்பட்ட திவ்விய தேசங்கள் 14. புராணச் சிறப்புடையவை 4-ஆக 18 தலங்களைப் பற்றியும் சுருக்க மான தகவல்கள் குறிக்கப்பட்டுள்ளன. வாசகர்கள் அந்தத் திருப்பதிகளைத் தரிசித்துப் பேறு பெறுவார்களாக!

**1. திருஅத்திகிரி**

இது வரதராஜப் பெருமாள் கோயில். இதைப் பற்றி முன் அத்தியாத்தில் விவரமாய் சொல்லப்பட்டுள்ளது.

**2. திரு அஷ்ட புஜம்**

**பெருமாள் :** ஆதிகேசவப் பெருமாள்

**தாயார் :** அலர்மேல் மங்கை.

இத்தலம் அட்டபுயங்கரம் எனவும் வழங்கப்படுகிறது. சின்ன காஞ்சிபுரம் தேரடியருகில் உள்ளது. புயங்கம் காளிங்கன் என்னும் பாம்பின் மீது நர்த்தனம் செய்தது.

எட்டுத் திருக்கரங்களிலும் எட்டு ஆயுதங்களை ஏந்தியுள்ள தால் அஷ்டபுஜம் என்று இவருக்குப் பெயர் வந்தது. திருமங்கையாழ்வார் மங்களாசாசனம் செய்துள்ளார். பாசுரம் 1118 — 1127; பேயாழ்வார் 2380 ஆக 11 பாசுரங்கள்.

**3 திருவெஃகா** (யதோக்தகாரி சந்நிதி)

**பெருமாள் :** சொன்ன வண்ணம் செய்த பெருமாள்.

**தாயார் :** கோமளவல்லி நாச்சியார்.

இத்தலம் யதோக்தகாரி சந்நிதி என வழங்கப் படுகிறது. சின்ன காஞ்சிபுரத்தில் அஷ்டபுஜம் கோயிலுச்கு அருகில் உள்ளது. பிரமன் அசுவமேத யாகம் தொடங்கிய போது தன் மனைவியான சரஸ்வதியைத் துணை கொள்ளாமலே வேள்வி புரிய நேர்ந்தது. அப்போது அசுரர்களின் தூண்டுதலால் சரஸ்வதி தேவி வேகவதியென்னும் நதி வடிவெடுத்துப் பெருகி வந்தாள். வேள்விக்கு இடையூறு செய்ய ஆரம்பித்தாள். எல்லாரும் வேண்டிக் கொண்டதற்கிணங்கி எம்பெருமான் பேரருள் கொண்டு ஆற்றின் குறுக்கே சயனித்தார். சரஸ்வதி நாணமுற்று அந்தர்வாகினியாய்த் தரைக்குள் மறைந்து விட்டாள். யாகம் இனிது முடிவுற்றது. இத்தலத்தின் வடபுறத்திலுள்ள பொய்கையில் தாமரை மலரில் பொய்கை யாழ்வார் அவதாரம் செய்தார். இறைவன் இங்கே சயன திருக்கோலத்தில் காட்சியளிக்கிறார். இக் கோயில் காலத்தால் முற்பட்டது என்று தோன்றுகிறது.

திருமழிசையாழ்வார் பாசுரங்கள் 814, 815, 2417.

பொய்கையாழ்வார் 2158, பேயாழ்வார் 2307, 2343, 2345, 2357,

நம்மாழ்வார் 2503

திருமங்கையாழ்வார் 1854, 2059, 2064, 2065, 2673, 2674

ஆகமொத்தம் 15 பாசுரங்கள்.

**4. திருத்தண்கா**

**பெருமாள் :** விளக்கொளி பெருமாள்.

**தாயார் :** மரகதவல்லி

குளிர்ச்சி பொருந்திய சோலை என்று பொருள். பிரம்மாவின் யாகத்தைக் கெடுக்க அசுரர்கள் இருள்

சூழ்வித்தனர். அப்போது விஷ்ணு பேரொளியாக நின்று இருளைப் போக்கினார். இத்தலம் விளக்கொளி பெருமாள் கோயில் தெருவின் மேல் கோடியில் இருக்கிறது. இதற்கு அருகில் தேசிகர் கோவில் இருக்கிறது. தீபப் பிரகாசர் என்பது வடமொழிப் பெயர். இதன் அருகிலுள்ள தும்பை வனம் என்ற பெயரே தூப்புல் என்றாயிற்று. இது வேதாந்த தேசிகரின் அவதார தலம்.

திருமங்கையாழ்வார் பாசுரம் 1849, 2065.

## 5. திருப்பாடகம்

**பெருமாள் :** பாண்டவ தூதர் (கல்வெட்டில் தூத ஹரி என்றுள்ளது)

**தாயார் :** ருக்மணி, சத்தியபாமா.

இது பாண்டவப் பெருமாள் கோயில் என வழங்கப் படுகிறது. பெரிய காஞ்சிபுரத்தில் உள்ளது. வீற்றிருக்கும் திருக்கோலத்தில் இவ்வளவு வளர்த்தியான மூர்த்தி வேறு எங்கும் இல்லை. பாடு+அகம் பெருமை தோன்ற எழுந் தருளியிருக்கும் தலம் என்று பொருள். ஸ்ரீ கிருஷ்ண பகவான் பாண்டவ தூதனாய் துரியோதனன் சபைக்கு எழுந்தருளின காலத்தில் அவன் செய்த சூழ்ச்சிக்கு விஸ்வ ரூபம் எடுத்த வரலாறு மகாபாரதத்தில் கண்டது. உள்ளே திருக்குளம் இருக்கிறது.

திருமங்கையாழ்வார் பாசுரம் : 1541, 2674.

பூதத்தாழ்வார் 2275,

பேயாழ்வார் 2311

திருமழிசையாழ்வார் 814, 815.

மொத்த பாசுரங்கள் 6.

தொல்பொருள் ஆராய்ச்சி இலாகாவின் பாதுகாப்பில் உள்ளது.

### 6. திரு பரமேஸ்வர விண்ணகரம்

**பெருமாள் :** *பரமபதநாதன்*

**தாயார் :** *வைகுந்தவல்லி*

*இது வைகுண்ட பெருமாள் கோயில் என வழங்கப் படுகிறது. தொல்பொருள் ஆராய்ச்சி இலாகாவின் பாது காப்பில் உள்ளது. கோயிலின் எதிரில் திருக்குளம் இருக் கிறது. மேற்கு பார்த்த சந்நிதி. வைகுண்ட ஏகாதசி யன்று பெருந்திரளான மக்கள் வந்து தரிசிக்கின்றனர். முகுந்த விமானம் பல்லவ ராஜனுக்குப் பிரத்யட்சம். இதில் பல்லவ சிற்பங்களும் வரலாறுகளும் சுவர்களில் செதுக்கப்பட்டுள்ளன. மேல் தளத்தில் சயனக் கோலமும்* (first floor), *அதற்கு மேல்* (second floor) *நின்ற திருக் கோல உருவமும் உள்ளன.*

*திருமங்கையாழ்வார் பாசுரம் 1128—1137 (பத்துப் பாசுரங்கள்)*

### 7. திருவூரகம்

**பெருமாள் :** *உலகளந்த பெருமாள்*

**தாயார் :** *அமுதவல்லி*



*இது உலகளந்த பெருமாள் கோயிலாகும். உலகை அளந்த பேருருவம் ஆகும் இது. இந்த உயர்ந்த காட்சி முழுவதையும் காண தீவட்டி ஏற்றிப் பார்க்க வேண்டும். இந்தக் கோயில் மதிலுக்குள் திருநீரகம், திருக்காரகம். திருக்கார்வானம் முதலிய திவ்விய தேசங்களும் உள்ளன. மேற்கு பார்த்த சந்நிதி, சார ஸ்ரீகர விமானம். நாக தீர்த்தம் எதிரில் உள்ளது. ஆதிசேஷனுக்குப் பிரத்யட்சம்.*

*திருமழிசை யாழ்வார் பாசுரம் 814, 815*

*திருமங்கை யாழ்வார் பாசுரம் 2059, 2064, 2673,*
2674

## 8. திருக்காரகம்

**பெருமாள் :** கருணாகரன்

**தாயார் :** பத்மாமணி

**வாமன விமானம் :** அக்ராய தீர்த்தம்

உலகளந்த பெருமாள் கோயில் தென்பிரகாரத்தில் உள்ளது. திருமங்கை யாழ்வார் பாசுரம் 2059.

## 9. திருக்கார்வானம்

**பெருமாள் :** கள்வர்

**தாயார் :** கமலவல்லி

புஷ்கல விமானம், கௌரி தடாகம். இதுவும் உலகளந்த பெருமாள் கோயிலில் உள்ளது.

திருமங்கை யாழ்வார் பாசுரம் 2059.

## 10. திருநீரகம்

**பெருமாள் :** ஜகதீசன்

**தாயார் :** திருமங்கைவல்லி

ஜகதீஸ்வர விமானம்

திருமங்கை யாழ்வார் பாசுரம் 2059.

இது உலகளந்த பெருமாள் கோயிலில் உள்ளது.

காஞ்சிபுரத்திலுள்ள எல்லா பெருமாள் சந்நிதிகளை' யும் சேர்த்துப் பாடிய 2059 எண் பாசுரம் வருமாறு ;

## திருமங்கையாழ்வார் அருளிச்செய்த திருநெடுந்தாண்டகம்

*(எண்சீர் ஆசிரிய விருத்தம்)*

2059 திருநீரகத்தாய் நெடுவரையின் உச்சி மேலாய்
நிலாத்திங்கள் துண்டத்தாய் நிறைந்த கச்சி
ஊரகத்தாய் ஒண்துறைநீர் வெஃகா வுள்ளாய்
உள்ளுவார் உள்ளத்தாய் உலகம் ஏத்தும்
காரகத்தாய் கார்வானத் துள்ளாய் கள்வா
காமருபூங் காவிரியின் தென்பால் மன்னும்
பேரகத்தாய் பேராதென் நெஞ்சின் உள்ளாய்
பெருமான்உன் திருவடியே பேணி னேனே.

**11. திருநிலாத்திங்கள் துண்டம்**

**பெருமாள் :** *நிலாத்திங்கள் துண்டத்தான்*

**தாயார் :** *நேர் ஒருவர் இல்லா வல்லி*

*புருஷ சூக்த விமானம். இது ஏகாம்பர நாதர் கோயிலினுள் இருக்கிறது. மேற்கு பார்த்த சந்நிதி. திருமங்கையாழ்வார் பாசுரம் 2059*

**12. திருபவள வண்ணம்**

**பெருமாள் :** *பவள வண்ணன்*

**தாயார் :** *பவள வல்லி*

*இது பெரிய காஞ்சிபுரத்தில் உள்ளது.*

*பிரவாள விமானம், திருமங்கையாழ்வார் பாசுரம் 2060.*

**13. திருவேளுக்கை**

**பெருமாள் :** முகுந்த நாயகன்

**தாயார் :** வேளுக்கைவல்லி

கனக விமானம், கனக சரஸ்

பேயாழ்வார் பாசுரம் 2307, 2315, 2343.
திருமங்கையாழ்வார் பாசுரம் 2674 ஆக பாசுரங்கள் நான்கு

இத்தலத்து எம்பெருமான் இப்போது பூசையின்றி ஓர் ஏரியின் மத்தியில் ஜலவாசம் செய்வது மிகவும் வருந்தத் தக்கது.

**14. திருக்கள்வனூர்**

**பெருமாள் :** ஆதிவராகப் பெருமாள்

**தாயார் :** அஞ்சிலை நாச்சியார்

வாமன விமானம், நித்திய புஷ்பம்

இந்த சன்னிதி காஞ்சிபுரம் காமாட்சியம்மன் கோயிலுக்குள் இருக்கிறது. இப்போது நாச்சியார் விமானம், தீர்த்தம் முதலியன புலப்படவில்லை.

திருமங்கையாழ்வார் பாசுரம் 2059

இவைகளேயன்றி அடியிற்கண்ட நான்கும் புராணச் சிறப்பு பெற்றவை.

**15. முகுந்த பெருமாள்**

**16. நரசிங்க பெருமாள்**

**17. உள்ளுவார் உள்ளத்தான்**

**18. பச்சை வண்ணர்**

இவை நான்கும் பெரிய காஞ்சிபுரத்தில் உள்ளன.

# 6. சித்திரகுப்தர்

தமிழ்நாட்டிலுள்ள தலங்கள் பலவற்றுள் காஞ்சிபுரம் தலைசிறந்ததாகும். 'கல்வியில் கரையில்லாத காஞ்சி மாநகர்' என்று திருநாவுக்கரசரும், 'தேசமெல்லாம் புகழ்ந்து ஆடும் கச்சி' என்று மாணிக்கவாசகரும் பிறரும் காஞ்சிபுரத்தினைச் சிறப்பித்துப் புகழ்ந்துள்ளனர்.

சைவம், வைணவம், சாக்தம், கௌமாரம், ஜைனம் என்னும் சமயங்கள் பலவும் இன்றும் தழைத்தோங்கி நிலவி வரும் தலைநகரம் காஞ்சிபுரம். ஆழ்வார்களும் நாயன்மார்களும் அதன் சிறப்பை வியந்து துதித்து உள்ளனர். பழமையும், பெருமையும், வரலாற்றுச் சிறப்பும் வாய்ந்த புகழ்மிக்க கோயில்கள் பற்பல, காஞ்சி மாநகரில் உள்ளன. அவற்றுள் சித்திரகுப்தர் கோயிலும் ஒன்று. தென்னகத்திலேயே சித்திரகுப்தருக்குச் சிறந்த தொரு தனிக் கோயிலாக விளங்குவது இஃது ஒன்றே யாகும்.

சித்திரகுப்தர் சூரியபகவானின் மைந்தராகத் தோன்றியவர். யமதருமன் என்னும் கூற்றுவனுக்கு உதவியாக இருந்து, உயிர்களின் புண்ணிய பாவங்களை யும், ஆயுளையும் கணித்துக் கணக்கு எழுதி வருவது சித்திரகுப்தர் செய்யும் தொழில். அவர் வலக்கையில் எழுத்தாணியும், இடக்கையில் ஏடும் வைத்துக் கொண்டு வலக் காலை ஊன்றி, இடக்காலை மடித்துக் கொண்டு, சுகாசன நிலையில் வீற்றிருக்கிறார். இவருக்குப் பிரபாவதி, நீலாவதி, கர்ணிகி என்னும் தேவியர் மூவர் உண்டு. நவக்கிரகங்களுள் கேது என்னும் கிரகத்துக்கு அதிதேவதையாக விளங்குபவர் சித்திரகுப்தரே யாவார்.

இத்தகைய சிறப்புமிக்க சித்திரகுப்தரின் திருக்கோயில் காஞ்சிபுரத்தின் நடுவண், தெற்கு மாடவீதியில், நெல்லுக்காரத் தெருவில் சிறப்புற அமைந்துள்ளது. சித்திர குப்தரைத் தம் குல தெய்வமாகக் கொண்ட கருணீக மரபினர் இக்கோயிலைச் சிறப்புறப் பரிபாலித்து வருகின்றனர்.

## புராண வரலாறு

ஒரு நாள் தென்திசைக் கடவுளான காலதேவன் கதிரவனிடம் சென்று இறைஞ்சினான். அவரை வரவேற்ற கதிர்க்கடவுள் அவர் வந்த காரணம் யாதென வினவினார். அதற்குக் காலக் கடவுள், ''ஐயா! எமக்கு முதல் அமைச்சராகவும், அனைத்துலக உயிர்களின் ஆயுள் வரையறை செய்து அவற்றின் நல்வினை, தீவினை ஆகியவற்றை ஆய்ந்துரைக்கும் ஆற்றல் மிக்க கணிதத் தலைவராகவும் இருக்கத் தங்கள் புதல்வரான சித்திரகுப்தரே தகுதியானவர். இதற்காகவே இவர் படைக்கப் பெற்றவர் என்பதைத் தாங்களும் அறிவீர்கள். இவர் தோன்றிய போதே இவர் தம் கைகள் அகத்தே இயற்கையாக அமைந்திருந்த ஏடு, எழுத்தாணி ஆகிய இரேகைகள் அதனை வலியுறுத்துவன ஆகும். எனவே அடியேன் வேண்டுகோளுக்கு இசைந்து தங்கள் புதல்வரை என்னுடன் அனுப்பியருள்க'' என்று விண்ணப்பித்தனர். கதிரவனாரும் தம் புதல்வரை, ''கூற்றுவனாருக்குத் துணைபுரிக'' எனப் பணித்து அனுப்பினர். சித்திரகுப்தர் தம் தந்தையார் கட்டளையிட்டருளியபடி மனைவியர் புடைசூழ அறக்கடவுளுடன் சென்று, அவர்தம் முதலமைச்சராகவும், கணிதத் தலைவராகவும் செயலாற்றத் தொடங்கினார்.

உலகிலுள்ள உயிர்த் தொகையின் பாவ புண்ணியங்களைப் பற்றித் தருமராசனார் சித்திரகுப்தரை உசாவி

அறிகின்றார். சித்திரகுப்தர் அங்குள்ள பிரமன் புதல்வர் களான சாரணர்களைக் கேட்டுச் செய்திகளைத் திரட்டு கின்றார். உலகில் வாழும் அனைத்து உயிர்களின் செயல் களும் சாரணர்களுக்குத் தெரியும். அவர்தம் மனைவி யர்க்கும் உலகில் பெண்ணினத்தின் செயல் அனைத்தும் தெரியும். சித்திரகுப்தர் தாம் கேட்டறியும் செய்திகளைத் தம் ஏட்டில் எழுத்தாணி கொண்டு குறிக்கின்றார். இப்பெருமான் எந்தச் செயலையும் பிறர் உதவியின்றித் தாமே அறிய வல்லவரானாலும் அந்நாளில் சிவபெருமான் திட்டமிட்ட நியதிப்படி இவ்வகையான வழக்கு அங்கு நிலவி வருகின்றது.

## கோயில் திருப்பணி

எவ்வுயிரும் அஞ்சுவது மரணம். மரணம் எய்தும் நாளையும் மரணத்தைச் செயற்படுத்தும் கால தேவனை யும் எண்ணி நடுக்கங் கொள்ளுதல் இயற்கையே. அத்தகு காலதேவனிடம் அமைச்சராக இருந்து அவனது தொழிலுக்குத் துணைபுரியும் அவன்தன் இளவலாகிய சித்திரகுப்தரிடமும் அச்சமும் அதன் அடிப்படையில் மதிப்பும் உண்டாதல் இயல்பேயாகும். ஆதலின் சித்திர குப்தரையே அன்றித் தருமராஜனையும் மகிழ்விக்கும் என்று முற்றும் உணர்ந்து சித்திரகுப்தருடைய உருவ வர்ணனையை ஆதாரமாகக் கொண்டு அவரது ரூபத்தைக் கற்சிலையாக வடித்துக் கோயிலில் எழுந்தருளச் செய்து தெய்வமாக மதித்து வழிபடும் வழக்கம் மக்களிடையே பண்டைக் காலத்திலேயே தோன்றிற்று எனலாம்.

இவ்வழக்கத்தை ஒட்டியே சான்றோர் உடைத்தெனும் இத்தொண்டை நன்னாட்டின் தலைநகராகிய கச்சியம் பதியிலும் சித்திரகுப்தருக்குத் திருவுருவம் செய்வித்துக் கோயிலில் பிரதிட்டை செய்து வழிபடுவாராயினர். எனவே சித்திரகுப்தர் இந்நகரில் கோயில் கொண்ட காலம் மிகப் பழமையானது.

கோயிலின் நுழைவாயிலில் கோபுரம் எழுப்புதல், முகப்பில் மகா மண்டபம் அமைத்தல், தீர்த்தக் கிணறும் மடைப்பள்ளியும் நவக் கிரகங்களும் தோற்றுவித்தல் போன்ற திருப்பணிகள் பலவும் முடித்துக் கும்பாபிஷேகம் செய்வது அவசியம் நிகழ வேண்டியதாகும். இவை நிகழச் சீக்கிரமே சித்திரகுப்தர் துணைபுரிய வேண்டுமென அவரது அருளை வேண்டுவோமாக!

## திருவிழாக்கள்

இவ்வாலயத்தில் நித்தம் இரண்டு கால பூஜை நிகழ்ந்து வருகின்றது. பிரதியாண்டும் சித்திரை மாதம் சித்திரை நட்சத்திரம் கூடிய முழுமதி நாளன்று ஸ்ரீ சித்திரகுப்த சுவாமிக்குக் காலையில் அஷ்ட ஐஸ்வரியக் கலச பூசையுடன் மகா அபிஷேக அலங்கார தீபாராதனைகள் நடைபெறும். மாலையில் திருக்கல்யாண விழாவும் இரவு உற்சவ மூர்த்திக்கு நான்கு மாடவீதி திருவுலாக் காட்சியும் மிகச் சிறப்பாக நடைபெறுகின்றன.

## இராமலிங்க சுவாமிகள்

சென்ற நூற்றாண்டில் அதாவது 5-10-1823- இல் திரு அவதாரம் செய்தவர் இராமலிங்க அடிகள். யாரும் உபதேசிக்காத அரிய உபதேசங்களைச் செய்தவர் அவர். மரணமிலாப் பெரு வாழ்வைப் பெற்ற அவருடைய திருவுருவச் சிலை 10-12-1972- இல் இவ்வாலயத்துள் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது. திருவருட் பிரகாச வள்ளலாரின் அருளைப் பெறுவதற்கும் இங்கு வசதி செய்ய பட்டுள்ளது. தைப்பூச விழாவும் அவருக்கு நடைபெறுகிறது. அன்னதானமும் அன்று செய்யப்படுகிறது.

# 7. கைலாச நாதர்

காஞ்சி மாநகரத்தின் மேற்புறத்தே கைலாச நாதர் கோயில் அமைந்திருக்கிறது. இத்திருக்கோயில் மிகவும் தொன்மையானது மணல் கற்களினால் அமைக்கப்பட்ட இத்திருக்கோயிலில் அமைந்திருக்கும் மூலஸ்தான சிவலிங்கம் 16 பட்டைகளையுடையது. இக்கோயிலில் நாரதர் பூஜித்த இலிங்கமும் அமைந்துள்ளது. இங்குள்ள கருவறையையும் முக மண்டபத்தையும் சுற்றியுள்ள திருச் சுற்றுகளிலும் வெளிச்சுவர் அறைகளிலும் பிட்சாடணர், கங்காதரர், திரிபுராந்தகர், சோமாஸ்கந்தர், திருமால், துர்க்கை முதலிய திருமேனிகள் அழகான சிற்ப வடிவங்களாகக் காட்சி அளிக்கின்றன. க்ஷீரசாகரமதனம், காலசம்காரமூர்த்தி தட்சிணாமூர்த்தி உருவங்கள், பராசக்தியின் பலவகை உருவங்கள் போன்ற சிற்பங்கள் கண்கொள்ளாக் காட்சியாக விளங்குகின்றன

கருவறைச் சுவர்களில் சிவதாண்டவக் காட்சிகள் வெகு அழகாகச் சித்தரிக்கப்பட்டுள்ளன. இக்கோயிலில் கருவறையைச் சுற்றி அமைந்துள்ள பிரதட்சண வழி சுரங்கம்போல் அமைக்கப்பட்டுள்ளது. அதனுள் நுழைந்து வெளிவருவது புனர்ஜென்மம் எடுத்து வந்ததுபோல் தோன்றுகிறது. இது சொர்க்கப் பிரதட்சணம் என்று சொல்லப்படுகிறது.

இங்குச் சிவராத்திரி விழா சிறப்பாகக் கொண்டாடப் படுகிறது. மக்கள் திரள் திரளாகக் கூடுகிறார்கள். இக்கோயில் இந்திய அரசாங்க தொல்பொருள் துறையின ரால் பாதுகாக்கப்படுகிறது. இந்து அறநிலைய ஆட்சித் துறையின் நிர்வாகத்தில் இருக்கிறது.

இக்கோயில் தோன்றிய விதத்தைப் பற்றிச் சிறிது பார்ப்போம். தொண்டை நாட்டை ஆண்ட மன்னருள் காடவர்கோன் என்ற பல்லவ மன்னன் சிறந்த சிவபக்தன். அல்லும் பகலும் அரனைத் துதித்து அறநெறி பேணிய அரசன் காடவர்கோன். கயிலை நாதனுக்குக் கவினுறும் கோயிலைக் காஞ்சியில் அமைக்க உளங் கொண்டான். தலைசிறந்த சிற்பிகளைத் தருவித்து கலை மணம் கமழும் கைலாச நாதர் திருக்கோயிலை நிர்மாணித்து கும்பாபிஷேகம் நடத்த நாளும் குறித்தான். காஞ்சி மாநகரம் கோலாகலமாய் இருந்தது. விடிந்தால் கைலாச் நாதர் கோவில் கும்பாபிஷேகம். அரசன் கனவில் இறைவன் தோன்றினார்.

''காடவ மன்னனே! திருநின்ற ஊரில் என் பக்தன் பூசலார் எழுப்பிய ஆலயத்துள் நாளை புகுவதாக நாம் எண்ணியுள்ளோம். ஆகவே உன் ஆலயத்துக்கான கும்பாபிஷேகத்தை இன்னொரு நாள் வைத்துக் கொள்'' என்று கூறி மறைந்தார்.

அரசன் திடுக்கிட்டு எழுந்தான். அவனுக்கு ஒன்றும் புரியவில்லை. கும்பாபிஷேகத்தைத் தள்ளி வைத்துவிட்டுக் குதிரை மீதேறித் திருநின்றவூர் நோக்கிப் புறப்பட்டான். பூசலார் நிர்மாணித்துள்ள ஆலயம் எங்குள்ளது என்று விசாரித்தான். ''பூசலார் ஆலயம் ஒன்றும் எழுப்ப வில்லையே!'', என்றனர். அரசனுக்கு ஆச்சரியமாக இருந்தது. ஏரிக்கரைக்கு விரைந்து சென்றான். கண்ணை மூடிக் கொண்டு பூசலார் அமர்ந்திருந்தார்.

''சுவாமி'' என்று அரசன் அழைத்தான். பூசலார் திடுக்கிட்டு எழுந்தார். ''சுவாமி! தாங்கள் எழுப்பியுள்ள சிவாலயம் எங்கிருக்கிறது?'' என்று வினவினான் பல்லவ மன்னன். பூசலார் திகைத்து நின்றார். இறைவன் கனவில் தோன்றி உரைத்ததை விவரித்தான் மன்னன். பூசலார் கண்ணீர் பொழிய உணர்ச்சி வசப்பட்டவராய்,

''மன்னவா, எம்பெருமானுக்கு ஆலயம் கட்ட எண்ணியது உண்மையே! என் எண்ணம் நிறைவேறவில்லை. எனவே மனத்திலேயே ஆலயம் எழுப்பினேன். கும்பாபிஷேகம் பற்றிய ஏற்பாடுகள் நடந்து கொண்டிருக்கின்றன!'' என்றார்.

அரசன் உடல் சிலிர்த்தது. ''கும்பாபிஷேகம் நடக்கட்டும். என் பொருட்டுத் தாமதப்பட வேண்டாம்'' என்றான். ''மன்னவா! அதை நீயும் கண்டு களிப்பா யாக'' என்று அவன் கையைப் பற்றித் தம் மார்பில் சேர்த்து அணைத்தார். அடியாரின் ஸ்பரிசம் மன்னனை மெய் மறக்கச் செய்தது.

அதோ வானளாவிய ஆலயம். எங்கும் மங்கள ஒலி பக்தர்களின் ஆரவாரம். வேத மந்திரங்களோடு அபிஷேகம் நடைபெறுவதைக் கண்டு மன்னன் உடல் பூரித்தான். அவருடைய பாதங்களில் விழுந்து வணங் கினான் அவருடைய ஆசி பெற்றுக் காஞ்சிக்குத் திரும்பினான்.

வேறொரு நல்ல நாளில் மன்னன் கைலாசநாதர் கோயிலுக்குக் கும்பாபிஷேகம் செய்து வழிபட்டான். சைவ சமய ஆச்சாரியர்களின் காலத்திற்குப் பிற்பட்டு 10-ஆம் நூற்றாண்டில் இக்கோயில் கட்டப்பட்டது. இது மணல் கற்களால் கட்டப்பட்டது. இது இப்போது ஒரு சுற்றுலா மையமாக விளங்குகிறது. மகாபலிபுரம் கற்கோயில்களும் அதே காலத்தில்தான் எழுந்தன என்று நினைக்க வேண்டியுள்ளது.

# 8. தசாவதார வழிபாடு

## தோற்றுவாய்

திருமால் பிருகு முனிவருடைய மனைவியைக் கொன்றார். அதனால் முனிவர் சினந்து கொடுஞ் செயல்கள் புரியும் பிறப்புக்கள் பத்து அடையுமாறு சாப மிட்டார். அதற்காகத் திருமால் வருந்திக் காஞ்சியை அடைந்து ஓர் இலிங்கம் அமைத்துப் பூசை செய்தார். இறைவன் வெளிப்பட்டபோது பிருகு முனிவரின் சாபத்தை மாற்றுமாறு திருமால் வேண்டினார். இறைவன் அடியவர் இட்ட சாபம் அனுபவித்தே தீர வேண்டும் எனவும், ஆனால் அப்பத்துப் பிறவிகளும் உலக உபகாரத் திற்கு உதவுவதாக எனவும் கூறியருளினார். இவ்வாறு அரியின் சாப பயத்தை நீக்கியருளிய தலம் அரிசாப பயந்தீர்த்த தானம் எனப் பெயர் பெற்றது. இத்தலம் பெரிய காஞ்சிபுரம் நெல்லுக்காரத் தெருவில் இரட்டை மண்டபத்திற்குத் தென்மேற்கில் தென்னண்டை வாடையில் உள்ளது.

இச்செய்தி காஞ்சிப்புராணம் அரிசாப பயந்தீர்த்த தானப்படலத்தில் உள்ளது. இதிலுள்ள பாடல்கள் 24.

அடியிற்கண்ட 10 தலங்களைப் பற்றியும் காஞ்சிப் புராணத்தில் தனித்தனி படலங்கள் உள்ளன. விரிவு அஞ்சி அவைகளின் சுருக்கம் கீழே தரப்படுகிறது.

### 1. மச்சேசம்

சோமுகாசுரன் என்பவன் வேதங்களைக் கவர்ந்து கொண்டு கடலில் மறைந்தபோது அவற்றை மீட்க மச்ச

வடிவங்கொண்ட திருமால் வழிபட்ட தலம் கீழண்டை ராஜவீதியில் உள்ளது. நன்கு பராமரிக்கப்பட்டு வருகிறது. இப்போது திருமண மண்டபம் ஒன்று அமைக்கப்பட்டுள்ளது. அதன் வருவாய் கோயிலுக்கு உதவுகிறது.

## 2. கச்சபேசம்

தேவர்கள் திருப்பாற்கடலைக் கடைந்தபோது மந்திர மலையை ஆமையாகத் (கச்சபமாக) தாங்கிய திருமால் வழிபட்ட தலம் ஆகும் இது. காஞ்சிபுரத்தின் தொன்மை யான கோயில் இது. சூத முனிவர் நைமிசாரண்ய முனிவர்களுக்கு இங்கிருந்து புராணங்களை உபதேசித்தார் என்பர். இது பிள்ளையார் பாளையம் செங்குந்த முதலியார்களின் ஆதீனத்தில் உள்ளது. மார்கழி மாதத்தில் நடைபெறும் பிரம்மோத்சவத்தின் போது பொம்மலாட்டம் நடைபெறும்.

இக்கோயில் மேலண்டை ராஜவீதியும் நெல்லுக்காரத் தெருவும் சந்திக்கும் இடத்தில் உள்ளது. இராஜ கோபுரம் வடக்கு நோக்கியிருக்கிறது.

சிறப்பு நிகழ்ச்சிகள் இரண்டை இங்கே குறிப்பிட வேண்டியுள்ளது. கோயிலின் உட்பகுதி விசாலமானது. இட்ட சித்த தீர்த்தமும் கோயிலின் உள்ளேயே இருக்கிறது. இந்த வசதிகளை வைத்துக் கொண்டு அடியிற் கண்ட இரண்டு சிறப்பு நிகழ்ச்சிகளும் நடைபெற்றன.

### 1) கும்பாபிஷேகம்

1-2-1979 தேதியில் காலை 7 மணிக்கு ஏகாம்பரநாதர் கோயில் கும்பாபிஷேகமும், காலை 10 மணிக்கு காமாட்சியம்மன் கோயில் கும்பாபிஷேகமும் நடைபெற்றன. இவைகளைக் காண்பதற்காக நாட்டின் பல பாகங்களில் இருந்தும் பெருந்திரளான மக்கள் வந்து கூடினர். இறைவனையும் இறைவியையும் தரிசித்து மகிழ்ந்தனர்.

*31-1-79, 1-2-79* ஆகிய இரண்டு நாட்களிலும் ஓர் அதிசயம் நடைபெற்றது. பெங்களூர் தொழிலதிபர் உயர்திரு இராமச்சந்திர சா என்னும் கொடைவள்ளல் கும்பாபிஷேகங்களுக்கு வந்திருந்த சுமார் ஒரு லட்சம் பேருக்கும் இக்கோயிலில் இலை போட்டு அறுசுவையோடு அன்னமிட்டார்.

## 2) நூற்றெட்டுத் திருமணங்கள்

*1979*-இல் அன்னதானம் செய்த அதே பெருவள்ளல் *15-1-1984*-இல் மற்றோர் அருஞ்செயலைச் செய்து முடித்தார். ஏழை எளிய மக்களுக்கு இலவசமாய் திருமணம் செய்து வைக்க வேண்டுமென்று எண்ணங் கொண்டார். இதுபற்றி தேவையானவர்கள் மனு செய்து கொள்ளலாம் என்று செய்தித் தாள்களில் விளம்பரஞ் செய்தார். மனு பாரங்கள் அச்சடிக்கப்பட்டன. மணமகன் மணமகள் புகைப்படங்களுடன் அவர்களுடைய கையெழுத்துக்களும் பெற்றோர்களின் கையெழுத்துக்களும் மனுவில் எழுதி வாங்கப்பட்டன. கச்சீஸ்வரர் கோயில் புதுப்பிக்கப் பட்டது. திருமணங்களை அங்கு நடத்தவும் அமர்ந்து உண்ணவும் பந்தல்கள் போடப்பட்டன.

திருமணத்தை நடத்தி வைக்கப் புரோகிதர்களும் சமையல்காரர்களும் வந்து சேர்ந்தனர். சமையல் பாத்திரங்கள், அரிசி, பருப்பு, காய்கறிகள் ஆகியவை மலைபோலக் குவிந்தன. *14-1-1984* இரவு உணவு, *15-1-1984* காலை சிற்றுண்டி, பகல் உணவு ஆகியவை களுக்குத் திட்டம் இடப்பட்டன.

ஒவ்வொரு மணமகனுக்கும் வேஷ்டி, அங்க வஸ்திரம், மணமக்களுக்குக் கூறைப்புடவை, ஜாகிட், திருமாங்கல்யம், மலர்மாலைகள் முதலியவை *108* செட்டுகள் சித்தம் செய்யப்பட்டன.

மேள தாளங்கள் ஒலி செய்தன. ஒரு அணிக்கு 25 திருமணங்கள் வீதம் 4 அணிகள் ஒன்றன்பின் ஒன்றாக நடத்த முறைப்படுத்தப்பட்டன. வேத விதிப்படி தீ வளர்த்து திருமாங்கல்ய தாரணம் செய்வித்தனர். இது ஓர் அதிசய நிகழ்ச்சியல்லவா? திட்டமிட்டது 108 திருமணங்கள். பின்னால் சேர்க்க நேர்ந்தவை 5. ஆக 113 திருமணங்கள் நடைபெற்றன வந்திருந்தோர் அனைவருக்கும் மணவிருந்து அளிக்கப்பட்டது. சங்கராச்சாரிய சுவாமிகளும் கொடைவள்ளல் இராமச்சந்திர சா அவர்களும் கண்டு மகிழ்ந்தனர்.

### 3. நாரசிங்கேசம்

இரணியனை அழிக்க எண்ணித் திருமால் நரசிம்ம அவதாரம் கொண்டபோது சிவலிங்கம் நிறுவி வழிபட்ட தலம் இது. இத்தலம் காஞ்சியின் மேற்கே 7 கல் தொலைவில் தாமல் என்னும் இடத்தில் உள்ளது. இவ்வூர் முன்பு காஞ்சி எல்லைக்கு உட்பட்டிருந்தது.

### 4. வராகேச்சுரம்

இரணியன் தம்பி இரண்யாட்சன் பூமியைப் பாயாகச் சுருட்டிக் கொண்டு பாதலத்தில் ஒளிந்தபோது வராக வடிவம் கொண்டு பூமியை மீட்ட திருமால் வழிபட்ட தலமாகும் இது. இது நாரசிங்கேசத்தின் அருகில் உள்ளது.

### 5. அபிராமேசம்

திருமால் பிரமசரிய கோலத்தில் வாமனனாக வந்து வழிபட்ட தலம் வாமனேசம். இது அபிராமேசம் எனவும் வழங்கப்படுகிறது. இது இரட்டை மண்டபத்துக்கு வடக்கில் சங்குபாணி விநாயகர் ஆலயத்துக்கு மேற்கில் உள்ளது.

### 6. இராமநாதேச்சரம்

திருமால் தசரத குமாரன் இராமனாகத் தோன்றி இராவணனைக் கொன்ற பாவம் தீர சேதுவில் பூசை

செய்தபின் காஞ்சியை அடைந்து இராமநாதரை இருத்தி வழிபட்ட தலம் இது. இத்தலம் சாலைத் தெருவும் ஏகாம்பரநாதர் சந்நிதித் தெருவும் சந்திக்கும் இடத்தில் உள்ளது.

### 7. பரசிராமேச்சரம்

கார்த்தவீரியன் என்னும் அரசனைக் கொல்ல பரசுராமன் இறைவனை வேண்டித் தன் பெயரால் இலிங்கம் அமைத்து வழிபட்ட தலமாகும் இது. இத்தலம் திருமால்பூர் புகைவண்டி நிலையத்துக்கு மேற்கில் பள்ளூரில் உள்ளது. முன்பு காஞ்சியின் எல்லை இதுவரை இருந்தது.

### 8. கண்ணேசம்

கருநிறம் கொண்ட கண்ணன் தன்பெயரால் இலிங்கம் நிறுவி வழிபட்ட தலமாகும் இது. இத்தலம் வடக்கு ராஜ வீதியில் உள்ளது. இது தற்போது மொட்டைக் கோபுரம் என வழங்கப்படுகிறது.

### 9. பலபத்திர ராமேசம்

கண்ணன் தமையனாகிய பலராமன் தீர்த்த யாத்திரை மேற்கொண்டு காஞ்சியை அடைந்து தன் பெயரால் இலிங்கம் நிறுவி வழிபட்ட தலமாகும் இது. இத்தலம் பிள்ளையார் பாளையம் கிருஷ்ணராயர் தெரு வட கோடியில் ஐயனார் கோயிலின் அருகில் வயல் வெளியில் இலிங்க மாத்திரமாய் உள்ளது.

### 10. கற்கீசம்

யுக முடிவில் கற்கி அவதாரம் செய்த திருமால் பூசித்து வேண்டிய வரங்களைப் பெற்ற தலமாகும் இது. இத்தலம் மேற்குறித்த பலபத்திர ராமேசத்துக்கு அருகில் வயல் வெளியில் உள்ளது

# 9. தீர்த்தமும் தலமும்

வாரத்தின் ஏழு நாட்களிலும் நீராடி வழிபடுவதற் குரிய தீர்த்தங்களும் திருக்கோயில்களும், தனித்தனியாக அமைந்துள்ளன. இது இந்நகரின் தனிச் சிறப்பாகும்.

**ஞாயிறு — இட்டசித்தி தீர்த்தம்**

எண்ணியவர்கள் எண்ணியவாறு பயனளிக்கக் கூடிய இட்ட சித்தி தீர்த்தம் ஞாயிற்றுக்கிழமையில் முழுகுவதற் குரியது. இத்தீர்த்தத்தில் முழுகினால் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் உறுதிப் பொருள்கள் நான்கையும் பெறலாம். இத்தீர்த்தம் கச்சபேஸ்வரர் கோயிலில் இருக் கிறது. கார்த்திகை மாதம் ஐந்து ஞாயிற்றுக்கிழமை களிலும் மண்டை விளக்கு எடுத்தல் என்னும் வழிபாடு பிரசித்தமானது.

**திங்கள் — சிவகங்கை தீர்த்தம்**

திருவேகம்பர் திருக்கோயிலின் உள்ளே வடபுறம் இத்தீர்த்தம் அமைந்துள்ளது. இத்தீர்த்தத்தில் மூழ்குவோர் உலகில் உள்ள எல்லாத் தீர்த்தங்களிலும் மூழ்கிய பயனை அடைவர் என்று காஞ்சிபுராணம் கூறுகிறது. இவ்வாறு ஒவ்வொரு தீர்த்தத்தைப் பற்றியும் இப்புராணம் விவரிக் கிறது. பிரம்மோத்சவத்தின் போது இத்தீர்த்தத்தில் தெப்பல் உத்சவம் நடைபெறுவதுண்டு. திங்கட்கிழமை இத்தீர்த்தத்தில் மூழ்கி ஏகாம்பரநாதரை வழிபடுவோர் பேறு பெறுவர்.

**செவ்வாய் — மங்கள தீர்த்தம்**

மங்களை என்னும் இறைவியின் தோழி யொருத்தி மண்டபம் ஒன்று நிறுவி, அதில் மங்களேசரைத் தாபித்து, மங்கள தீர்த்தம் என்னும் தீர்த்தத்தை ஏற்படுத்தி இறைவரைப் பூசித்தனள். செவ்வாய்க் கிழமையில் இத் தீர்த்தத்தில் மூழ்கி மங்களேசரை வணங்கினோர் இருமைப் பேறும் பெறுவர். இது கங்கை கொண்டான் மண்டபம் ஆஞ்சனேயர் கோயிலுக்குப் பின்புறம் பாழ்பட்ட நிலையில் இருந்தது. இப்போது சங்கராச்சாரிய சுவாமிகள் பெருமுயற்சி செய்து அரசாங்கத்தின் உதவியால் இத் தீர்த்தத்தைப் புதுப்பித்துள்ளார். படிகள் செப்பஞ் செய்யப்பட்டு, சுற்றுச்சுவர் எழுப்பப்பட்டுள்ளது. சுத்த மான நீரைப் பெறுவதற்குக் குழாய்க் கிணறும் அமைத்து உள்ளார்.

**புதன் — இந்திர தீர்த்தம்**

சத்திய நாதர் எழுந்தருளியுள்ள திருக்கோயிலின் மேற்கில் உள்ளது இத்தீர்த்தம். இதில் புதன் கிழமையில் மூழ்கி சத்திய நாதரை வழிபடுவோர் இருவினை நீங்கப் பெறுவர். மேலும் அத்தீர்த்தம் விரும்பிய பொருள்கள் அனைத்தையும் கொடுக்கும். இது சத்திய தீர்த்தம் எனவும் பெயர் பெறும். இத்தலமும் தீர்த்தமும் தற்போது திருக்காலிமேடு என வழங்கும் பகுதியில் உள்ளது. திருநெறிக் காரைக்காடு என்னும் பாடல் பெற்ற ஸ்தல மாகும் இது.

ஜன நெருக்கம் காரணமாக இக்குளக்கரையைச் சுற்றி வீடுகளை கட்டியுள்ளனர். நீர் அசுத்தமாகி, படிக்கட்டுகள் சிதைந்து இக்குளம் பாழடைந்து வருகிறது. கோயில் நிர்வாகஸ்தர்கள் கவனித்து ஆவன செய்ய வேண்டும்.

**வியாழன் — காயாரோகண தீர்த்தம்**

வேகவதி நதிக்குத் தெற்கில் இத்தீர்த்தம் உள்ளது. வியாழக்கிழமையில் மூழ்கி காயாரோகணப் பெருமானை

வணங்கியவர்கள் விரும்பிய பயன்களையும், முத்தியையும் பெறுவர். இத்தீர்த்தம் இப்போது தாயார் குளம் என வழங்கப்படுகிறது. காயாரோகணர் கோயிலில் குரு பகவானும் எழுந்தருளியிருக்கிறார். அதனால் இதற்குக் குருவார தீர்த்தம் என்றும் பெயர் உண்டு. இது ஐங்கோண வடிவில் அமைந்துள்ளது. நீத்தார் வழிபாடுகள் இக்குளக்கரையில் நடைபெறுகின்றன.

**வெள்ளி — உலகாணித் தீர்த்தம்**

இத்தீர்த்தம் வெள்ளிக் கிழமையில் மூழ்குவதற்குரியது. இது காமாட்சியம்மன் கோயிலில் உள்ளது. இதில் நீராடி இறைவியை வழிபடுவோர் தமது விருப்பங்களைத் தடையின்றிப் பெறுவர். பிருதிவி முதலிய பஞ்ச பூதங்கள் பெயரால் உண்டாக்கினமையின் இது பஞ்ச தீர்த்தம் எனவும் வழங்கப் பெறுகிறது. படிக்கட்டுகளும் சுற்றுச் சுவரும் நல்ல நிலையில் உள்ளன. தீர்த்தம் நன்கு பராமரிக்கப்பட்டு வருகிறது.

**சனி — சருவ தீர்த்தம்**

உலகத்தில் உள்ள எல்லாத் தீர்த்தங்களும் திரண்டு நதியுருக் கொண்டு வந்து, வேகந்தணிந்து தங்கியது இத்தீர்த்தம். இதில் சனிக்கிழமையில் நீராடி அத்தீர்த்தக் கரையில் உள்ள கோயில்கள வழிபடுவோர் கொலை முதலிய பாவங்களினின்றும் நீங்குவர். இத்தீர்த்தம் காஞ்சியின் சிறந்த தீர்த்தமாகும். பெரியதுங்கூட. குளத்தின் மத்தியில் நீராழி மண்டபம் உள்ளது. வைகாசி மாதத்தில் ஏகாம்பர நாதரின் தெப்ப உத்சவம் இதில் நடைபெறுகிறது. இக்குளக்கரையில் நீத்தார் வழிபாடு களைச் செய்கின்றனர்.

குறிப்பு :— மேற்கண்ட ஏழு தீர்த்தங்களைப் பற்றியும் காஞ்சிப் புராணத்தில் தனித்தனி படலங்கள் உள்ளன. வாசகர்கள் படித்து மகிழ்வார்களாக. இவைகளைத் தவிர இவ்வூர் வைணவக் கோயில்களிலும் புண்ணிய தீர்த்தங்கள் உள்ளன.

# சங்கரமடம்

## ஆதிசங்கரர்

காஞ்சிக்கு இருக்கும் சிறப்புக்களுடன் சங்கரமடம் வேறொரு வகையிலும் அதற்குப் பெருமை தேடித் தருகிறது, காலடியில் அவதரித்து, கன்யாகுமரி முதல் கயிலை வரை யாத்திரை சென்று, பல வகையான துர்மதங்களைக் கண்டனம் செய்து, சனாதனமான வைதிக தர்மத்தை நாடெங்கும் நிலைநாட்டிய ஆதிசங்கரர், வைதிக மதம் தழைத்து ஓங்க நான்கு திக்குகளிலும் நான்கு மடங்களை ஸ்தாபனம் செய்து, மத்திய ஸ்தானமாகக் காஞ்சியில் சர்வக்ஞ பீடாரோகணம் செய்து, ஸ்ரீ காமகோடி பீடத்தின் அதிபர்களாக விளங்கி, காமாட்சி அம்பிகையின் சன்னதியில் ஸ்ரீசக்கர பிரதிஷ்டை செய்து, முக்தியடைந்த ஸ்தலமும் இதுவே.

திருஞான சம்பந்தருக்குப் பின்னர் சமயப் பிரசாரம் செய்வதில் சலியாது உழைத்தவர் சங்கரர் பெருமான். இவர்கள் வாழ்ந்திருந்த காலம் கி. பி. 788-820 என வரலாற்று அறிஞர்கள் ஆராய்ந்து வரையறுத்துள்ளனர். சௌந்தர்ய லகரியில் ஸ்ரீ சங்கரர் ஞானசம்பந்தரைக் குறிப்பிட்டுப் புகழ்ந்து போற்றியிருக்கிறார்கள்.

(எழுசீர் ஆசிரிய வருத்தம்)

74. தருண மங்கலை உனது சிந்தை
தழைந்த பால்அமு தூறினால்
அருண கொங்கை யில்அது பெருங்கவி
அலைநெ டுங்கடல் ஆகுமோ
வருணம் நன்குறு கவுணி யன்சிறு
மதலை அம்பியல் பருகியே
பொருள்ந யம்பெறு கவிதை யென்றொரு
புனித மாரி பொழிந்ததே.

—சௌந்தரிய லகரி தமிழாக்கம்.

பாரத தேசத்தின் தென்கோடியில் காலடியில் தோன்றிய சங்கரர் அதன் வடகோடியில் உள்ள காஷ்மீரம் வரையில் தம் கால் தரை தோய நடந்து சென்றே இந்து சமயப் பிரசாரம் செய்து அருளினார்கள். சங்கரர் ஒரு பெரும் அறிஞர், கவிஞர், அருளாளர், தத்துவஞானி, சித்த புருஷர், சீர்திருத்தக்காரர் என்னும் பல்வேறு நிலைகளில் சிறந்து விளங்கிப் பெரும் பணியாற்றினார்கள்.

பிரம சூத்திரம், உபநிடதம், பகவத் கீதை, விஷ்ணு சகஸ்ரநாமம் முதலியவற்றிற்குப் பேருரைகள் இயற்றினார்கள். ஆனந்த லகரி, சௌந்தர்ய லகரி, தட்சணாமூர்த்தி தோத்திரம், சுப்பிரமணிய புஜங்கம், ஆத்மபோதம், பஜகோவிந்தம் முதலிய பல துதி நூல்களை அருளிச் செய்தார்கள். பௌத்தம், காபாலிகம், சாக்தம் முதலிய சமயங்களின் மாசுகளை யெல்லாம் போக்கியருளினார்கள்

சைவம், வைணவம், சாக்தம், காணாபத்தியம், கௌமாரம், சௌரம் என்னும் அறுவகைச் சமயங்களையும் நிலைப்படுத்தினார்கள். 'ஷண்மத ஸ்தாபனா

சாரியார்' என்னும் சிறப்புப் பெற்றார். நமது இந்து சமயத்திற்குச் சங்கரர் ஆற்றிய தொண்டுகள் அளப் பரியன. மிகப் பெரிதும் போற்றற்பாலன. சங்கரமடம் பெரிய காஞ்சிபுரத்தில் கங்கை கொண்டான் மண்டபத் திற்கு எதிரில் இருக்கிறது. நிறைந்த செல்வமும் செல்வாக்கும் உடையது.

## சௌந்தர்ய லகரி

அருள் வடிவினளும் ,உலக உயிர்த்திரள்களுக்கெல்லாம் ஒரு பெருந் தாயாக விளங்கி, அருள் புரிந்து பாதுகாத்து வருபவளுமாகிய அம்பிகையைப் பற்றித் தமிழில் உள்ள துதி நூல்கள் பல. அவற்றுள் ஆதிசங்கர பகவத் பாதாள் அவர்களரல் வடமொழியில் அருளிச் செய்யப் பெற்றுத் தமிழில் அழகுற மொழி பெயர்க்கப்பட்டுள்ள சௌந்தர்ய லகரி என்னும் துதி நூலும் ஒன்றாகும்.

வடமொழியில் ஆதிசங்கர பகவத் பாதாள் அருளிச் செய்துள்ள சௌந்தர்ய லகரி நூல் மிகவும் புகழோங்கிய சிறந்த பெருந்துதி நூலாகும். இந்திய நாட்டின் பல பகுதி களிலும் பல்வேறு காலங்களிலும் வாழ்ந்திருந்த பெருஞ் சான்றோர்கள் பலர் அதற்கு உரை எழுதி உள்ளார்கள்.

சிறந்த கவிதை நூலாகிய இது சாக்த ஆகமங்கள், தந்திரங்கள் ஆகியவற்றின் அரும்பெரும் பொருள்களை யெல்லாம் விளக்குகின்ற சாரமாகத் திகழ்கின்றது. அம்பிகையின் திருவுருவச் சிறப்பினையும், அருள் நலங் களையும் வியந்து புகழ்ந்து போற்றுகின்றது. அம்பிகையைப் போற்றி வழிபடுவதற்குரிய மந்திரங்க்ள் சக்கரங்கள் முதலியவற்றை விளக்குகின்றது.

## பஜகோவிந்தம்

சங்கரர் அருளிச் செய்த மற்றொரு தெய்வீக நூல் பஜகோவிந்தம் என்பது, வயதான அந்தணர் ஒருவர்

கல்வியில் உள்ள ஆர்வத்தினால் வடமொழி இலக்கணம் பயிலத் தொடங்கினார். 'டுக்ருஞ்கரனே' என்ற வினைப் பகுதி சூத்திரத்தை மனப்பாடஞ் செய்து கொண்டிருந்தார். அது நன்னூல் வினைப்பகுதி சூத்திரமாகிய நட, வா, மடி, சீ' என்பதைப் போன்றது. ஆதிசங்கரர், அந்த அந்தணர் இலக்கண சூத்திரத்தை மனப் பாடம் செய்யக் கஷ்டப்படுவதைப் பார்த்து, கருணை கொண்டு, அந்த அந்தணரைக் காரணமாக வைத்து ஆசைக் கடலில் அகப்பட்டுத் தவிக்கும் நம் போன்ற மனிதர்களுக்கு உபதேசித்ததே பஜகோவிந்தமாகும்.

ஸ்ரீ பகவத் பாதர் அவர்களால் இயற்றப்பெற்ற கிரந்தங்கள் அளவில் அடங்காதவை. அவற்றுள் 'பண்டிதர்கள் முதல் பாமரர்கள் வரை ரசிப்பதும் மிகச் சிறந்த வேதாந்த நூலுமாக விளங்குவது பஜகோவிந்தம்.

'கோவிந்தா' என்று ஒரு தரம் உச்சரித்த மாத்திரத்தில் மனிதர்கள் பலநூறு பிறவிகளில் செய்து குவித்த பாபங்கள் தீயில் அகப்பட்ட பஞ்சு போல க்ஷண் நேரத்தில் முற்றும் நாசமாகி விடுகின்றன. நாம சங்கீர்த்தனம் செய்யும் போது தத்துவார்த்த ஞானத்தோடு கோவிந்த நாம பஜனை செய்வதற்காகவே ஸ்ரீமத் பகவத் பாதாள் 'பஜ கோவிந்தம்' என்னும் உயர்ந்த நூலை இயற்றி, அரிய உண்மைகளை எளிய சொற்களில் விளக்கியுள்ளார்கள்.

## காஞ்சிப் பெரியவாள்

தற்போது அருளாட்சி செய்யும் ஜகத்குரு சங்கராச்சாரிய சுவாமிகள் ஸ்ரீமத் சந்திர சேகரேந்திர சரஸ்வதி சுவாமிகள் ஆவார்கள். அவர்கள் 5-5-1894-இல் அவதரித்தார்கள். அவர்களுக்கு இப்போது 96 வயது ஆகிறது. உலகமெல்லாம் போற்றும் ஞான பானுவாகிய அம்மகானுடைய உபதேச மொழிகள் பொன்னே போல் போற்றத் தக்கவை. அவர்கள் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி

களும் ஸ்ரீசங்கர பகவத் பாதாள் அவர்களுடைய பரம்பரையில் தவச்செங்கோல் செலுத்தும் அருளாளரும் ஆவார்கள். வேதமும் ஆகமமும் தமிழும் வடமொழியும், சாஸ்திரமும் தோத்திரமும் வளர்ந்தோங்க வேண்டுமென்று திருவுளங் கொண்டார்கள். இவர்கள் 68-ஆவது ஆச்சாரியாள். எந்நாட்டினரும் எமமதத்தினரும் போற்றும் புகழாளர். ஞானச் செல்வர். முன்பு நாட்டின் பல பாகங்களுக்கும் சென்று செங்கோல் செலுத்தி வந்தார். இப்போது வயது முதிர்ந்த நிலையில் வெளியில் எங்கும் செல்லாமல் மடத்தில் இருந்தபடியே காட்சி அளித்து வருகிறார். அவருடைய பொன் மொழிகள் கீழே தரப்பட்டுள்ளன.

ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகளுக்கு உதவியாக இருந்து சங்கர மடத்தின் எல்லாப் பொறுப்புக்களையும் ஏற்று அருளாட்சி செய்பவர் ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள் ஆவார்கள். இவர் 69 ஆவது ஆச்சாரியார். இவர் ஜனக்கல்யாண், ஜனஜாக்ரண் என இரண்டு ஸ்தாபனங்களை ஆரம்பித்து நடத்தி வருகிறார். இவர் இமயம் முதல் குமரிவரை கால்நடையாகவே சென்று வருகிறார்கள். இவரது அருளாசியினால் இந்து மத மாநாடுகளும் சமயப் பேரவைகளும் சிறப்பாக நடைபெறுகின்றன. இவரது சேவையினால் ஸ்ரீ சங்கரமடம் சிறந்து விளங்குகிறது. இவரது அரிய முயற்சியினால் தான் 1979-இல் ஸ்ரீ காமாட்சியம்மன் கோவில் பொன் கூரை வேயப்பட்டு கும்பாபிஷேகமும் நடைபெற்றது.

இவருக்கு அடுத்தபடியாக ஸ்ரீ ஆனந்தேந்திர சரஸ்வதி சுவாமிகள் 70-ஆவது பட்டமாக வந்திருக்கிறார். இப்போது மடத்தில் மூன்று சுவாமிகளும் இருந்து அருளாட்சி செய்கிறார்கள்.

## பொன்விழா

ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகளுக்கு 11-8-1984இல் ஐம்பதாம் ஆண்டு நிறைவுற்றது. பக்தர்கள் அவருக்குப்

பொன்விழா நடத்தினார்கள். அப்போது தினமணி விடுத்த செய்தி வருமாறு:—

ஸ்ரீ காஞ்சி காமகோடி ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகளின் பொன்விழா ஞாயிற்றுக் கிழமை யன்று கொண்டாடப்படுகிறது. அதனையொட்டி சுவாமிகள் அருளிய ஆசியுரை விவரம் தரப்படுகிறது.

ஒவ்வொரு மனிதனும் தாம் பிறந்த இந்த பாரத புண்ணிய பூமியில் உள்ள கங்கை முதலிய புண்ணிய தீர்த்தங்களுக்குச் சென்று நீராடியும், ஹிமாலயம் போன்ற புனிதமான மலைக்கும், காசி, கயா போன்ற பவித்திரமான புண்ணிய க்ஷேத்திரங்களுக்கும் சென்று தரிசித்தும் வரவேண்டும்.

ஒவ்வொரு நாளும் ஒவ்வொருவரும் சிறிது நேர மாவது அரசியல், உலகியல் இவைகளை மறந்து, இவ்வுலகத்தில் நடைபெறும் எல்லா செயல்களுக்கும் காரணமாக உள்ள ஆண்டவனைத் துதிக்க வேண்டும்.

ஒவ்வொரு நாளும் என்றோ ஒருநாள் அழியக் கூடிய இந்த உடல் வளர்ச்சிக்கு உணவு உட்கொள்வது போல, மற்றொரு ஏதாவது ஓர் உயிரினத்துக்கும் உணவு அளிக்க வேண்டும்.

உலகிலுள்ள ஒவ்வொரு பொருளும் இறைவனால் படைக்கப்பட்டதாலும், ஓர் உயிருக்கும் இம்சை செய்யக் கூடாது என்றதாலும், நம்மால் தாயாகப் போற்றப்படும் கோமாதாவை (பசுவை) இம்சிக்கக் கூடாது. நம் தாய் தந்தையர்களை ஆயுள் உள்ளவரை காப்பாற்றுவது போல கோமாதாவை ஆயுள் உள்ளவரைக் காப்பாற்ற வேண்டும்.

ஆண்டவனை வழிபடுவது எவ்வளவு முக்கியமோ அதற்கும் மேலானதாகக் கருதி நல்லொழுக்கங்களைக் கடைப்பிடிக்க வேண்டும்.

—தகவல் தினமணி (12-8-84)

## பொன்விழா வாழ்த்து மலர்

**சந்திரசே கரேந்திரர்க்குப்**
**பின்னானாய் வாழியே!**
**சங்கரானந் தேந்திரர்க்கு**
**முன்னானாய் வாழியே!**
**பொன்விழாக் காணுகின்ற**
**புனிதன்நீ வாழியே!**
**பொற்புடன்நின் னடிசார்ந்தார்**
**பூதலத்தில் வாழியே!**
**நின்னாமம் தனையுரைப்பார்**
**எந்நாளும் வாழியே!**
**நிகரில்லா நிதிபலவும்**
**பெற்றுயர்வார் வாழியே**
**தென்னாடு கண்டெடுத்த**
**தெய்வமணி வாழியே!**
**ஜகத்குருவே! ஜயேந்திரரே!**
**ஜகம்புகழ வாழியே!**

— இந்து சமய மன்றம் காஞ்சிபுரம்.

## இந்து சமய மன்றம்

இம்மன்றம் தைமாதம் பொங்கலின்போது ஆண்டு விழாவை நடத்துகிறது. கவிஞர்கள் அப்போது பாராட்டப்படுகிறார்கள். அம்மன்றத்தின் செயலாளர் புலவர் கவிஞர் வெங்கடேசன் M. A. அவர்கள் இப்பணியைத் தொடர்ந்து திறம்பட நடத்தி வருகிறார். ஆண்டு தோறும் சமய நூல் ஒன்றையும் வெளியிட்டு வருகிறார்

முதல்பகுதி : பரமார்த்திகம்

## காஞ்சிப் பெரியவாளின் உபதேச மொழிகள்

ஸ்ரீ சந்திர சேகரானந்த சரஸ்வதி சுவாமிகள் அவ்வப்போது நிகழ்த்திய உபதேச மொழிகள் தொகுக்கப் பட்டு நூல் வடிவாக வந்துள்ளன. அவற்றுள் சிலவற்றைக் கீழே தருகின்றோம். வாசகர்கள் படித்துப் பயன் பெறுவார்களாக.

## 1. பண்பாட்டைக் காப்போம்

நம் நாட்டிலுள்ள கோவில்களைப் போல உலகத்தில் வேறு எங்கேயாவது பார்க்க முடியுமா? உலகத்திலுள்ள ஆராதனை ஸ்தலங்களைக் கணக்கெடுத்துப் பார்த்தால், இந்தியாவில் மட்டும் சரி பாதிக்கு மேல் இருக்கும். இந்தியாவிலே கூடத் திராவிடத்தில்தான் கோவில்கள் அதிகம். ஆத்மீக, வேதாந்த விசாரணை பற்றிய இலக்கியங்களும் இந்தியாவில்தான் அதிகம். இதில்கூட இந்தியாவின் மற்றப் பகுதிகளைவிடத் திராவிடம்தான் முன்னிலையில் நிற்கிறது. வேத காலத்திய மதமும், தர்மமும், பக்தியும், காவேரி, தாமிரபரணி நதிகளின் கரைகளில்தான் நன்கு பேணி வளர்க்கப்பட்டு வருகிற தென்று சொல்லுவார்கள். தர்ம சிந்தனையுள்ள பிரபுக்கள் தமது பக்திப் பெருக்கீட்டின் காரணமாக, கோவில்களைக் கட்டி, நிறைய சொத்துக்களையும் எழுதி வைத்தார்கள். இப்போது கூடப் பல கோவில்களில் ஒரு அணா கொடுத்தால் வயிறு நிறையக்கூடிய அளவுக்குப் பிரசாதம் கிடைக்கும். (குறிப்பு : இது 1930-இல் இருந்த நிலை) சாப்பிடாதவர்கள் யாருமில்லை என்று பார்த்துத் தெரிந்து கொண்ட பிறகுதான் செங்குன்றத்திலுள்ள (கேரளா) அர்ண பூர்ணேச்வரி கோவிலைத் தினமும் மூடுவார்கள். சமைத்த சாதத்தை ஒரு மரக்கிளையில் கட்டி வைப்பதாகவும், இரவில் திருடர்கள் கூடப் பட்டினி

யாகப் போகக் கூடாதென்பதற்காகவே இப்படிச் செய்யப் படுகிறதென்றும் ஐதீகம்.

வேறு எந்தப் பிரதேச பாஷையிலும் இருப்பதைவிடத் தமிழில்தான் அதிக தோத்திரப் பாடல்கள் இருக்கின்றன என்பதும் குறிப்பிடத்தக்கது. ஆனால், நம்முடைய பெரியவர்கள் எழுதியவைகளை விட மில்டனையும், ஷேக்ஸ்பியரையும் படித்தவர்கள் அதிகமாயிருப்பது நமது துர் அதிர்ஷ்டமே. இன்று மகாத்மா காந்தியின் பெயரும், நேருவின் பெயரும் உலகம் பூராவிலும் தெரிந்திருக் கின்றன. உயிர்த் துடிப்புள்ள ஒரு செழுமையான பண்பாட்டின் வழிவந்தவர்கள் அவர்கள். இந்த அரும் செல்வத்தைப் பெற்றுள்ள நாம் அதை என்றென்றைக்கும் காப்பாற்றி வைப்பதற்கான நடவடிக்கைகள் எடுத்துக் கொள்வதை ஒரு கடமையாகக் கருத வேண்டும்.

## 2. தர்ம சொரூபி ராமன்

வேதத்தில் சொல்லும் பரம புருஷன்தான் ராமனாக அவதரித்தான். வேதம் தர்மத்தைச் சொல்லுகிறது. பரம புருஷன் ராமனாக அவதரித்த போது வேதம் ராமாயண மாக அவதரித்தது. எவை உயர்ந்த நூல்களாகக் கருது கிறோமோ அவையெல்லாம் வேதத்தைத் தான் உயர்ந்தது எனக் கூறுகின்றன. வேதம் தான் ராமாயணம். பாரதம் ஐந்தாவது வேதம். ‘வேதம் தமிழ் செய்த மாறன் சடகோபன்’ என்று திவ்வியப் பிரபந்தங்களுக்கு ஏற்றமும் வேதத்தைக் கொண்டு சொல்லப்படுகிறது.

ராமன் தர்ம சொரூபி என்பது பல இடங்களில் எடுத்துக் காட்டப்படுகிறது. ராமன் காட்டுக்குப் போகி றான். தாய் கௌசல்யை அவனுக்கு அப்போது என்ன கொடுத்தனுப்பினாள்? பதினான்கு வருஷங்களுக்கு வேண்டிய அரிசி மூட்டைகளைத் தலையில் கட்டி அனுப்ப முடியுமா? மனசார ஆசி கூறி அதையே ரட்சையாகக் கூட

அனுப்புகிறாள் உறுதியுடன் நியமத்துடன் எந்த தர்மத்தை ராகவன் பாதுகாத்து வருகிறானோ அந்த தர்மமே அவனை ரட்சிக்க வேண்டுமென்று சொல்லி அனுப்புகிறாள். பெரிய ஆபத்துக்கள் நேரிடப் போகின்றன. தனி மனிதனாகக் கானகம் செல்லும் ராகவனைத் தர்மம் தான் காப்பாற்ற வேண்டுமென்று தாய் நினைக்கிறாள்.

'தர்மம் தலை காக்கும்' என்று சொல்வதுண்டு, நாம் தர்மத்தைப் பரிபாலனம் செய்தால்தான் தர்மம் நம்மைப் பாதுகாக்கும் என்பதைக் காட்டுகிறாள். ராமன் தர்மத்தையே கடைசிவரையில் பின்பற்றுகிறான். இதற்காக லட்சுமணன்கூட ராமனைக் கோபித்துக் கொள்கிறான். 'தர்மத்தினால் தான் நீ கெடுகிறாய்' என்று கண்டிக்கிறான். ஆனாலும் ராகவன் தர்மத்தை விடவில்லை.

பரம புருஷனுடைய தத்துவத்தை அறிய வேண்டும். பெரிய ஆபத்துக்களையும் பொறுமையினால் கடந்து பெரியோர்கள் நமக்கு வழிகாட்டியிருக்கிறார்கள். ராமனைத் திருஷ்டாந்தத்தில் வைத்து அதன் மூலம் தியானம் செய்து க்ஷேமம் அடைய வேண்டும். நமக்குச் சில சக்திகளும் வரவேண்டும். சக்திகளைத் தப்பு வழியில் உபயோகிக்கக் கூடாது. மகாதீர லட்சணம் எல்லாம் ஆஞ்சநேயரிடம் இருக்கிறது. ராம நாமம் இருக்குமிடமெல்லாம் ஆஞ்சனேயர் இருக்கிறார். ராமனும் ஆஞ்சனேயரும் நமக்கு உத்தம திருஷ்டாந்தமாக இருந்து அவர்களைப் பற்றிய தியானத்தினால் நமக்கு எல்லாவித க்ஷேமமும் ஏற்பட வேண்டும்.

## 3. தெற்குப் பார்த்த மூவர்

தென்னாட்டில் அநேகமாகக் கோயில்கள் எல்லாம் கிழக்குப் பார்த்தவை. சில இடங்களில் சுவாமி மேற்கு முகம் பார்த்த வண்ணம் இருக்கிறார். மேற்குப் பார்த்த

சுவாமிகள் உள்ள கோயில்களில் கூடப் பிரதான கோபுரம் கிழக்குப் பக்கத்திலேயே இருக்கும். ஆனால் இரண்டு இடங்களில் தான் பகவான் தெற்கு நோக்கியிருக்கிறார். ஒன்று ஸ்ரீரங்கம், மற்றொன்று சிதம்பரம். இருவரும் ராஜாக்கள். ஒருவர் ரங்கராஜன். மற்றவர் நடராஜன். இரண்டு பேரும் கலாக்ஷேத்திரத்தைச் சேர்ந்தவர்கள். ரங்கம் என்றால் நாடக மேடை; அதற்கு ரங்கநாதன் ராஜா. மற்றவர் கூத்தாடுபவர்களுக்கு ராஜா, நடராஜன். இரண்டு பேரும் ஆனந்த மூர்த்திகள். ரங்கநாதன் ஆனந்த மாக யோக நித்திரையில் ஆழ்ந்திருக்கிறார். நடராஜன் ஆனந்தம் தாங்காமல் கூத்தாடுபவர்.

சாதாரணமாக ஆனந்தம் அதிகமாகப் போய் விட்டால் மனித இயல்பு பாடத் தோன்றும்; ஆடத் தோன்றும். அதனால்தான் அளவுகடந்த ஆனந்தமான பிரம்மானுபவம் ஏற்படும்போது 'ஹாவு ஹாவு' என்று சாமகானம் பண்ணத் தலைப்படுகிறார்கள் என்று தைத்திரிய உபநிஷத்தில் கூறப்பட்டது. கவலை வந்தால், நன்றாகப் பாடக் கூடியவனுக்குக் கூடப் பாட்டு வராது.

சம்சாரத்தில் துக்கம்தான் அதிகம். வாத்சல்யத்துக்குக் காரணமான குழந்தை குட்டிகள் கூட ஒரோர் காலத்தில் துக்க ஏதுவாகின்றன. ஆகவே துக்கம் நிறைய இருந் தாலும் ஒரு க்ஷணமாவது ஆனந்தம் வேண்டுமானால் ஆனந்தமாக நடனமாடுபவனை நினைக்க வேண்டும். ஒரு சிறு நினைப்புக் கூட நன்மை அளிக்கும். கூரையின் இடுக்கு வழியே வரும் சூரிய ரச்மி கூட இருட்டாக இருக்கும் இடத்தில் பிரகாசத்தை உண்டுபண்ணுவது போல.

ஆனந்தம் இரண்டு விதம்; பொங்குகிற ஆனந்தம், அடங்கியுள்ள ஆனந்தம். நடராஜனுடையது பொங்கும் ஆனந்தம். அந்தப் பொங்கும் ஆனந்த ஆட்டத்தின் வேகத்தில் சடைகூடத் தூக்கிக் கொண்டு நிற்கிறது.

விரித்த செஞ்சடையான் கையில் இருக்கும் உடுக்கையி லிருந்து கிளம்பும் சத்தம் பதினாறு சூத்திரங்களாக அமைந்தன.

அடங்கியுள்ள ஆனந்தத்தைத் தட்சணாமூர்த்தியிடம் காணலாம். அவரும் தெற்குப் பார்த்து இருப்பவர்தான். நடராஜர் காலைத் தூக்கி ஆடினால் தட்சிணாமூர்த்தி காலை அடக்கிக் கொண்டிருக்கிறார். நடராஜனுக்கு ஆனந்த முத்திரை, தட்சிணாமூர்த்திக்குச் சின் முத்திரை

ரங்கராஜனுக்கு நித்திரா முத்திரை. 'நித்ரா முத்ராம். ரட்சணே ஜாகருக' என்பது ரங்கநாதனைப் பற்றிய அனுபவம். ஞானம் வந்தால் சாந்தம் ஏற்படும். ஜபம் செய்வதானால் தட்சணாமூர்த்தியை நினைக்க வேண்டும். நடனம் பார்த்துக் களிக்க வேண்டுமானால் நடராஜனை நினைக்க வேண்டும்.

மூன்று பேரும் தெற்கே பார்க்கிறார்கள். அதன் கருத்து என்ன? மரண பயம், யம வாதனை இல்லாமல் நாங்கள் பார்த்துக் கொள்கிறோம் என்று அவர்கள் பக்தர் களுக்காகத் தெற்குத் திக்கைக் கவனித்துக் கொண்டிருக் கிறார்கள். இதில் அவரவர் மன ருசிப்படி எந்தத் தெய்வத்தை வேண்டுமானாலும் நினைத்துத் தியானிக்க லாம்.

## 4. ஈசுவரத் தத்துவம்

ஞானத்தைக் கொண்டு ஜனன மரணங்களைத் தவிர்த்தால் தான் சாசுவதமான சாந்தி கிடைக்கிறது. அத்தகைய உயர்ந்த சாந்தியை அடையும் போது பரமாத்மாவுடன் ஐக்கியமாகி விடுகிறோம். பரமாத்மா வுக்குக் காலம், தேசம், உருவம் ஆகிய வரையறை எதுவும் கிடையாது. ஆனால், இவ்வுயர் நிலையை அடைய நாம் பரமாத்மாவின் ஏதாகிலும் ஒரு சொரூபத்தைத் தியானம் செய்து அனுபவத்தைப் பெருக்கிக் கொள்ள வேண்டியிருக்

கிறது. இதில் இடது காலைத் தூக்கியபடி மூன்றாம் கண்ணுடன் சந்திர கலையைத் தலையில் அணிந்துள்ள ஈஸ்வர சொரூபத்தைத் தியானிப்பதில் விசேஷம் இருக்கிறது.

காலன் அல்லது மரண தேவதை நமது உடல்களை அழிக்கிறவன். காலம் என்பது சாமான்யமாகக் காலத்தையும் குறிக்கும். காலம் அழிவுக்கும் காரணமாகிறது. அனுகூலத்தையும் உண்டு பண்ணுகிறது. ஈசுவரன் தமது இடது காலால் காலத்தை அடக்கி அதை ஜெயிக்கிறார். உயர்த்தப்பட்ட இடதுகால் ஈசுவரன் காலத்தினால் கட்டுப்பட்டவன் அல்லது மரணத்தினால் பாதிக்கப் படுபவன் அல்லன் என்ற உண்மையை உயர்த்துகிறது. அவர் அனாதி. காமம் அல்லது ஆசைகள் பிறப்புக்குக் காரணம். ஈசுவரன் தமது நெற்றிக் கண்ணாகிய மூன்றாம் கண்ணால் காமத்தைக் கொளுத்தினார்.

ஈசுவரனின் மூன்றாவது கண் அவர் பற்றற்றவர் என்பதைக் குறிக்கிறது. நம் கண்களைக் கொண்டு வெளி விஷயங்களையே பார்க்கிறோம். ஆனால், இந்தப் புலனை அடக்கி உட்புறம் செலுத்தி உள்ளிருக்கும் அந்தராத்மாவை அனுபவிக்க வேண்டுமானால் இதற்கு ஞானம்தான் முக்கிய சாதனம். ஈசுவரனின் மூன்றாம் கண் இந்த ஞானத்தையும் குறிக்கிறது. ஞானம் பிறந்தால் சாந்தியை மேன்மேலும் அனுபவிக்கிறோம். இந்தச் சாந்தியைக் காட்டுவதுதான் ஈசுவரன் முடியிலுள்ள சந்திர கலை. சந்திரனின் அமிர்தத்திற்கு ஒத்த குளிர்ந்த கிரணங்களைப் போல் சாந்தி அளிப்பது வேறென்ன இருக்கிறது? அத்துடன் ஈசுவரன் தம் சடையில் கங்கையையும் வைத்துக் கொண்டிருக்கிறார். இந்த லோகத்தை அவரே ரட்சிக்கிறார் என்பதை இது காட்டுகிறது.

இவ்விதம் தூக்கிய இடதுகால், நெற்றிக்கண், சந்திரக் கலை ஆகியவற்றின் பூரண தத்துவங்களையும் உணர்ந்து,

அவற்றுடன் கூடிய ஈசுவரனைத் தியானம் செய்தால் அபமிருத்தியுவையும் இதர தோஷங்களையும் போக்கடித்து விடலாம். சாசுவதமான சாந்தியையும் ஆனந்தத்தையும் அடையலாம்.

## இரண்டாம் பகுதி : லௌகிகம் வரதட்சிணை

### பீடிகை

ஒவ்வொருவருக்கும் எத்தனையோ விதமான கஷ்டங்கள், தொல்லைகள் இருக்கின்றன. அதையெல்லாம் சிறிது காலமாவது மறந்திருப்பதற்கே இங்கே பூஜை பார்க்கவும், உபந்நியாசம் கேட்கவும் வருகிறீர்கள். ஆனால் இந்த உபந்நியாசம் வெறும் பொழுது போக்காக மட்டும் இருந்தால் பிரயோஜனமில்லை. உபந்நியாசம் உபயோகமாக இருக்க வேண்டுமானால், அதில் உங்கள் வாழ்க்கையில் அனுசரிப்பதற்கு ஏதாவது ஓர் அம்சமாவது இருக்க வேண்டும். உங்களுக்குப் பிடிக்காத விஷயமாக இருந்தாலும்கூட உங்களுடைய க்ஷேமத்தை உத்தேசித்து நான் சில விஷயங்கள் சொல்லத்தான் வேண்டும்,

நீங்கள் அதைச் செய்வதும் செய்யாததும் உங்கள் காரியம்; சொல்லத்தான் என்னால் முடிந்தது. 'ஜகத்குரு' என்று பெயர் வைத்துக் கொண்டு, உங்கள் பணத்தை யெல்லாம் வாங்கிக் கொண்டு, எனக்கு நல்லதாகத் தோன்றுவதை நான் சொல்லக்கூட இல்லையென்றால் அது பெரிய தோஷம். அதற்காகவே சொல்கிறேன்.

### பரிதாபக் காட்சி

சென்னை நகரத்தில் வந்து நீண்ட காலமாகத் தங்கியதில் என் மனசில் மிகுந்த கிலேசம் உண்டாக்கியுள்ள ஓர் அம்சத்தைச் சொல்வதற்காகத்தான் இத்தனை

பீடிகை போடுகிறேன். இங்கே என்னிடம் வயசு வந்த எத்தனையோ பெண்கள் தங்களுக்குக் கல்யாணம் ஆக வில்லை யென்ற குறையுடன் கண்ணும் கண்ணீருமாக வந்து முறையிடுகிறார்கள். 'அவர்கள் மனசில் எத்தனை கஷ்டமும் தாபமும் இருக்கின்றன என்று எனக்குத் தெரி கிறது. இந்தப் பரிதாபமான காட்சி என்னை ரொம்பவும் வேதனைப் படுத்துகிறது.

## அசிரத்தை

இந்தக் குழந்தைகள் வயசு முற்றிய பின்னும் கல்யாணம் ஆகாமல் நிற்பதற்குக் காரணம் என்ன? சாரதா சட்டத்தின் தலையில் பழியைப் போடுவதை நான் ஒப்புக் கொள்வதற்கில்லை. சாரதா சட்டம் பதினாலு வயசுக்குக் கீழ் கல்யாணம் செய்யக் கூடாது என்றுதான் கட்டுப்படுத்துகிறது. இருபத்தைந்து முப்பது வயசு வரை பெண்களைக் கல்யாணம் செய்து கொடுக்காமல் இருப்ப தற்கு அந்தச் சட்டம் காரணமாகாது. கல்யாண வயசுக்குத்தான் கட்டுப்பாடு இருக்கிறது. உபநயனம் முதலிய மற்ற சம்ஸ்காரங்களைச் சட்டம் எவ்விதத் திலும் கட்டுப்படுத்தாமல் இருந்துங்கூட நாம் அவற்றை யும் உரிய காலத்திலும் செய்யாமல் தானே இருக்கிறோம்? எனவே பெண்கள் கல்யாணமாகாமல் கஷ்டப்படுவதற்குச் சட்டத்தை இழுக்க வேண்டியதில்லை. நம் அசிரத்தை தான் காரணம்.

## ஆடம்பர செலவுகள்

கல்யாணம் என்றால் ஆடம்பரமாகச் செலவழிக்க வேண்டும் என்றாகி விட்டது. இதைவிட முக்கியமாகப் பிள்ளை வீட்டார் வரதட்சிணையும் சீர்வரிசையும் ஏராள மாகக் கேட்கிறார்கள். அன்றாட வாழ்க்கைக்கே கஷ்ட

மாயிருக்கிற நிலையில் இத்தனை செலவுக்கு ஈடு கொடுத்துச் சேமித்து வைக்கப் பெண்ணைப் பெற்றோருக்கு முடியாமல் போகிறது. பணக்கஷ்டம் காரணமாகவே குழந்தைகள் மணமாகாமல் மாளாத மனக்குறையுடன் நிற்கிறார்கள்.

## பெண்கள் உத்தியோகம் பார்ப்பது

இதோடு விஷயம் நிற்கவில்லை. இதைத் தொடர்ந்து பாரத தேசத்தின் ஸ்திரீ தர்மத்துக்கே விரோதமான போக்குகள் உண்டாகின்றன. கல்யாணம் ஆகாத பெண்ணைப் படிக்க வைத்து, வேலைக்கு விட்டு, அவளே சம்பாதிக்கும் படியாகப் பெற்றோர்கள் விடுகிறார்கள். முதலில் இது அவமானமாக இருந்தது. ஆனால் முதலில் தயக்கத்தோடு ஆரம்பிக்கிற ஓர் ஏற்பாடு வழக்கத்தில் வந்து விட்டால் பிறகு அதில் கூச்சம் போய் விடுகிறது. முதலில் அவமானமாக நினைத்த விஷயமே பிறகு பழகிப் போய்விடுகிறது.

அதுவே நாகரிகத்தின் அடையாளம் என்ற அளவுக்கு வந்து விடுகிறது. பெண்கள் உத்தியோகம் பார்ப்பது இப்படித்தான் ஆகிவிட்டிருக்கிறது. வயசு வந்த பெண்கள் சர்வ சகஜமாக ஆண்களுடன் சேர்ந்து உத்தியோகம் பார்ப்பது நம் தேச ஆசாரத்துக்கே விரோதமானது. இதனால் எத்தனையோ தப்பிதங்கள் நேருகின்றன. இதை எல்லோரும் கண்டும் காணாமல் இருப்பது போல் நானும் இருந்தால் பிரயோஜனமில்லை. என் மனசில் பட்டதை, நீங்கள் கேட்டாலும் கேட்காவிட்டாலும், வெளியிட்டுச் சொல்வது கடமை என்பதால் சொல்லுகிறேன்.

## தியாக உணர்வு

பிள்ளைகளைப் பெற்றவர்கள் ஒரு காலும் வரதட்சிணை வாங்குவதில்லையென்று தீர்மானம் செய்ய

வேண்டும். மற்ற விஷயங்கள் திருப்தியாக இருந்தால் கல்யாணத்தை முடிக்க முன்வர வேண்டும். வரதட்சிணை கேட்டால்தான் தங்களுக்கு மதிப்பு, வரதட்சிணை கேட்காவிட்டால் தங்கள் பிள்ளைக்கு ஏதோ குறை என்று நினைப்பார்கள் என்பது போன்ற எண்ணங்களை விட்டு எல்லோருக்கும் சந்தோஷம் தரும் வகையில் கல்யாணத்தை முடிக்க வேண்டும். தேசத்துக்காக, பாஷைக்காக, அரசியல் கொள்கைக்காக ஏதேதோ தியாகங்கள் செய்கிறார்கள். நம் தர்மத்துக்காக இந்த வரதட்சிணையைத் தியாகம் செய்யக் கூடாதா?

## ஸ்திரீ தர்மம்

வரதட்சிணைப் பழக்கமும், கல்யாணங்களை டாம்பீகமாக நடத்துகிற பழக்கமும் தொலைய வேண்டும். பெயருக்கும் புகழுக்கும் ஆசைப்பட்டுத் தான தருமங்கள் செய்வதை விட பணக்காரர்கள் தங்கள் ஏழை பந்துக்களின் விவாகத்துக்குத் தாராளமான திரவிய உதவி தர வேண்டும். உரிய காலத்தில் நம் பெண் குழந்தைகளுக்கும் கல்யாணமாகி ஸ்திரீ தர்மமும் சமூக தர்மமும் கெடாமல் இருக்க வேண்டும் என்பது என் ஆசை.

ஸ்திரீகள் தான தர்மத்தை வளர்க்கிற தீபங்களாக இருக்கிறார்கள். அவர்களின் பண்பு கெடுகிறதற்கு இடமே தரக் கூடாது. அப்புறம் தேசம் பிழைக்காது. குல ஸ்திரீகளின் சித்தம் கெட்டுப் போய்விட்டதானால் அப்புறம் தருமமே போய்விடும். தேசமே போய்விடும் என்றுதான் அர்ச்சுனன் கூட பகவானிடம் அழுதான். நம் ஸ்திரீ தர்மத்தைக் காப்பாற்றுகிற பெரிய கடமையில் நாம் தவறிவிடக் கூடாது. பெண்கள் காலத்தில் கல்யாணமாகி கிருக லட்சுமிகளாக இருக்க வேண்டியது சமூக

க்ஷேமத்துக்கு ரொம்பவும் அவசியம். இதற்கு ஒரு பெரிய முட்டுக்கட்டையாக இருக்கிற வரதட்சிணை வழக்கத்தை நாம் கைவிட்டேயாக வேண்டும்.

## எச்சரிக்கை

உங்களை இப்படிச் செய்யப் பண்ணுவதற்கு எனக்கு எந்த அதிகார சக்தியும் இல்லை. என்னால் முடிந்தது ஒரு ஆயுதப் பிரயோகம் பண்ணுகிறேன். இப்போது ரொம்பப் பேர் கல்யாணப் பத்திரிகைகளில், ''ஆசார்ய ஸ்வாமிகள் அனுக்கிரகத்தோடு நிச்சயிக்கப்பட்டிருப்ப தாகப்'' போடுகிறீர்கள் அல்லவா? இனிமேல் வரதட்சிணை வாங்குகிறவர்களும் கொடுக்கிறவர்களும் அப்படிப்பட்ட கல்யாணப் பத்திரிகைகளில் என் அனுக் கிரகத்தோடு நிச்சயித்ததாகப் போட வேண்டாம்.

# சமயத் தத்துவங்கள்

காஞ்சி மாநகர் பழங்காலம் முதல் இன்று வரை பல சமயங்களுக்கு இருப்பிடமாக இருந்து வந்துள்ளது என்பதையும் அச்சமயத் தலைவர்கள் தத்தம் சமயத் தத்துவங்களைப் பரப்பி வந்துள்ளனர் என்பதையும் பார்த்தோம். ஆகவே அச்சமயத் தத்துவங்கள் இப்பகுதியில் விளக்கப்பட்டுள்ளன. வாசகர்கள் படித்துப் பயன் பெறுவார்களாக.

## 1. சைவ சித்தாந்தம்

### மூன்று பொருள்கள்

சிவத்தோடு சம்பந்தமுடையது சைவம். சித்தாந்தம் என்றால் முடிந்த முடிவு என்று பொருள். சிவத்தோடு இரண்டறக் கலக்கும் முடிந்த முடிவைச் சொல்வது சைவ சித்தாந்தம்.

சைவ சித்தாந்தம் மூன்று பொருள்களை அநாதி, நித்தியம் என்று சொல்கிறது. பரமசிவமாகிய பரம்

பொருளே பதி. உலகிலுள்ள ஜீவன்கள் பசு. இந்தப் பசுவைக் கட்டிப்போட்டு, பிறப்பு இறப்புக்களைப் பெறச் செய்து, ஜீவ யாத்திரையை நடத்தக் காரணமாயிருப்பது பாசம். பாசக் கட்டறுத்து, சிவத்தோடு இரண்டறக் கலப்பதே முக்தி அல்லது வீடு. ஜீவர்களின் அல்லது பசுக் களின் லட்சியம் பாசத்தளையினின்றும் விடுபட்டுஇன்பம் அடைவதால் அந்த இன்ப நிலைக்கு வீடு என்று பெயர் அமைந்தது.

## வீடு

விடுதல் என்பதற்குத் தங்குதல் என்றும், விடுதலை என்றும் இரண்டு முக்கியமான பொருள்கள் உண்டு. இந்த உடம்பில் தங்கி உயிர் வாழ்வதால் இது வாழும் வீடு. நாம் தங்கியிருக்கும் இல்லத்துக்கு வீடு என்ற பெயர் அந்தக் காரணத்தால்தான் ஏற்பட்டது. இப்போது உடம்பு உயிருக்கு வீடு; பிறகு உயிருக்கு வீடு முக்தி. இந்த உடலாகிய வீட்டைவிட்டு இறைவனோடு தங்குவது முக்தி யாகிய வீடு. கட்டுப்பட்ட ஜீவனைப் பெத்தன் என்பார்கள். பந்தம் என்ற வடசொல், தமிழில் பெத்தம் என்று வரும். பாசத்தால் கட்டுப்பட்ட ஆன்மாவைப் பெத்த ஆன்மா என்றும், அதனின்றும் விடுதலை பெற்ற ஆன்மாவை முக்த ஆன்மா என்றும் சொல்லுவர்.

வீட்டில் பசுவைக் கட்டிப் போடுகிறோம். அதுபோல் இந்த உலகத்தில் பசுவாகிய உயிரைக் கட்டிப் போட்டிருப் பது பாசம்.

## இருவினை ஒப்பு

பதி விபுவாகவும், பாசத்திற்கு அகப்படாததாகவும் என்றும் சச்சிதானந்தப் பொருளாகவும், ஆன்மாவைக் கர்ம வினைகளுக்கு ஏற்றபடி சுக துக்கங்களை அனுபவிக்கும்படி ஆணை செலுத்துவதாகவும் இருப்பது. (விபு-வியாபகமானது, கடவுள்) தனது கருணையினால்

உயிர் வாழ்வதற்குரிய தனுவாகி உடம்பையும், அதில் பஞ்சேந்திரியங்களாகிய புறக் காரணங்களையும் மனம், புத்தி, அகங்காரம், சித்தம் என்னும் அகக் காரணங் களையும் அமைத்துத் தருவது அது. (தனு-உடல், வில்) தன்னுடைய திருஅருளால் பசுவை நடத்தி, நல்வினை தீவினைகளாகிய நெறியைக் காட்டுகிறது. தீவினை களையே மிகுதியாகப் பண்ணும் ஜீவர்கள், நல்வினையை மிகுதியாகப் பண்ணித் தீவினைகளைக் கழித்து விட்டால் அதற்கு இருவினை ஒப்பு உண்டாகிறது .கடன் பட்டவன் பொருள் சேர்த்து அந்தக் கடனை ஒழித்து விடுவது போன்ற நிலை அது.

கடன்பட்டவன் தண்டனை பெறுவதும், பொருள் சேர்ப்பவன் லௌகிகச் சுகங்களைப் பெறுவதும் உலகியல். அவ்வண்ணமே பாவம் மிகுதியானால் இழிந்த பிறப்பை எடுத்து அல்லல் உறுவதும், புண்ணியம் அதிகமானால் தேவனாக வாழ்ந்து இன்புறுவதும் பசுக்களுக்கு இறைவன் வகுக்கும் நியதி. இந்த நியதியையே ஊழ் என்றும், விதி என்றும் சொல்வார்கள். கலப்பு வினைகளை அனுபவிப் பது மனிதப் பிறவி,

## மும்மலங்கள்

இரண்டு வினைகளும் ஒத்து நடுநிலையில் பந்தமற்று இருக்கும். பசுவுக்கு உள்ள மலங்கள் பக்குவப்பட்டு உரம் குறைந்து நிற்கும். பாசத்தை மும்மலம் என்று சொல்வ துண்டு. ஆணவம், கன்மம், மாயை என்பவை மூன்று மலங்கள். ஆணவம் என்பது அநாதியாகப் பசுவோடு ஒட்டி வருவது; அதைச் சகஜ மலம் என்பார்கள். ஆணவத்தோடு இரண்டறக் கலந்து ஆன்மா மலங்களி னின்றும் விடுபட்டு, ஆணவமும் அகன்று நின்றால், இறைவனோடு ஒன்றியிருக்கும் இன்ப நிலை கிடைக்கும்.

"ஆணவத்தோடு அத்துவிதம்
ஆனபடி மெய்ஞ்ஞானத்
தாணுவினோடு அத்துவிதம்
சாரும்நாள் எந்நாளோ?"

என்பது தாயுமானவர் வாக்கு.

## வினைகள்

கன்ம மலம் என்பது வினைகள். நாம் செய்யும் நற்செயல்களாலும் தீய செயல்களாலும் விளையும் புண்ணிய பாவங்களே கன்மம் அல்லது வினையாகும். அது மூன்று வகைப்படும். சஞ்சிதம், பிராரப்தம், ஆகாம்யம் என்பவை அவை.

## சஞ்சிதம்

பல பிறவிகளிலும் செய்து நம் கணக்கில் சேர்ந்த வினையின் மூட்டையே சஞ்சிதம். அவ்வளவையும் ஒரு பிறவியில் அனுபவித்துக் கழிக்க முடியாது என்று இறைவன், கருணையினால் இந்தப் பிறவியில் அனுபவிப் பதற்காக ஒரு பகுதியை ஒதுக்குகிறான். அதை அனுபவித்துக் கழிக்க வேண்டும். அதுதான் பிராரப்தம். ஊழ் என்றும் விதி என்றும் அதைச் சொல்வர்.

## பிராரப்தம்

பிராரப்த வினை அனுபவித்துக் கழித்தே தீர வேண்டும். பழைய கடனைத் தீர்க்க வந்தவன் அதைத் தீர்த்துவிட்டு மகிழ்ச்சியோடு இருக்க வேண்டும். அப்படி யின்றிப் புதிய கடனை வாங்குபவர்களும் உண்டு. அவ்வாறு வினையின் பயனை அனுபவிக்கப் பிறப் பெடுக்கும் உயிர்கள் அந்தப் பயனை அனுபவிப்பதோடு புதிய வினைகளையும் செய்து கடன் மூட்டையைப் பெருக்கச் செய்கின்றன. அப்படி இந்தப் பிறவியில் புதிய தாகச் சேரும் வினைக்கு ஆகாமியம் என்று பெயர்.

## ஆகாமியம்

இறையருளை முன்னிட்டுப் பக்தி செய்து ஞானம் பெற்ற உயிர் இந்தப் பிறவியில் புதிய வினைகளை நினைந்து செய்வதில்லை. ஆகையால் ஞானிகளுக்கு ஆகாமியம் இராது. பிராரப்தத்தை அனுபவித்துத் தீர்க்கு மட்டும் அந்த உயிர் இங்கு வாழவேண்டும். ஞானம் பெற்ற உயிருக்குப் பழைய மூட்டையாகிய சஞ்சிதம் இல்லாமற் போய்விடும். அதை அனுபவிப்பதற்கு வேறு பிறவி எடுக்க வேண்டும்; ஞானிகள் இனிப் பிறப்பதில்லை யாகையால் சஞ்சிதம் அவர்களை அணுகாது. வீட்டை எரித்தவர்களுக்கு மூட்டைப்பூச்சி முதலியவற்றின் தொல்லைகளும் இல்லாமற் போவது போல் அவித்தை யாகிய அஞ்ஞானத்தை அழித்து ஞானம் பெற்றவர் களுக்கு வரும் பிறவிக்குரிய ஆகாமியமோ, சஞ்சிதமோ தொல்லை கொடுப்பதில்லை. பழைய கடனை வஜா செய்து விடுவது போல் சஞ்சித கர்மத்தின் தொடர்பு அவர்களுக்கு இல்லாமற் போய்விடும்.

## ஜீவ யாத்திரை

தனு, கரண, புவன, போகங்களைப் பெற்ற உயிர் இந்த உலகில் வாழும் போது இறைவனை முன்னிட்டுப் பக்தி செய்து ஞானம் பெற வேண்டும். மற்ற பிறவிகளை விட மனிதப் பிறவி அறிவுடையது. ஆதலால், மனிதன் தக்கது இது, தகாதது இது என்பதை உணர்ந்து, தக்கன வாகிய செயல்களைச் செய்ய வேண்டும். முள்ளை முள்ளால் எடுப்பது போல இந்த உடம்பைப் பெற்ற பயனாக, இனி உடம்பைப் பெறாதபடி செய்து கொள்ள வேண்டும்.

> **"பெற்றலும் பிறந்தேன் இனிப் பிறவாத**
> **தன்மைவந்து எய்தினேன்."**

என்று சுந்தர மூர்த்தி சுவாமிகள் பாடுகிறார். இந்தப் பிறவியே நம்முடைய கடைசிப் பிறவியாக இருக்கும்படி

செய்ய வேண்டும். அந்தப் பிறவியோடு நம்முடைய ஜீவ் யாத்திரைக்கு முற்றுப்புள்ளி வைக்க வேண்டும்.

## நான்கு படிகள்

அதற்குரிய நெறியைச் சைவசித்தாந்தம் சொல்கிறது. சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பவை முன்னேறு வதற்குரிய நான்கு படிகள்.

### 1. சரியை

நல்லொழுக்கம் உடையவனாய் இறைவனை வழிபட்டு ஆலய தரிசனம் செய்து, புண்ணிய கருமங்களைச் செய்வது. சரியை என்ற சொல்லுக்கு ஒழுக்கம் என்பது பொருள். எல்லா வகையான நற்செயல்களுக்கும் இது ஆதார சுருதி போன்றது. உதாரணமாக, திருநாவுக்கரசரைக் கொள்ளலாம். இதற்குச் சாலோக பதவி கிடைக்கும் என்பர். இதுவே தாசமார்க்கம் என்றும் சொல்லப்படும். இறைவனை ஆண்டானாகவும் தம்மை அடிமையாகவும் கருதி வழிபடுதல். சிவபெருமானது கோயில் தலத்தை அலகிடல், திருமெழுக்குச் சாத்தல், வழிபாட்டுக்காகப் பூக் கொய்தல், பூமாலை கட்டுதல், புகழ்ந்து பாடுதல், திருவிளக்கு இடுதல், திருநந்தவனம் செய்தல் முதலிய தொழில்களை அன்போடு செய்தலாகும்.

### 2. கிரியை

வாசனைத் திரவியம். தூபம், தீபம், தீர்த்தம், புஷ்பம் பஞ்சகவ்வியம், பஞ்சாமிர்தம் ஆகிய பூசைக்குரிய பொருள் களைக் கொண்டு பஞ்ச சுத்தி செய்து உட்பூஜை, புறப் பூஜை, அக்கினிகார்யம் முதலியவற்றை விதிப்படி செய்ய லாம். இறைவனைத் தந்தையாகவும் தம்மைக் குழந்தை யாகவும் நினைத்து வழிபடுதல். இதை உலகில் நிலை நாட்டியவர் திருஞானசம்பந்தர். இதைச் சத்புத்திர மார்க்கம் என்பர். இதற்குரிய பதவி சாமீபம்.

### 3. யோகம்

முக்குணங்களையும் ஐம்புலன்களையும் அடக்கி, மூலவாயுவை எழுப்புகின்ற இடை, பிங்கலை என்னும் நாடிகளை அடைத்துச் சுழிமுனை வழியைத் திறந்து, நடனச் சிலம்போசையுடன் சென்று, பஞ்சாட்சரம் ஏகாட்சரமாம் தன்மைகண்டு அருளைத்தரும் புறவெளியில் புகுந்து அழுந்தியிருத்தலேயாம். இறைவனைத் தமக்குத் தோழனாகக் கருதி வழிபடுதல்; இதை விளக்கியவர் சுந்தரர். இதற்குச் சகமார்க்கம் என்பர். இதற்குரிய பதவி சாரூபம்.

### 4. ஞானம்

பல நூல்களையும் ஆராய்ந்து, பதி, பசு, பாசம் என்னும் மூன்று தத்துவங்களின் இலக்கணங்களைத் தெளிந்து பண்டை வினையின் பயனாக வந்த சிற்றறிவு முற்றும் நீங்கி, பேரறிவாகிய சிவஞானம் விரிந்து தோன்றும் மனதைப் பெறுதலேயாம். இறைவனை ஆன்மாவுக்கு உயிராய் நினைந்து வழிபடுதல். இந்த ஞான மார்க்கத்தில் நின்று அதனை உலகிற்குப் போதித்தவர் மாணிக்கவாசகர். இதற்குச் சன்மார்க்கம் என்று பெயர். இதற்குரிய பதவி சாயுஜ்யம்.

சரியை முதலிய நான்கும் நான்கு படிகளாகும். அவை முறையே அரும்பு, மலர், காய், கனி போலாகும் என்பர் தாயுமானவர்.

## ஜீவன் முக்தன்

ஞானம் என்னும் மேற்படியை அடைந்து மயக்கம் நீங்கித் தெளிவோடு இருப்பவன் இந்த உலகத்திலேயே ஆனந்த அனுபவத்தை அடைகிறான். அவனை ஜீவன் முக்தன் என்பர். ஆன்மா சரீர சம்பந்தத்தோடு இருப்பதைப் போல் தோன்றும். இருவினை ஒப்பு மலபரிபாகம் சத்திநிபாதம் என்ற இந்த மூன்று நிலைகளும் இறைவனை

அடையும் வழிகள். இந்த உடம்பில் இருக்கும்போதே சத்தி நிபாதம் பெற்று, சுக துக்கங்களுக்கு அப்பாற்பட்ட ஆனந்த அனுபவம் பெறுகிறவர்கள் ஜீவன் முக்தர்கள்.

### வாசனா மலம்

ஜீவன் முக்தர்கள் மலமற்ற தூயவர்கள் ஆனாலும் வாசனா மலம் வந்து தாக்க வாய்ப்பு உண்டாகையால் தம்மை அந்த மலம் தாக்காமல் பாதுகாத்துக் கொள்ள வேண்டும். அடியார்களுடைய கூட்டுறவும் ஆலய தரிசனமும் அத்தகைய பாதுகாப்பாக இருக்கும். பரந்த வெளியில் விளக்கை ஏற்றி, இருள் நீங்குவதனால் பல பொருள்களைப் பார்க்கும் வாய்ப்பு நேர்ந்தாலும் அந்த விளக்கு அணையாமல் பாதுகாப்பதுபோல ஜீவன் முக்தர்கள் வாசனா மலம் தாக்காமல் பாதுகாத்துக் கொள்ள வேண்டும்.

### முடிவுரை

இவ்வாறு அமைந்த சைவ சித்தாந்தக் கருத்துக்கள் பழங்காலம் முதலே இருந்து வருகின்றன. திருமூலர் திருமந்திரத்திலும், தேவாரத்திலும் இதன் கூறுபாடுகள் இருக்கின்றன. சித்தாந்தக் கருத்துக்களைத் திரட்டி பன்னிரண்டு நூற்பாக்களாகத் திருவெண்ணெய் நல்லூர் மெய்கண்ட தேவர் சிவஞான போதம் என்ற நூலாகச் செய்துள்ளார். இதன் விரிவை அந்நூலில் காணலாம். சைவசித்தாந்த நூல்கள் பன்னிரு திருமுறைகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன.

# 2. வைணவம்

வைணவ சமயம் விஷ்ணுவுக்குப் பரத்துவம் கூறுகிறது. வைணவ புராணங்களில் மிகவும் ஏற்றம் பெற்று விளங்குவது விஷ்ணு புராணம். இதிலிருந்து பல மேற்கோள்களைக் காட்டியே வைணவ சமயம் ஓங்கி வளர்கிறது. இதில் ஸ்ரீமந் நாராயணனுடைய பரத்துவ நிர்ணயம் சித்தாந்தம் செய்யப்படுகிறது. வைணவ சமயத்தில் திருமால் ஐந்து சொரூபங்களில் வர்ணிக்கப்படுகிறார்.

**1. அந்தர்யாமித்துவம் (அருவநிலை)**

மறைந்திருந்து அருள்பாலித்தல். வைணவ சம்பிரதாயத்தில் இறைவனின் ஐந்து நிலைகளுக்கு நீரின் ஐந்து நிலைகளை உவமையாகக் கூறுவர். எங்ஙனமெனின் அருவநிலை, மறைந்திருந்து அருள்பாலிக்கும் தன்மை. பூமிக்குள் மறைந்திருக்கும் நீரைப் போன்றது. பகவான் எங்கும் நிறைந்திருக்கிறார். பிரம்ம தேவன் தொடங்கி ஈ, எறும்பு வரை அனைத்திலும் உயிருக்கு உயிராய் இருந்து செயலாற்றுகிறார்.

**2. பரத்துவம் (வியாபகம்)**

எங்கும் நிறைந்திருந்து அருள்பாலித்தல். மழை நீர் போன்றது. திருநாடு என்று புகழப்படும் பரமபதத்தில் திருமாமணி மண்டபத்தில் சீரிய சிங்காதனத்தில் கொலு வீற்றிருத்தல்.

**3. வியூகம் அணிவகுத்தல்**

அணிவகுத்து நின்று அருள்பாலித்தல்; திருப்பாற்கடல் போன்றது. பாற்கடலுள் பையத்துயின்ற பரமன் நிலையே வியூகம் ஆகும். இராமகிருஷ்ண அவதாரங்

களுக்கு மூலகாரணமே திருப்பாற் கடலாகும். தேவர்களின் குறைகளைக் கேட்டு அவைகளைப் போக்குகிறான். சங்கர்ஷணன், வாசுதேவன், பிரத்யும்னன், அனிருத்தன் இந்த மூர்த்திகளுக்குத் திருப்பாற்கடல் முதலான ஸ்தானங்களில் இருப்பு. கேசவன் தொடங்கி தாமோதரன் ஈறாக இருக்கும் மூர்த்திகள் ஸ்தானம் வியூகம். மார்கழி மாதம் தொடங்கி ஒவ்வொரு மாதத்திற்கும் ஒரு மூர்த்தியாக இருந்து வழிபாட்டுக்குரிய பரமனாகிறார்.

1. மார்கழி — கேசவன்
2. தை — நாராயணன்
3. மாசி — மாதவன்
4. பங்குனி — கோவிந்தன்
5. சித்திரை — விஷ்ணு
6. வைகாசி — மதுசூதனன்
7. ஆனி — திரிவிக்ரமன்
8. ஆடி — வாமனன்
9. ஆவணி — ஸ்ரீதரன்
10. புரட்டாசி — ரிஷிகேசன்
11. ஐப்பசி — பத்மநாபன்
12. கார்த்திகை — தாமோதரன்

### 4. விபவம் (ஆற்றுநீர் போன்றது)

மனித உருவில் காட்சியளித்தல். வானவர்களுக்குத் துன்பம் ஏற்படும் போதெல்லாம் பகவான் பல்வேறு அவதாரங்கள் எடுத்து அவர்களின் துன்பங்களைக் களைந்து, அவர்களைக் காப்பாற்றினார். துஷ்டர்களை வதைத்து, சாதுக்களைப் பரிபாலித்து, பல வைபவம் நிறைந்த செயல்களைச் செய்ததால் விபவம் எனப் பெயர் பெற்றது.

### 5. அர்ச்சாவதாரம் (குளத்து நீர்) —சிலை வடிவம்

பகவானுடைய ஐந்து சொரூபங்களில் அர்ச்சா அவதாரமே தலை சிறந்தது. அகில உலகத்திலும் வழிபாடு

என்பது அர்ச்சாவதாரத்தில் தான் இருக்கிறது. புண்ணிய தலங்கள் பலவற்றிலும் பகவான் எழுந்தருளியிருக்கும் நிலை அர்ச்சாவதாரமாகும். மண்ணுலகில் இருக்கும் நம்மவரின் குறைகளைக் கேட்டு அவைகளைக் களைந்து, அருள்பாலித்து வருகிறான் ஸ்ரீமன் நாராயணன். இந்த உருவ வழிபாட்டால்தான் நமக்குப் பக்தி செழிக்கும். எம்பெருமானுடைய உருவத்தை மனதில் நினைத்து, அவனைத் தியானித்து அவனுடைய அருளைப் பெறுவது அர்ச்சாவதாரத்தில்தான். அடியவர் விரும்பும் வகையில் அவன் அமைகிறான்.

வேதத்தை அனுசரித்த இதிகாசங்களிலும் புராணங்களிலுமே வைணவம் ஓங்கி வளர்கிறது. ஆழ்வார்களுடைய அருளிச் செயல்களில் பரத்துவம், வியூகம், விபவம், அந்தர்யாமித்துவம், அர்ச்சாவதாரம் எல்லாமே நன்கு கொண்டாடப்படுகின்றன. ஆழ்வார்களுடைய தமிழ்மறைக்கு மிகவும் ஏற்றம் கொடுத்து, நாதமுனிகள் நாளிலிருந்து நிகரில்லாத சமயமாய் வைணவம் திகழ ஆரம்பித்தது.

## விசிஷ்டாத் வைதம்

வேதங்கள், இதிகாசங்கள், புராணங்கள் மாத்திரமன்றி தமிழ் மறைகளுக்கு மிகமிக ஏற்றந்தந்து, தமிழ் மறைகளின் விசேஷமான பரிமாணங்களைக் கொண்ட சமயத்தை நிலை நிறுத்தினார்கள். பிரம்ம சூத்திரங்களுக்கும் உபநிடதங்களுக்கும் பொருள் சொல்ல வந்த முன்னோர்கள் ஆழ்வார்கள் அருளிச் செயல்களில் உள்ள கருத்துக்களையே கொண்டு வியாக்கியானங்களையும் விரிவுரையையும் செய்தனர்.

இந்தப் பழைய கால வைணவ சமயம் ஸ்ரீ இராமானுஜர் காலம் தொடங்கி, விசிஷ்டாத்வைதம் என்று பெயர் பெற்றது. இவரே இம்மதத்தை உலகில் பிரசித்தம் செய்தவர். ஸ்ரீ பெரும்புதூரில் பிறந்து வளர்ந்த

ஸ்ரீ இராமானுஜர் வேதாந்தத்துக்கு விசிஷ்டத்தைவா பரமாய் உரை செய்தார்.

விசிஷ்டாத்வைத சமயத்தின் மூன்று தத்துவங்களாக சித், அசித், ஈஸ்வரன்— ஒத்துக் கொள்ளப்பட்டிருக்கின்றன. அத்வைதம் என்றால் ஏகத்துவம். விசிஷ்டம் என்றால் விசேஷணத்துவம். விசேஷணமாவது சித்தையும் அசித்தையும் சரீரமாகவுடையது என்பது பொருள். இவை இரண்டையும் லட்சணங்களாகக் கொண்டது. இந்த மதத்தில் உலகம் உண்மை. ஜீவன் வேறு, பரமாத்மா வேறு. சித்தும் அசித்தும் உண்மைப் பொருள்களே. பரமாத்மா இந்த இரண்டோடு பிரிவுறாதபடி அமைந்திருக்கிறது. பரமாத்மா ஒன்றிற்கே சுவாதந்திரியம், சித்தும் அசித்தும் பரமாத்மாவையே சார்ந்து இருக்கும்.

விசிஷ்டாத்வைத சித்தாந்தத்துக்கு அனுகூலமாகப் பலவேத வசனங்களும் உபநிஷத மந்திரங்களும் உண்டு. நிர்க்குணமான வேத வசனங்களுக்கு ஹேய குணங்கள் அற்றவன் என்பது பொருள். ஜீவனுக்குப் பிரகிருதி சம்பந்தத்தால் ஏற்படுகிற நிர்ப்பந்தங்கள் சுக துக்கங்கள் இவை எல்லாம் பரமாத்மாவுக்குக் கிடையா. மகாலட்சுமியை விட்டு இணைபிரியாத சொரூபமாயிருக்கும்.

மோட்சம் இரண்டு வகை. மோட்சம் என்பது விடுதலையாகும். 1. கைவல்யம் என்பது, ஜீவன் ஜீவனாகவே இருந்து பரமானந்தம் அடையும் தன்மை. 2. பிரம்மானந்தம், சாயுஜ்யம். பரமாத்மாவைப் போலவே ஜீவன் ஆனந்தத்தை அனுபவிப்பது. மோட்சமாவது பரமபதம் சேர்தல். மோட்சத்திற்குரிய மார்க்கங்கள் ஞானயோகம், கர்மயோகம், பக்தியோகம் என்பன. இவற்றுள் பக்தியோகம் தலை சிறந்ததாகும். மோட்சம் தரவல்லவன் விஷ்ணுவே.

ஆழ்வார்களின் பாசுரங்களில் பரமனின் அர்ச்சா அவதாரம் ஏற்றம் படைத்தது. பாரதமெங்கும் பக்தி வெள்ளம் கரைபுரண்டோடியது. பாடல்பெற்ற இடங்கள் எல்லாம் திவ்விய தேசங்களாகத் திகழ ஆரம்பித்தன. நூற்றெட்டுத் திருப்பதிகளில் எழுந்தருளிய எம்பெருமானை ஆழ்வார்கள் மங்களா சாசனம் செய்தார்கள். இதுவே வைணவத்திற்கு ஏற்றதாகப் போற்றப் பட்டு வருகிறது. ஸ்ரீவைணவர்களுக்கு ஒரே தெய்வம் ஸ்ரீமன் நாராயணன்தான். பகவத் கைங்கர்யமும் சரணாகதியும் தலைசிறந்து விளங்குவது வைணவத்தில்தான்.

ஆகமங்களில் பெரிதும் போற்றப்பட்டு வரும் பாஞ்சராத்ரமும், வைகானசமும் ஸ்ரீ வைணவ ஆகமங்களாகும். வைணவ சம்பிரதாயத்தில் தான் 'பஞ்ச சமஸ்காரம்' என்னும் இன்றியமையாத சடங்கு இன்றும் நடைபெறுகிறது. சுலபமாக அனுஷ்டானம் செய்ய வல்லது இந்த வைணவ சமயம். சர்வம் விஷ்ணுமயம்.

## வடகலையும் தென்கலையும்

இராமானுஜருக்குப் பிறகு இந்த பிரிவுகள் ஏற்பட்டன. வேதாந்த தேசிகர் வைணவர்களுக்கு விளக்கிய சில கருத்துக்களால் வைணவ சமயம் இரு பிரிவுகளாயின. இவ் வேறுபாட்டின் காரணம் மொழியும் இனமும் ஆகும். ஆழ்வார்கள் காலத்தில் இது போன்ற பிரிவுகள் இல்லை. இவ்விரு கோட்பாடுகளுள் சில ஒற்றுமைகளும் சில வேற்றுமைகளும் உள்ளன.

### வடகலை

1. இரு பிறப்பாளர்க்கே உரியது என்பர். அதாவது உபநயனம் செய்து கொள்வது இரண்டாவது பிறப்பைக் குறிக்கும்.
2. விஷ்ணுவைச் சூரியனோடு தொடர்பு படுத்திச் சௌரம் என்பர். அதாவது சூரியனைக் கொண்டு மாதங்களைக் கணக்கிடுவது. (சௌரமானம்)

3. விஷ்ணுவே முதல்வன் எனக் கூறி அவன் திருவடிவங்களான சத்தியன், அச்சுதன், அநிருத்தன் என்னும் மூவரைக் குறிக்கும்.

4. திருமாலின் திருக்கோயில்கள் இந்தியாவின் பல பகுதிகளில் பரவலாக அமைந்திருக்கின்றன.

5. இம்மைப் பயனையும் மறுமை நலனையும் சிறப்பித்துக் கூறுகின்றது.

6. வேதாந்த தேசிகரைச் சிறப்பித்துப் போற்றுகின்றது.

7. ஞான நெறி, பக்தி நெறி போன்றே பிரபத்தியையும் (சரணாக்தியையும்) ஒரு நெறியே என்பர். தாய்க் குரங்கு தனது குட்டியை எங்கு எடுத்துச் சென்றாலும், குட்டி தாயினைப் பற்றிக் கொள்கிறது. அது போலவே எப்போதும் இறைவனான திருமாலின் திருவடிகளைப் பெற பக்தன் முயற்சியும் பிடித்தமும் உடையவனாக இருத்தல் வேண்டும் என்பர். இது மர்க்கட நியாயம் என்பர்.

8. திருமாலானவர் உயிர்களை ஆட்கொள்ளும் போது அவைகளின் குற்றங்களைத் தான் ஏற்பதில்லை.

9. திருமாலையும் திருமகளையும் போற்றுவர்.

10. தாம் தனித்து நின்றும் உயிர்களை நன்னெறிப் படுத்துவதற்காக உலகத்தையும் உயிர்களையும் குறிப்பதற்கு, பாதம் இல்லாத நாமம் இட்டும் நடுவில் ஸ்ரீசூர்ணம் தாமாகவும் நிற்றல்.

## தென்கலை

1. வைணவர்களுக்கான ஐம்பெரும் கடன்களை அறிதலும் வாழ்க்கையில் கடைப்பிடித்தலும் ஆகும். (எல்லா சாதியார்க்கும் பொருந்தும்).

2. அக்னியோடு தொடர்பு படுத்தி அக்னேயம் என்பர்.

3. வாசுதேவனை முதற்பெருங் கடவுளாக எண்ணியும் அவனின் வடிவங்களாக உள்ள சங்கர்ஷன், பிரத்யும்னன், அநிருத்தன் என்னும் மூவரையும் போற்றுவர். (தென்கலையார் தாம் எது செய்யினும் 'கிருஷ்ணார்ப்பணம்' என்றே அர்ப்பணம் செய்வர்.)

4. தென்கலைச் சம்பிரதாயத்தில் உள்ள கோயில்கள் மலைகளிலும் ஏனைய இடங்களிலும் (தமிழ் நாட்டிலும்) அமைந்து விளங்குகின்றன.

5. வீடுபேற்றினை மட்டும் (பரம பதம்) சிறப்பித்துக் கூறும்.

6. பிள்ளை லோகாசாரியரையும் மணவாள மாமுனிகளையும் சிறப்பித்து வணங்குவர்.

7. பூனையானது தனது குட்டியைப் பேணிப் பாது காக்கத் தானே கவ்விக் கொண்டு வந்து வைத்துப் பாதுகாத்தல் போல, திருமால் ஒவ்வோர் ஆன்மாவையும் நல்வழிப்படுத்துகின்றார். இதனை மார்ச்சால மார்க்கம் (பூனை வழி) என்பர். இது பிரபத்தி மார்க்கம். எல்லாம் அவன் விட்ட வழி என்று அவன் பாதத்தில் சரணாகதி அடைதல்.

8. உயிர்களின் குற்றத்தைப் பொருத்து அனுகிரகிப்பர் என்பதாம்.

9. அரசு, அமைச்சு என்ற நிலையில் திருமாலையும் திருமகளையும் போற்றுவர்.

10. திருமாலின் திருவடிகள் தாமரையில் விளங்குவதாக திருமண் இடும்போது பாதம் வைத்து நாமம் இட்டுக் கொள்வர்.

இன்னும் சில ஒற்றுமை வேற்றுமைகளும் உள்ளன. வைணவத்தில் திருப்பதி, காஞ்சிபுரம், ஸ்ரீரங்கம் மூன்றும் சிறப்புடையன. வழிபாடு செய்வதில் சண்டை போட்டுக் கொள்வதும் கோர்டுக்குப் போவதும் நாம் நம்ம சாமியைக் கும்பிடுவதற்கு அன்னியன் உத்திரவு போடு வதும் உசிதமாகத் தெரியவில்லை. திருப்பதி விவகாரம் லண்டன் வரையில் சென்றது. இங்கு வடகலை நாமமும் இல்லை. தென்கலை நாமமும் இல்லை. பச்சைக் கற்பூரம் கஸ்தூரி இவைகளில் சாந்து செய்து பட்டையாய் நெற்றியில் கோபி சந்தனம் போலப் போடுகிறார்கள்.

காஞ்சிபுரம் கோயில் விவகாரமும் கோர்ட் வரை சென்றது. இன்றும் இதுபற்றி பூசல் இருந்துகொண்டு தான் இருக்கிறது.

ஸ்ரீரங்கம் கோயில் தென்கலை சம்பிரதாயப்படியே நித்திய நைமித்திக வழிபாடுகள் நடந்து வருகின்றன.

# 3. பௌத்தம்

இன்று புத்த மதம் அல்லது பௌத்த மதம் என வழங்கி வருவது சுமார் 2500 வருஷங்களுக்கு முன்பு கௌதம புத்தரால் துவக்கப் பெற்ற பேரியக்கமாகும். அன்று இந்த இயக்கம் தர்ம பதம் என்னும் பெயர் பெற்றிருந்தது. வைதிக மதத்தில் உள்ள கர்ம காண்டத்தைப் புத்த மதம் அறவே நிராகரிக்கிறது. யாகத்தில் உயிர் பலியிடுவதை விலக்கி வைத்த பெருமை அதனுடையதாம். வேதத்தில் உள்ள ஞான காண்டத்தைப் பற்றி புத்தமதம் உதாசீன மாயிருக்கிறது. ஆனால் அது தன் போக்கில் ஞான மார்க்கத்திலும் பக்தி மார்க்கத்திலும் முன்னேற்றம் அடைந்திருக்கிறது. பதஞ்சலி முனிவர் இயற்றிய யோக சாஸ்திரத்தைப் புத்தமதம் ஏற்றுக் கொள்கிறது.

புத்தமதம் ஆஸ்திக மதமும் அன்று; நாஸ்திக மதமும் அன்று. பரம்பொருள் ஒன்று இருக்கிறது என்றோ இல்லையென்றோ அது விவாதிப்பதில்லை. பரத்தைப் பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது. தெரிந்து கொள்ள வேண்டிய அவசியமும் இல்லை என்கிறது புத்தமதம். அதனால் அது அக்ஞேய மதம் (Agnosticism).

ஜீவ தத்துவத்தையும் ஜகத் தத்துவத்தையும் புத்தமதம் ஆழ்ந்து ஆராய்கிறது. பிரபஞ்ச வாழ்வு துக்க மயம் என்பது அதன் கோட்பாடு. இக்கோட்பாடு நான்கு பகுதி களாகப் பிரிக்கப்படுகிறது. 1. துக்கம், 2. துக்கசமுதயம் 3. துக்க நிரோதம், 4. துக்க நிரோத காமினி அல்லது துக்கத்தை நீக்குவதற்கான உபாயம்.

காமம் அல்லது ஆசையே பிரபஞ்ச வாழ்க்கையைப் பல கோடி பிறவிகளாக வளர்ப்பதற்குக் காரணமாகிறது.

விறகு போடுமளவு தீ வளர்கிறது அங்ஙனம் ஆசையை நிறைவேற்றும் அளவு அது வளர்கிறது ஆசையை ஒழிப்பதே பிறவியை ஒழிப்பதற்கு உற்ற உபாயம், ஆசை அறவே அழியுங்கால் ஜீவவியக்தி அழிகிறது மனிதன் தன்னைத் தானே சிருஷ்டித்துக் கொண்டான் தன்னைத் தானே மனமுவந்து கலைத்து விடுவது நிர்வாணம் அல்லது முடிந்த முடிவு.

**"தாமே தமக்குச் சுற்றமும்**
**தாமே தமக்கு விதிவகையும்**
**யாமார் எமதார் பாசமார்**
**என்ன மாயம்?"**

என்று யாத்திரைப் பத்தில் மாணிக்கவாசகர் பகர்வது புத்தமதக் கோட்பாடுகளில் ஒன்றாகும்

**"யானே பொய் என் நெஞ்சம் பொய்**
**என் அன்பும் பொய்"**

என்று திருச்சதகம் ஆனந்த பரவசத்தில் பகரப் பெற்று உள்ளது புத்த மதத்தின் அடிப்படைக் கோட்பாடு ஆகும்

**"ஊன்கெட்டு உயிர்கெட்டு**
**உணர்வு கெட்டு என் உள்ளமும்போய்**
**நான்கெட்ட வாபாடித்**
**தெள்ளேணம் கெட்டோமோ?"**

என்னும் திருவாசகக் கூற்று புத்தமதம் புகட்டுகிற முடிந்த முடிவு ஆகிய நிர்வாணத்துக்கு நல்லதொரு விளக்கமாகும்.

உப்புப் பொம்மை கடலில் கரைவது போன்று நிர்விகற்ப சமாதியில் ஜீவ வியக்தி நிரந்தரமாக அழிகிறது. அகண்ட சச்சிதானந்தம் எஞ்சியிருக்கிறது இது அத்வைத வேதாநதம் ஆசை அழிந்து போன இடத்து ஜீவ வியக்தி அழிகிறது அது நிர்வாணம் பிறகு என்ன எஞ்சியிருக்

கிறது என்று ஆராய்வதற்கு ஆள் இல்லை. இது புத்த மதம். இந்த இரண்டு கோட்பாடுகளுக்கும் இடையில் உள் ள கருத்து ஒற்றுமை சிந்தனைக்கு உரியதாகும்.

புத்தமதம் நாளடைவில் ஹீனயானம், மகாயானம் என இரண்டு பிரிவுகளாக வடிவெடுத்தது. ஹீனயானம் என்பது எளிய முறையெனவும், மட்டமான முறையென வும் பொருள் படுகிறது. பிட்சு ஒருவன் உலகத்தைப் பொருட்படுத்தாமல் அதிலிருந்து விலகியிருந்து, கடின மான நெறிகளைக் கையாண்டு ஜீவபோதத்தைக் கலைத்து நிர்வாணமடைவது இதன் நோக்கமாகும்.

பின்பு மகாயானம் என்பது சிறப்பு முறை என்று பொருள் படுகிறது. பிற உயிர்களின் நலத்தில் ஈடுபட்டுத் 'தான்', 'தனது' என்பவற்றைத் துடைப்பது இதன் நோக்மாகும். விரிவான வழிபாட்டு முறைகள், கிரியா விசேஷங்கள், விழாக்கள், ஆராதனை முறைகள், மந்திரம், தந்திரம், யந்திரம் ஆகியவைகளின் விஸ்தரிப்பு முத்திரைகள், சின்னங்கள் ஆகியவைகள் ஆராதனையில் இடம் பெறுதல்- ஆகிய இத்தனையும் அடங்கப் பெற்றது மகாயானம். பாமரர்க்கிடையில் புத்தமதம் பரவியதற்கு இந்தச் சிறப்பு முறை முகாமையாகும். நாளடைவில் இத்தகைய புத்தமதம் வழிபாட்டில் மேன்மையுற்று வைதிக மதமாக மாறலாயிற்று.

பொருளற்ற ஜீவ வியக்தியை ஆராய்ந்து, பார்த்து அதைத் துடைத்துவிடுவது தீவிர அதிகாரிகளுக்குப் புத்த மதம் புகட்டும் போதனையாகும். மந்த அதிகாரிகளுக்கு அது பஞ்ச சீலத்தையும் நான்கு நலன்களையும் புகட்டு கிறது. அகிம்சை, சத்தியம், அஸ்தேயம், பிரம்மசரியம், அபரிக்கிரமம் ஆகியவை பஞ்ச சீலங்களாகின்றன. நல்ல இயல்பு, நல்ல அறிவு, நல்ல இணக்கம், நல்ல வாழ்வு என்பன நான்கு நலன்கள் ஆகின்றன.

## புத்த சமயம் பரவுவதற்குக் காரணங்கள்

புத்தரின் நற்பண்புகளே அவர் சமயம் விரைவாகப் பரவக் காரணமாயிருந்தன. அவர்தாம் அனுபவத்தில் பெற்ற உண்மையைத் தம் இனிய குரலில் எல்லோருக்கும் போதித்தார். அன்பே உருவான அவரது சொற் பொழிவுகள் அனைவர் உள்ளத்தையும் கவர்ந்தன. அவை அன்பு நிறைந்தவையாகவும் நீதிக் கதைகளும் நல்ல உவமைகளும் நிறைந்தவையாகவும், எளிதில் எவர்க்கும் விளங்கக் கூடியவையாகவும் அமைந்தன. ஆதலின் மக்கள் அவரை எளிதில் பின்பற்றினர். ஆசியாவின் சோதி, உலகப் பேரொளி என்று அவரைப் போற்றிப் புகழ்ந்தனர்.

புத்த சமயம் விரைந்து பரவப் பல காரணங்கள் இருக்கின்றன. புத்த துறவிகள் புனித நூல்கள் பலவற்றை இயற்றினர். அவை திரிபிடகம் என வழங்கப்பட்டன. புத்தர் தம் கொள்கைகளைப் பரப்பச் சங்கங்களைத் தோற்றுவித்தார். அதில் 15 வயதிற்கு மேற்பட்ட ஆண் களும் பெண்களும் சேர்த்துக் கொள்ளப்பட்டனர். இவர்கள் பிட்சுகள், பிட்சுணிகள் என வழங்கப்பட்டனர். இவர்கள் புத்த மடங்களில் வசித்து புத்த சமயத்தைப் பரப்பப் பெருந்தொண்டு ஆற்றினாாகள்.

சங்கத்தைச் சேர்ந்தவர்கள் ஆணாயினும் பெண் ணாயினும் மாசற்ற வாழ்க்கை நடத்த வேண்டும். ஆசையை ஒழிக்க வேண்டும். இசை, நாட்டியம் போன்ற வற்றில் ஈடுபடக் கூடாது. ஒழுக்க முறைகளைக் கடுமை யாகப் பின்பற்ற வேண்டும். நறுமணப் பொருட்கள், மலர்கள், அணிகலன்கள் முதலியவற்றை எக்காரணத் தாலும் பயன்படுத்தக்கூடாது. காவியுடை, பிச்சையோடு, மயிர் மழிக்கும் கத்தி, ஊசி முதலியவைகளையே தம் சொந்தப் பொருள்களாக வைத்துக் கொள்ள வேண்டும். பிச்சை எடுத்து வயிற்றுப் பசியைத் தீர்த்துக் கொள்ள வேண்டும்.

இராஜக்கிருகம், வைசாலி, பாடலிபுத்திரம், ஜலந்தர் ஆகிய இடங்களில் புத்த சமயச் சபைகள் கூட்டி, புத்தரின் போதனைகளைத் தொகுத்துப் பரப்பும் முறைகளைச் சங்கத்தினர் மேற்கொண்டனர்.

புத்தர் போதித்த கொள்கைகள் சாதாரணப் பொது மக்களும் எளிதில் விளங்கிக் கொள்ளத் தக்கவாறு மக்கள் பேசிய பாலிமொழியில் இருந்தன. அசோகர், கனிஷ்கர், ஹர்ஷர் போன்ற அரசர்களின் ஒத்துழைப்பும் இடையறாத தொண்டும் புத்த சமயம் விரைவாகப் பரவ முக்கிய காரணங்களாக அமைந்தன.

புத்த சமயக் கொள்கைகளை வெளிநாடுகளில் பரப்ப முயன்ற போது, அவ்வெளி நாட்டு மக்களின் தேவைக்கேற்ப வளைந்து கொடுக்கும் தன்மையுடையவைகளாக அவை இருந்தபடியால், அந்நாட்டு மக்கள் மிக்க எளிதில் புத்தசமயக் கொள்கைகளை ஏற்றுக் கொண்டனர். புத்த சமயம் எங்கும் விரைவில் பர்வியதற்கு இவ்வாறான காரணங்களை முக்கியமாகக் கூறலாம்.

## புத்தரின் நல்லுரைகள்

வாழும் உயிர்களின் செயல்கள் யாவும் பத்துப் பொருள்களால் தீயன ஆவன. அப்பத்துப் பொருள்களை நீக்கலால் நல்லன ஆவன. உடலைப் பற்றி வரும் தீமைகள் மூன்றும், வாக்கைப் பற்றி வரும் தீமைகள் நான்கும், உள்ளத்தைப் பற்றி வரும் தீமைகள் மூன்றும் ஆகப் பத்து அவை.

உடம்பில் தோன்றுவன : கொலை, களவு, காம விழைவு என்பன.

சொல்லில் தோன்றுவன : பொய், பொறாமை, கடுஞ்சொல், பயனில் சொல் என்பன.

உள்ளத்தில் தோன்றுவன : பேராசை, பகை,. பிழையுற்ற காட்சி என்பன.

மேற்கண்ட இப்பத்துக் குற்றங்களையும் நீக்கும் வகையையும் உனக்குப் போதிக்கிறேன் என்றார் புத்தர் பெருமான்.

1. கொல்லாதே; உயிர்களை மதித்து ஒழுகு.
2. களவு செய்யாதே; கொள்ளை அடிக்காதே; தன் உழைப்பின் பயன்கட்கு உரியனவாக மாறும் எவனுக்கும் உதவி புரிக.
3. அசுத்தத்தை விட்டொழித்து, தூய வாழ்வைப் பற்றுக.
4. பொய் பேசாதே; உண்மையைக் கூறுக; அறிவோடும், அச்சமின்றியும் அறிவுடைய நெஞ்சோடும் வாய்மையை உரைத்திடு.
5. பொய் வதந்திகளைப் புதிதாகப் புனையாதே; அவற்றைத் திரும்பக் கூறாதே, குறை கூறாதே. பிறருடைய நல்லியல்புகளை நாடியறிக அவர்களைப் பகைவர் பழிக்கின் நீ முழு மனத்தோடும் அவர்கட்காகப் பரிந்து பேசும் வண்ணம் நல்லன நாடுக.
6. ஆணையிடாதே மரியாதையும், மதிப்பும் தோன்றப் பேசுக.
7. வம்பு பேசிப் பொழுதைப் பாழ்படுத்தாதே; கருதிய ஒன்றையே கூறுக; ஆகாதாயின் வாய் திறவாதே
8. பேராசை கொள்ளாதே; பொறாமையை ஒழி; பிறர் நலங் கண்டு பெருமகிழ்வு எய்துக.
9. தீய நினைவு ஒழித்து நெஞ்சைத் தூயதாக்குக. நின் விரோதியர் மீதேனும் பகைமை கொள்ளேல்; அனைத்துயிர்களையும் அன்பால் தழுவுக.
10. அறியாமையினின்றும் உன் உள்ளத்தை விடுவித்துக் கொள்க. ஐயத்திற்கோ திரிபுக்கோ ஆளாகாத வண்ணம் சிறப்பாக உனக்கு வேண்டிய ஒன்றாலே உண்மையை அறிய ஆவலாய் இரு.

# 4. சமணம்

ஜைனம் என்பது தமிழில் சமணம் என்று வழங்கப் படுகிறது. ஜைன மதத்தை ஸ்தாபனம் செய்தவர்களுக்கும் அதை முறையாக வளர்த்தவர்களுக்கும் தீர்த்தங்கரர்கள் என்று பெயர். அவர்களின் எண்ணிக்கை இருபத்தி நான்கு. அவர்களுள் ரிஷபர், அஜிதநாதர், அரிஷ்டநேமி ஆகிய மூவர் மிகப் பெருமை வாய்ந்தவர்கள். அவர்களைப் பற்றி யஜுர் வேதம் மொழிவதே அப்பழமைக்குச் சான்றாகும். மகாவீரர் என்று அழைக்கப்படும் வர்த்த மான தீர்த்தங்கரர் இருபத்தி நான்காமவர் ஆகின்றார்.

ஜைன மதத்தின் கோட்பாடுகளை முறை வகுத்து வைத்தவர் இந்த மகாவீரர். இவர் 2575 வருஷங்களுக்கு முன்பு அவதரித்தவர். ஆதலால் வயதில் இவர் புத்தருக்குச் சற்று இளையவர். ஜைன மதம் யாண்டும் வைதிக மதத் துக்குப் போட்டியாக வந்தது. அதற்கேற்ற காரணமும் உண்டு. கர்ம காண்டத்தை அடிப்படையாகக் கொண்டது வைதிக மதம். அதை ஒழித்தல் வேண்டும் என்பது ஜைன மதம். அகிம்சையை அடிப்படையாகக் கொண்டது ஜைன மதம். பிராமணீயத்தையும் புரோகிதக் கோட்பாட்டை யும் வளர்ப்பது வைதிக மதம். க்ஷத்திரிய பரம்பரையையும் தர்மத்தையும் வளர்ப்பது ஜைன மதம். தீர்த்தங்கரர்கள் இருபத்து நான்கு பேரும் க்ஷத்திரிய குலத்தில் பிறந்த வர்கள் என்று அம்மதம் பெருமை பாராட்டுகிறது. மக்கள் எல்லோரையும் சமதிருஷ்டியோடு பார்த்து அவர் களிடத்து தர்மத்தை வழங்குபவர்கள் தீர்த்தங்கரர்கள்.

ஆறு தர்சனங்களுள் நியாயம், வைசேஷிகம், சாங்கியம், யோகம் ஆகிய நான்கு தர்சனங்களை ஜைன

மதம் ஏற்றுக் கொள்கிறது. கர்மகாண்ட மயமாயுள்ள பூர்வ மீமாம்சத்தையும் ஈஸ்வரனைப் பற்றிய உத்திர மீமாம்சம் அல்லது வேதாந்தத்தையும் அது அங்கீகரிப்ப தில்லை. அதாவது வேதத்தை அது முற்றும் நிராகரிக் கிறது. ஜைன விதிப்படி பிரம்மம் என்னும் பரவஸ்துவுக்கு அவசியமில்லை.

சாங்கிய சாஸ்திரம் பகர்கிற பிரகிருதி, புருஷன் என்கிற இரண்டு தத்துவங்களே பிரபஞ்சத்துக்குப் போதிய விளக்கங்கள் ஆகின்றன. ஜீவாத்மனுக்குப் பிரகிருதியோடு கூடிய வாழ்க்கை இம்சைக்கு ஏதுவாகிறது. அகிம்சையில் ஜீவாத்மன் உறுதியாக நிலை நின்று பிரகிருதியினின்று முக்தியடைய வேண்டும். அறம் அல்லது தர்மத்தை உறுதியாகக் கடைப்பிடிப்பது முற்றிலும் அவசியம்.

இறுதியாகத் தவத்தில் தீவிரமாகப் பிரவேசிக்கும் அளவு ஜீவாத்மன் முக்திக்கு அருகதையுடையவன் ஆகிறான். அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய புருஷார்த்தங்கள் நான்கையும் ஜைனமதம் ஏற்றுக் கொள் கிறது. ஜீவாத்மன் கல், புல் நிலைகளினின்று பர்ணமித்து மேல் நிலைக்கு வந்து, மானுடனாகிய பிறகு முக்தியடை கிறான். இம்முறைகளை மட்டும் திருக்குறள் கையாள் வதால் அதை ஒரு ஜைன மத சாஸ்திரம் என்று சொல்லுவார் உளர்.

ஜைனமத அனுஷ்டானம் மூன்று முக்கியமான கோட் பாடுகளை யுடையது. அவைகளுக்கு ரத்தினத் திரையம் அல்லது மும்மணிகள் என்று பெயர். சம்யக் தரிசனம், சம்யக் ஞானம், சம்யக் சரிதம் என அவைகள் அழைக்கப் படுகின்றன. தெளிந்ததும் திண்ணியதுமான மனப் பான்மை, தத்துவத்தை உள்ளபடி அறிதல், தூய வாழ்வு என்று அம்மணிகள் பொருள் படுகின்றன.

யோக சாஸ்திரம் புகட்டுகிற இயமத்துள் உள்ள பஞ்ச சீலங்களை அல்லது ஐந்து ஒழுக்கங்களை ஜைன மதம் ஆழ்ந்து வற்புறுத்துகிறது. அவைகளுள் அகிம்சைக்கு அம்மதம் ஆழ்ந்ததும் பரந்ததுமான விளக்கம் தருகிறது. அகிம்சையில் நிலை பெறுவதற்கு ஏற்றவாறே ஆத்ம சாதகன் சாதனத்தில் மேல் ஏறுகிறான். இல்வாழ்க்கையில் இருப்பவர்கள் விரைவில் துறவறம் புகவேண்டுமென்று ஜைன மதம் வற்புறுத்துகிறது. துறவறத்தில் சுவேதாம் பரர்கள் என்றும் திகம்பரர்கள் என்றும் இரண்டு பிரிவினர்கள் இருக்கிறார்கள். முந்தையர்கள் வெள்ளை வஸ்திரம் அணிந்தவர்களாகவும் பிந்தியவர்கள் நிர்வாணி களாகவும் இருப்பார்கள்.

ஜீவாத்மன் சித் சொரூபம் என்பதும், ஆனந்த சொரூபம் என்பதும் ஜைனமதக் கொள்கை. பிரகிருதியா லாகிய தேகத்தில் ஜீவன் பொருந்தியிருப்பதால் ஜீவாத்மன் தனது நிஜ சொரூபத்தை முற்றும் உணர்வதில்லை. தவத் தால் உடல் உணர்வை வெல்லும் அளவு ஆத்ம போதம் மேலோங்குகிறது. உடலைப் பட்டினி போட்டும் துன்புறுத்தியும் ஆத்ம தியானம் பண்ணும் அளவு சாதகன் விரைந்து மேல் நிலைக்குப் போகிறான். உடல் தளையி லிருந்து முற்றும் விடுபடுவது மோட்சம், சுயப் பிரயத் தனத்தால் தபஸ்வி முக்த புருஷன் ஆகிறான்

அறம் அல்லது தர்மம் எல்லா மதங்களுக்கும் பொது வானதே. அதை ஜைனர்கள் அனுஷ்டிக்கும் முறைக்கு ஜினதர்மம் என்று பெயர். தர்மம், ரத்தினத் திரயம், தபஸ் ஆகியவைகளைத் தீவிரமாக ஒழுகுவதற்கு ஏற்ப மனிதன் தர்மத்தையும் சம்சார சொரூபமாயிருக்கிற பிரகிருதியையும் வெல்லுகிறான். அங்ஙனம் மேல்நிலை அடைகின்றவர்களுக்கு அருகதர்கள் என்று பெயர். தகுதி வாய்ந்தவர்கள் என்பது அதன் பொருள். பின்பு தகுதியோ ஐந்து படித்தரங்களில் வைத்துப் பகரப்படுகிறது. ஐந்து

படித்தரங்களில் உள்ள பெருமக்கள் ஐந்து வகையினர்க்கும் பஞ்ச பரமேஷ்டிகள் என்று பெயர். அவர்களுடைய நிலைகளின் படித்தரங்கள் வருமாறு :—

1. சாது பரமேஷ்டி
2. உபாத்யாய பரமேஷ்டி
3. ஆசாரிய பரமேஷ்டி
4. அருகத தீர்த்தங்கர பரமேஷ்டி
5. சித்த பரமேஷ்டி

## புத்த சமண சமயங்கள் குன்றியதன் காரணங்கள்

புத்த, சமண சமயங்கள் மன்னர்களுடைய ஆதரவைப் பெற்றிருந்த காலம் வரை ஓங்கி வளர்ந்தன. அரசர்களின் செல்வாக்கை இழந்த பிறகு அவை சிறுகச் சிறுகக் குன்றத் தொடங்கின.

சமண சமயத்தினர் வற்புறுத்திய உயிர்வதை செய்யாமை, கொல்லாமை என்னும் கொள்கை செயல் முறைக்குப் பொருத்தமில்லாதவையாயின; சமணர் கொள்கைப்படி தாவரங்கள், உலோகங்கள், தண்ணீர் முதலியவைகளும் உயிர்களே. நிலத்தை உழுது பயிரிடு தலும், தண்ணீர் பாய்ச்சுதலும், உலோகங்களை உருக்கி அடித்தலும், காய்கறி கனிகள் உண்பதும், இதன்படி தவறாக முடியுமாகையால் இவை பொருந்தாக் கொள்கைகள் என மக்களால் கைவிடப்பட்டன.

சாதிப் பிரிவுகள், கடவுள் கொள்கை, உருவ வழிபாடு முதலியவை இச்சமயங்களால் முதலில் ஏற்றுக் கொள்ளப் படவில்லை. ஆதலால் பிற்காலத்தில் கனிஷ்கர், புத்த

சமயத்தில் புத்தர் உருவச் சிலைகள் வைத்து வணங்கும் முறையைப் புகுத்தினார். இதனால் புத்த சமயம் ஹீனயானம், மகாயானம் என இரண்டாகப் பிரிந்தது. இதன் பயனாகப் புத்த சமயத்தில் புத்தருடைய உருவச் சிலையையும், போதிசத்துவர்களின் உருவச்சிலையையும் வைத்து வணங்கும் வழக்கம் தோன்றிப் பரவி விட்டது. இதுபோலச் சமண சமயத்திலும் தீர்த்தங்கரர்களின் உருவச் சிலைகளை வணங்கும் வழக்கம் நுழைந்துவிட்டது. இவ்விரு சமயத்தவருள்ளும் பல பிரிவுகளும் தோன்றின.

புத்த சமண சமயங்களில் காணப்பட்ட சிறந்த கொள்கைகளை இந்து மதம் ஏற்றுத் தன் மயமாக்கிக் கொண்டது. இக்காரணங்களால் காலத்திற்கேற்பச் சீர்திருந்திய இந்து மதத்திற்கும் பிற்கால புத்த-சமண சமயங்களுக்கிடையே வேறுபாடு மிகுந்திருப்பதாக மக்கள் கருதவில்லை. ஆதலின் அச்சமயங்கள் சிறப்பிழந்து குன்றின.

ஹூணர்களும் ஆப்கானியர்களும் நம் நாட்டின் மீது படையெடுத்து வந்தபோது புத்த சமண மடங்களும் நூலகங்களும், அழிந்து போயின. இவை தவிர நாயன்மார்கள், ஆழ்வார்கள், சமயாச்சாரியர்கள் ஆகியோர் இவ்விரு சமயங்களுக்கும் எதிராக மேற்கொண்ட நடவடிக்கைகளால் இவ்விரண்டும் சிறப்புக் குன்றிப் பொலிவிழந்தன.

# தெய்வீக சபைகளும் சேவை நிலையங்களும்

முன் அத்தியாயங்களில் காஞ்சி மாநகரின் சிறப்புக் களைப் பற்றி இலக்கியங்கள், புராணங்கள், இதிகாசங்கள், வரலாற்றுக் குறிப்புக்கள் மற்றும் சிலாசாசனங்கள் கூறிய வற்றைப் பார்த்தோம் இப்பகுதியில் ஆட்சி முறை, நிர்வாகம், பொருளாதார மேம்பாடு, மக்கள் பண்பாடு, வழிபாட்டு முறைகள், கல்வி மேம்பாடு ஆகியவற்றைப் பற்றிச் சிறிது காண்போம்.

முன்பு செங்கற்பட்டு மாவட்டத்தின் தலைநகராகச் சைதாப்பேட்டை இருந்து வந்தது. இருபது ஆண்டுகளுக்கு முன் காஞ்சிபுரம், மாவட்டத்தின் தலைநகராக மாற்றப் பட்டது. ஆகவே மாவட்ட ஆட்சியாளர் தலைமை நிலையமும் அது சம்பந்தப்பட்ட அலுவலங்களும் இப்போது காஞ்சிபுரத்தில் இயங்கி வருகின்றன. அதன் விளைவாக நகரத்தில் பல புதிய கட்டிடங்களும் குடியிருப்புகளும் உருவாகியுள்ளன. காஞ்சி மாநகர் தற்போது எல்லாத் துறைகளிலும் முன்னேறி வருகிறது. இப்போது செங்கற்பட்டு மாவட்டம், செங்கை அண்ணா மாவட்டம் என்று பெயர் மாற்றம் செய்யப்பட்டிருக்கிறது.

## நகராட்சி

காஞ்சி மாநகர நகராட்சி பொருளாதார நிலையிலும் நிர்வாகத் திறனிலும் பெயர் பெற்றது. அது தன்னுடைய சேவையைத் திறம்பட செய்து வருகிறது. அண்ணா கலை

அரங்கத்தைத் திறம்பட நிர்வகித்து வருகிறது. அந்தக் கலையரங்கம் சமூகக் கூடமாக நன்றாகச் சேவை செய்து வருகிறது.

## தேசியமயமாக்கப்பட்ட வங்கிகள்

நகர மக்களுக்கும் வியாபாரிகளுக்கும் இவைகள் பேருதவியாக இருக்கின்றன. பொருளாதார மேம்பாட்டிற்கு இவைகள் அரும் பணியாற்றி வருகின்றன.

## பட்டு கூட்டுறவுச் சங்கங்கள்

காஞ்சிபுரம் பட்டுச் சேலைகள் உலகப் புகழ் பெற்றவை. அவைகளின் தரம் குறையாமலும், சரியான விலைகளில் கிடைக்குமாறும் பட்டு கூட்டுறவுச் சங்கங்கள் உதவுகின்றன. மக்களின் நம்பிக்கைக்குப் பாத்திரமாக இவை உரிய சேவை செய்கின்றன.

## கல்வி நிலையங்கள்

பச்சையப்பன் ஆடவர் கல்லூரி, பச்சையப்பன் மகளிர் கல்லூரி, பச்சையப்பன் மேல்நிலைப் பள்ளி, ஆண்டர்சன் மேல்நிலைப்பள்ளி, நகராட்சி மேல்நிலை, உயர்நிலைப் பள்ளிகள் மற்றும் தனியார் நடத்தும் உயர்நிலைப் பள்ளிகள், அரசாங்க பெண்கள் மேல்நிலைப் பள்ளிகள் போன்றவை அரும் பணியாற்றி வருகின்றன. பக்தவத்சலம் பாலிடெக்னிக்கும் புதிதாய் ஆரம்பிக்கப் பட்டுள்ள பொறியியல் கல்லூரியும் தொழிற் கல்விப் பணியை ஆற்றி வருகின்றன.

## கூட்டுறவு ஸ்தாபனங்கள்

பெரிய காஞ்சிபுரம் கோவாபரேடிவ் டவுன் பாங்கி 1904-இல் ஆரம்பிக்கப்பட்டது, மாகாணத்திலேயே இது 3-வது சங்கம். வையாவூரில் கூட்டுறவு நூற்பு ஆலை உள்ளது. கூட்டுறவு அச்சகம், கூட்டுறவு பயிற்சிப் பள்ளி, கூட்டுறவு சென்ட்ரல் பாங்கி ஆகியவை சிறந்த சேவைக்குப் பெயர் பெற்றவை.

## மருத்துவ வசதிகள்

மாவட்ட மருத்துவ நிலையமும், காரப்பேட்டையில் அண்ணா புற்றுநோய் ஆஸ்பத்திரியும் நல்லசேவை செய்து வருகின்றன.

### போக்குவரத்து சாதனங்கள்

காஞ்சிபுரத்திற்குச் சுமார் 150 ஆண்டுகளாக ரெயில் வசதி உண்டு. அரசாங்க போக்குவரத்துக் கழகங்களின் பேருந்துகளும் தனியார் பேருந்துகளும் அரும் பணியாற்றி வருகின்றன.

### மன்றங்களும் சேவை நிலையங்களும்

பழங்காலந்தொட்டு சைவ வைணவ கோயில்களில் திருவிழாக் காலங்களில் சமயச் சொற்பொழிவுகள் நடைபெற்று வருகின்றன. தெய்வீக சபைகள் அப்பணிகளை ஏற்றுச் செய்து வருகின்றன. இலக்கிய சம்பந்தமான மன்றங்களும் மற்றும் சில சேவை நிலையங்களும் இப்பணியில் ஈடுபட்டு வருகின்றன. அவைகளுள் சிலவற்றைப் பற்றிக் காண்போம்.

### 1. தஞ்சை தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் கிளையாகிய தத்துவ மையம்

இந்த ஸ்தாபனம் எட்டு ஆண்டுகளுக்கு முன்பு இங்கு நிறுவப்பட்டது. இந்நிலையத்தார் சைவம், வைணவம், பௌத்தம் முதலிய சமயத் தத்துவங்களைப் பற்றிக் கருத்தரங்குகளில் பங்கு கொண்டு ஆராய்ச்சி முடிவுகளை நூல் வடிவாக வெளியிடுகிறார்கள். இப்போது மாதந்தோறும் பச்சையப்பன் மேல்நிலைப்பள்ளி அரங்கத்தில் கூட்டங்களை நடத்துகிறார்கள். 1-11-90-இல் இந்த மையம் தஞ்சைக்கு மாற்றப்பட்டது.

### 2. இராமகிருஷ்ண மடம்

இராம கிருஷ்ண பரமஹம்சர் மற்றும் விவேகாநந்தர் மிஷன் சார்பாக இங்கு அதன் கிளை ஸ்தாபனம்

நெல்லுக்காரத் தெருவில் இயங்கி வருகிறது. மடத்தைச் சேர்ந்த சுவாமிகள் நிர்வாகத்தை நன்றாய் நடத்தி வருகிறார். இதில் வாசகசாலையும் நூலகமும் சிறப்பாகப் பணியாற்றுகின்றன. மாடியில் வழிபாட்டு நிலையமும், சொற்பொழிவு கூடமும் வசதியாக உள்ளன. அவ்வப் போது சமயச் சொற்பொழிவுகள் நடைபெறுகின்றன.

### 3. சிவனடியார் திருக்கூட்டம்

இது அங்கத்தினர்களைப் பாடல் பெற்ற தலங்களுக்கு அழைத்துச் சென்று சிவத்தொண்டு செய்து வருகிறது. ஆண்டுதோறும் வடவண்டை ராஜவீதியிலுள்ள திருநீலகண்ட நாயனார் சத்திரத்தில் ஆண்டுவிழாவை நடத்துகிறது. இதன் தலைவர் உயர்திரு நல்லி சின்னசாமி செட்டியார் அவர்கள்.

### 4. கம்பன் கழகம்

சென்ற பத்து ஆண்டுகளாக இக்கழகம் ஆற்றிவரும் நற்பணி பாராட்டுக்குரியது. இக்கழகம் மாதந்தோறும் இரண்டாவது சனிக் கிழமைகளில் கம்பராமாயண சொற் பொழிவுகளை, பேரறிஞர்களைக் கொண்டு நடத்தி வருகிறது. முதலாவது மூன்றாவது ஞாயிற்றுக் கிழமை களில் கம்பராமாயண விரிவுரைகள் நடத்தப்படுகின்றன. ஆண்டுதோறும் ஏப்ரல் மாதம் இதன் ஆண்டு விழா கோலாகலமாக இரண்டு நாட்கள் நடைபெறுகிறது. சொற்பொழிவுகள், பட்டிமண்டபங்கள், கவியரங்குகள், கருத்தரங்குகள் முதலியவை நடைபெறுகின்றன. இவை களில் பல அறிஞர்கள் பங்கு கொள்கிறார்கள். செல்வாக்கு உள்ள பதினொருவர் காரிய கமிட்டியில் அங்கம் வகிக் கின்றனர். அதன் தலைவர் தொழிலதிபர் திருவாளர் K. K நடராஜன் அவர்கள்.

### 5. காஞ்சி திரு. வி. க. மன்றம்

இந்த மன்றம் மாதந்தோறும் கிருத்திகையின்போது குமர கோட்டத்தில் பல அறிஞர்களைக் கொண்டு சமயச்

சொற்பொழிவுகளையும் இலக்கிய நிகழ்ச்சிகளையும் நடத்தி வருகிறது. இதுவரை 250-க்கு மேற்பட்ட தொடர் கூட்டங்களை அது நடத்தியிருக்கிறது. அதன் செயலாளர் திருவாளர் புலவர் த. கு. பத்மநாபன் அவர்கள் இப்பணியை விடாமுயற்சியுடன் செய்து வருகிறார்.

### 6. ஸ்ரீ நாராயண சேவாசிரமம்

இது ஓர் ஆயுர்வேத மருத்துவ நிலையம். ஆழ்வார் பங்களா என்று மக்கள் அன்புடன் விரும்பிச் செல்லும் சேவை நிலையம். கேரள அன்பர்களால் நடத்தப்படு கிறது. ஆண்டு தோறும் அதன் ஸ்தாபகர் ஆத்மானந்தர் குருபூஜை நடக்கிறது. அப்போது சமயச் சொற் பொழிவுகள் நடைபெறுகின்றன. 1970-இல் நினைவு மலர் ஒன்றையும் வெளியிட்டுள்ளார்கள்.

### 7. ஞானப்பிரகாசர் மடம்

இது சைவ வேளாளர் மடம். நிமந்தகாரத் தெருவில் உள்ளது. அமைதியாகத் தன் பணிகளை ஆற்றி வருகிறது. இதற்குப் போதுமான நிலபுலன்கள் உள்ளன. நித்திய நைமித்திய வழிபாடுகள் நடைபெறுகின்றன. முன்பு தவத்திரு மாணிக்கவாசக சுவாமிகள் அருளாட்சி நடத்தி னார்கள். அவருடைய சமாதி மடத்து வளாகத்திலேயே உள்ளது. இப்போது அருளாட்சி செல்து வரும் மடாதிபதி கோவை நகரைச் சேர்ந்தவர். சைவ சம்பந்தமான நிகழ்ச்சிகளில் பங்கு கொண்டு நல்லுரை வழங்கி வருகிறார்கள். மடத்தில் அவ்வப்போது பெரிய புராண சொற்பொழிவுகளும் சிவஞான போதம் மற்றும் சிவஞான சித்தியார் விரிவுரைகளும் அறிஞர்களைக் கொண்டு நடத்தப்படுகின்றன.

### 8. யாதவாள் சத்திரம்

இந்நகரில் ஒவ்வோர் இனத்தாரும் தங்களுக்கென்று சத்திரங்களை அமைத்து நிர்வகித்து வருகிறார்கள். கோயில்களில் பிரம்மோத்சவங்கள் நடைபெறும் போது

அந்தந்த இனத்தார் அவைகளில் வந்து தங்குகிறார்கள். அதுபோல் யாதவப் பெருமக்கள் தங்களுக்கென்று பெரிய காஞ்சிபுரத்தில் ஒன்றும் சின்ன காஞ்சிபுரத்தில் ஒன்று மாக இரண்டு சத்திரங்களை வைத்துப் பரிபாலித்து வருகிறார்கள். திருமணங்களுக்கு இவைகளை வாடகைக்கும் விடுகிறார்கள். இதில் சிறப்பு அம்சம் என்னவென்றால் வைகாசி மாதம் வரதராஜப்பெருமாள் ஆறாம் திருவிழா அன்று சின்ன காஞ்சிபுரம் சத்திரத்தில் வைஷ்ணவ மாநாடு ஒவ்வோர் ஆண்டும் நடைபெறு கிறது. குல முன்னோர்கள் அக்கறையாய் இதில் பங்கு கொள்கிறார்கள். இதற்குத் தனிக் கமிட்டி இருக்கிறது. திருவாளர் எ. மு. பெருமாள் அவர்கள் இதில் அதிக ஈடுபாடு கொண்டுள்ளார். இவர் கம்பன் கழகத்திலும் அங்கம் வகிக்கிறார். இவர்கள் 1975-இல் வெளியிட்ட விழாமலர் பொன்மலர் போல் போற்றத்தக்கது.

## 9. பாரதி இளைஞர் மன்றம்

இது சங்கர மடத்தின் ஆதரவு பெற்றது; சின்ன காஞ்சிபுரத்தில் இருக்கிறது. அவ்வப்போது இலக்கிய நிகழ்ச்சிகளை நடத்துகிறது. அனாதை ஆஸ்ரமம் மற்றும் பெண்கள் உயர்நிலைப்பள்ளியில் கல்வி பயிலும் மாணவி களுக்குப் புத்தகங்கள், குறிப்புப் புத்தகங்கள் முதலிய வற்றை இலவசமாய் வழங்குகிறது. முதன்மையாகத் தேர்ச்சி பெற்றவர்களுக்குப் பரிசுகள் வழங்கிப் பாராட்டு கிறது. இலக்கிய அறிஞர்களைப் பாராட்டி, சன்மானம் வழங்கி வருகிறது. பட்டி மன்றங்கள் போன்ற நிகழ்ச்சி களை அவ்வப்போது நடத்துகிறது. நான் அதுவரை 60 நூல்களை எழுதி வெளியிட்டிருந்தேன். அதற்காக ஒரு பாராட்டுக் கூட்டம் நடத்தி என்னைக் கௌரவித்தார்கள்.

சென்ற 7-5-88-இல் என்னைப் பாராட்டி 'இலக்கிய ரத்னா' என்ற பட்டத்தையும் விருதையும் வழங்கி னார்கள்.

### 10. நால்வர் நற்பணி மன்றம்

இது கடைவீதியிலுள்ள முத்தீஸ்வரர் கோயிலில் நான்கு சைவ சமயாச்சாரியார்களின் குருபூஜையை நடத்தி வருகிறது. தேவார திருவாசகப் பாடல்களை அக் கோயில் சுவர்களில் அழகாக எழுதி வைத்திருக்கிறார்கள். இது ஒரு நிரந்தரமான சைவப்பணி. அவ்வப்போது சிறப்பு நிகழ்ச்சிகளையும் நடத்துகிறார்கள். சிவத்தலங் களுக்கு அடியார்களை அழைத்துச் செல்கிறார்கள்.

### 11. காஞ்சிபுரம் தமிழ்ச் சங்கம்

தமிழறிஞர் திருவாளர் இராம சுப்பிரமணியம் அவர் களின் பெரு முயற்சியால் இச்சங்கம் நடைபெற்று வருகிறது இவர் திருத்தணி முருகன், காஞ்சிபுரம் குமரகோட்டத்து முருகன் ஆகியோர் மீது துதிப் பாடல் களை எழுதி இலவசமாக நூல்களை வெளியீடு செய்து உள்ளார். முத்தீஸ்வரர் கோவிலில் இச்சங்கத்தின் கூட்டங்கள் நடைபெறுகின்றன வளளலார் வழிபாடும் இதில் இடம் பெறுகிறது

### 12 நண்பர்கள் இலக்கிய வட்டம்

காஞ்சி கம்பன் கழகச் செயலாளர் திரு. முத்து இராம மூர்த்தி அவர்கள் இந்த நிறுவனத்தின் அமைப்பாளர் கவிதை மற்றும் கட்டுரை எழுதுவதற்கு விரும்பும் இளைஞர்களுக்குப் போதுமான இலக்கண இலக்கிய பயிற்சி வகுப்புகளை இதன் மூலம் நடத்தி வருகிறார். முயற்சியுள்ள இளைஞர்களின் இலக்கிய உணர்வுகளை வெளிப்படுத்த இந்த் அமைப்பு பெரிதும் துணை செய் கிறது. சங்கராச்சாரிய சுவாமிகளின் அருளாசியுடன் இவ்வமைப்பு துவங்கியது. அருமையாகச் செயல்பட்டு வருகிறது.

### 13 கவிதைச் சோலை (இளைஞர் மன்றம்)

கவிதை எழுதுவதில் ஆர்வமுள்ள பல இளைஞர்கள் இந்த ஸ்தாபனத்தில் சேர்ந்துள்ளனர். இந்த ஸ்தாப-

னத்தின் ஆண்டுவிழா சென்ற ஆண்டு மிகச் சிறப்பாக நடைபெற்றது. இதன் அமைப்பாளர் திரு. அமீர்பாட்சா, இப்போது ''அறிவு'' என்ற ஓர் இலக்கிய மாத இதழை ஆரம்பித்து நடத்தி வருகிறார். இவருக்கு உதவியாக ஆசிரியர் குழு ஒன்று திறம்பட செயலாற்றுகிறது.

**14. முத்தமிழ் மன்றம்**

இயல், இசை, நாடகம் ஆகிய மூன்றிலும் வல்ல பல தமிழ் அறிஞர்கள் இதில் பங்கு கொண்டிருக்கிறார்கள். புலவர் கணேசன் அவர்களும் புலவர் இளங்கோ அவர் களும் இதில் முக்கிய பங்கு வகிக்கிறார்கள். நாடகங்களை இவர்களே எழுதி நடிக்கிறார்கள். அவைகள் மிகவும் அற்புதமாக உள்ளன.

**15. ஒட்டக்கூத்தர் கழகம்**

இதன் தலைவர் திரு. A. L. சுந்தரராஜ் அவர்கள் சிறந்த தமிழன்பர். ஜவுளி வியாபாரம். இக்கழகம் அமைதியாகத் தம் பணிகளைச் செய்து வருகிறது. தமிழன்பர்களைப் பாராட்டிச் சிறப்புச் செய்வதில் இக் கழகம் அக்கரை காட்டுகிறது. அவ்வப்போது சொற் பொழிவுகளை நடத்தி வருகிறது.

**16. பொது**

காஞ்சி மாநகர் கோவில் நகரம் என்ற பாராட்டைப் பெற்றது. அதுபோல் இன்னும் பல சமய மன்றங்களும் இங்கு உள்ளன. இச்சிறு நூலில் அவைகள் எல்லாவற்றை யும் பற்றி எழுத இயலவில்லை என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறோம். நகர மக்களுக்குப் பொழுது போக்கு நிலையங்களாகத் திரையரங்குகளும் மனமகிழ் மன்றங்களும் பல உள்ளன. இது புண்ணிய ஸ்தலமாக கருதப்படுவதால் இந்தலத்தில் திருமணங்கள் நடத்துவது நல்லது என்று மக்கள் நம்புகிறார்கள். ஆகவே ஒரு சில மாதங்களைத் தவிர (ஆடி, புரட்டாசி, மார்கழி, மாசி) மற்ற எல்லா மாதங்களிலும் இந்நகரில் திருமணங்கள்

நடந்து கொண்டேயிருக்கும். அதற்கு ஏற்றாற்போல் இந்நகரில் பல திருமணக் கூடங்கள் உள்ளன. நவீன வசதிகளோடும கூடிய சில கூடங்களுக்குக் கட்டணம் சற்று அதிகம். அவ்வளவுதான். ஒரே இடத்தில் அத்தனை வசதிகளும் இலகுவாகக் கிடைக்கின்றன.

தபால், தந்தி, தொலைபேசி வசதிகள் இந்நகருக்குச் சிறப்பாக அமைந்துள்ளன. தலைமை தபால் நிலையம் பின்கோட் 631 501; பெரிய காஞ்சிபுரம் 631 502; சின்ன காஞ்சிபுரம் 631 503. நகரைச் சுற்றி பல புதிய குடியிருப்புகள் நாளும் வளர்ந்துகொண்டே யிருக்கின்றன. புதிய மக்கள் தொகை கணக்கெடுப்பில் இந்நகரின் மக்கள் தொகை மூன்று லட்சத்தை எட்டிவிடும்போல தெரிகிறது.

மாதா கோயில்களும் மசூதிகளும் அமைதியாகத் தங்கள் வழிபாடுகளை நடத்தி வருகின்றன. கிறிஸ்துவர் களும் முஸ்லீம்களும் இந்நகரில் எவ்வித மதவேறுபாடு களும் இன்றி அமைதியாய் வாழ்ந்து வருகிறார்கள்.

வானொலி மற்றும் தொலைக்காட்சி நிகழ்ச்சிகளில் பங்கு கொள்ளும் இசைக் கலைஞர்களும் இந்நகரில் உள்ளனர்.

1. திரு. எல்லப்பா அவர்கள்- நாதஸ்வர இசைக்கலைஞர்.
2. திரு. தாமோதரன் அவர்கள்- ஆழ்வார்கள் பாசுரங்கள் - இசைக்கலைஞர்

இவர்களுடைய காசட்டுகளும் (ஒலி நாடாக்களும்) விற்பனையாகின்றன.

காலஞ்சென்ற திரு சிற்சபை அவர்கள் இந்நகரில் சித்த மருத்துவமனை ஒன்றை நன்கு நடத்தி வந்தார், இப்போது அவருடைய சந்ததியார் அந்நற்பணியைச் செய்து வருகிறார்கள்.

கம்பன் கழகப் பொருளாளர் உயர்திரு டாக்டர் C. K. இராமன் அவர்கள் ''சிந்தனா'' என்ற அமைப்பை நடத்தி வருகிறார். ஒவ்வொரு மாதமும் முதல் சனிக் கிழமைகளில் சமய சம்பந்தமான கருத்தரங்குகள் அதில் நடைபெறு கின்றன. அவர் உலகப் பொருளாதார ஸ்தாபனத்தில் அங்கம் வகிக்கிறார்.